## உங்கள் அழகே உங்களுக்கு ஆபரணம்...
## உங்கள் முக சருமத்தை மென்மையாயும் அழகாயும் வைக்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

## உபயோகியுங்கள்

மிருதுவானதும், குளுமையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்பு அளிக்கிறது. அதை அழகுடனும், இளமையுடனும் வைக்கும்! இது எண்ணெய்ப் பசையற்றது. மற்றும் முகத்தில் தடவிய சிறிதே விநாடிகளில் மறைந்து விடுகிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.



### சருமத்தை சுத்திகரிக்கும் அற்புதமான க்ரீம்

தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை உங்கள் முகத்தில் தடவுங்கள். அது சருமத்தை சுத்தம் செய்து, சருமம் மிருதுத்தன்மையற்றுப் போவதையும், சருமத்துவாரங்கள் வரண்டு போவதையும் தடுக்கிறது. அன்றாடம் பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் உபயோகித்து, உங்கள் அழகுக்கு தகுந்த பாதுகாப்பு அளியுங்கள்.




### இலவசப் புத்தகம்

"LOVELIER WITH POND'S" என்ற எமது இலவச புத்தகத்தை வரவழையுங்கள். இந்த அழகு பராமரிப்புப்பற்றி உபயோகமான குறிப்புகள் அடங்கியுள்ளன. பி. ஓ. பாக்ஸ் 1613, டிபார்ட்மெண்ட் செ. 25V, பம்பாய் 1 என்ற விலாசத்திற்கு 20 நயா பைசா ஸ்டாம்புடன் எழுதவும்.

செஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)

கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




உங்கள்
குழந்தைக்கும் மற்றும்
எல்லாக் குழந்தைகளின்
ஆரோக்கியத்துக்காக
எங்கள் காணிக்கை

# ஸ்பென்ஸர்ஸ்
# கிரைப் ஸிரப்

குழந்தைகளின் எல்லா வயிற்றுக்
கோளாறுகளுக்கும் சிறந்தது.

சென்னை (புதுச்சேரி உட்பட) கேரளா மற்றும் மைசூர் ராஜ்யங்களுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:

**தி டிரக் ஹவுஸ் - தேர்முட்டி, சேலம்-1**

(மொத்த & சில்லரை கெமிஸ்ட்ஸ் & டிரக்கிஸ்ட்ஸ்)

---

# கருமையை வளர்க்கும் கூந்தல் தைலம்

## வாக்குறுதியைக் காக்கிறது!




கருமையை வளர்ப்பதில் நம்பகமானதும் சிறப்பாகக் கூந்தலைச் சீவி முடிவதற்கும் உகந்த கூந்தல் தைலம் வாஸ்மால். கூந்தல் சுகாதாரத்துக்கு இன்றியமையாத எல்லா அம்சங்களும் ஒருங்கே கொண்டது.

மற்ற தைலங்களைப்போல் வாஸ்மாலை உபயோகிக்கலாம். அல்லது காலை ஸ்நானத்துக்குப் பிறகும் தலையில் தடவலாம். வாஸ்மாலை நன்றாக மயிர்க்கால்கள் சென்றடையும் வரை தேய்த்து, தங்கள் கூந்தலில் பளபளப்பான கருமை படர்ந்து வருவதைக் காணலாம். மற்ற சிறந்த கூந்தல் தைலத்திற்காகும் செலவைவிட வாஸ்மாலுக்கு அதிக விலை ஒன்றும் கொடுக்க வேண்டியதில்லை.

வாஸ்மால் கூந்தல் தைலம் 5 அவுன்ஸ் பாட்டில் ரூ. 2-00 1 பவுண்டு பாட்டில் ரூ. 4-75 வாஸ்மால் பொமேட் ரூ. 2.50. உள்ளூர் வரிகள் தனி

**Vasmol HAIR DARKENER**

எல்லா பிரபல ஸ்டோர்களிலும் மோசடி செய்ய முடியாத மூடியுடன் கிடைக்கும்

**ஹைஜினிக் ரிஸர்ச் இன்ஸ்டிடியூட்**
பி. ஒ. பாக்ஸ் 1192, பம்பாய்-1

விநியோகஸ்தர்கள்: ஆர். எல். கௌடர் & கோ., 59, பந்தர் தெரு, சென்னை



மலர் 18 இதழ் 18

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

விளம்பி ௵ கார்த்திகை 15

# நில உச்ச வரம்புப் பிரச்னை

சென்ற வாரம் நில ஒப்பந்தங்களைப் பற்றி ராஜாஜியின் கருத்தை வெளியிட்டிருந்தோம்.

அதைவிட ஒரு முக்கியமான பிரச்னை "நில உச்ச வரம்பு." இதைப் பற்றித் தான் காங்கிரஸ் கூட்டங்களிலும், பத்திரிகைகளிலும் மேடைகளிலும் இப்பொழுதெல்லாம் அதிகமாக அடிபட்டு வருகிறது.

இவை யெல்லாம் எதற்குத் தெரியுமா? நாம் 'சோஷலிஸ பாணி சமுதாயம்' ஏற்படுத்துவதாகத் திட்டம் வகுத்திருக்கிறோமல்லவா? எல்லாரையும் சம அந்தஸ்துள்ளவர்களாக்கிவிட வேண்டும் என்ற குறிக்கோள் கொண்டிருக்கிறோமல்லவா? பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை அகற்றிவிடத் திட்டமிட்டிருப்பதாகச் சொல்லிக் கொள்கிறோமல்லவா? அதைக் காரியாம்சத்தில் நிறைவேற்றத்தான் இந்தக் கோஷங்கள் என்று சொல்லப்படுகிறது.

உண்மையில் "எல்லாரும் சமம் என்னும் காலம் வந்தது" என்று பாரதியார் எந்த லட்சிய காலத்தைக் கனவு கண்டாரோ, அந்தக் காலத்தை நனவாக்க இம்முயற்சி என்றால் வரவேற்கலாம். ஆனால் இன்று இக்கோஷமிடுபவர்கள் யாரும் அந்த உன்னதமான லட்சியத்தைக் கொண்டு கோஷிக்கவில்லை. அதற்கு மாறாகப் பொறாமையின் வசப்பட்டுக் கோஷிக்கிறார்கள். இதைச் சொல்ல நமக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் இந்த உண்மையை யாராகிலும் சொல்லித்தானே ஆகவேண்டும்?

இப்படிப் பொறாமை காரணமாக எழுந்த கூச்சல் பொறாமையைத்தான் நாட்டில் விளைவிக்கிறது. வினை விதைத்தவன் வினை அறுப்பான் என்பது போல் நாடெங்கும் பொறாமையுணர்ச்சியைத்தான் பரப்பியிருக்கிறது. எள்ளத்தனையும் உணவு உற்பத்தியைப் பெருக்கவில்லை.

ஒரு பயனும் விளையவில்லை என்று தெரிந்தும் காங்கிரஸ் கட்சி மீண்டும் மீண்டும் இந்தக் கோஷத்தைக் கிளப்புவானேன் என்று கேட்கலாம். அதற்குக் காரணம், தேர்தலில் காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சியினுடனும், சோஷலிஸ்ட் கட்சியினுடனும் போட்டி போடவேண்டியிருக்கிறது: இந்த இரண்டு கட்சிகளும் தாங்கள் பதவிக்கு வந்தால் "நிலமில்லாதவர்களுக்கு நிலம் தருகிறோம்" என்று கோஷமிடுவதால், காங்கிரசும் அதே கோஷத்தைக் கிளப்ப வேண்டியிருக்கிறது. இந்தக் கோஷத்தினால் "வோட்டுப் பயிர்" நன்றாக விளைந்திருக்கிறது! ஆனால் விவசாயம் பாழ்பட்டுப் போய் விட்டது.

குதிரைப் பந்தயம் என்றால் குதிரைகள் பந்தயப் பாதையில்தான் ஓடும். ஒரு வரம்புக்குள்தான் ஓடும். ஆனால் தேர்தல் பந்தயத்தில் இந்தக் கட்சிகள் விவசாயம் என்னும் பூமிமீதெல்லாம் ஓடி, துகைத்துப் பாழ்படுத்தியிருக்கின்றன. விவசாயத் தொழிலில் ஈடுபடலாம் என்ற ஆசையை, அக்கறையை அழித்திருக்கிறது இந்தப் பந்தய ஓட்டம். இது மிகவும் பரிதாபமான நிலைமை!

இதன் விளைவாக இன்று யாருக்குமே விவசாயம் என்னும் புனிதத் தொழிலில் ஈடுபட உற்சாகமே இல்லை. நமது நாட்டில் எவ்வளவோ தொழில்கள் அபிவிருத்தியடைந்திருந்த போதிலும், விவசாயம் மிகவும் புனிதமான தொழில் என்று கருதி மக்கள் பெரிதும் மதித்து வந்திருக்கிறார்கள். இப்பொழுது விவசாயம் என்றால் மக்கள் பயப்படுகிறார்கள். விவசாயத் துறையில், நியாயம் நேர்மைக்குப் பதில் பொறாமை

புகுந்து விட்டது. நம் நாட்டில் பெருவாரியான மக்கள் விவசாயத்தை நம்பி வாழ்பவர்கள். அவர்கள் உள்ளங்களில் நியாய உணர்ச்சிக்குப் பதில் பொறாமை உணர்ச்சி புகுந்து விட்டால் ஜனநாயக ஆட்சி பயங்கர உருவம் எடுத்து விடும்.

பெருவாரியான வோட்டுக்கள் பெற்ற மெஜாரிட்டி கட்சி ஆட்சிக்கு வருவதாலேயே ஜனநாயக ஆட்சி நல்ல ஆட்சி ஆவதில்லை. ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட தலைவர்களின் நற்குணத்தையும் தீய குணத்தையும் பொறுத்தே ஆட்சியும் நல்ல ஆட்சியாகவோ, தீய ஆட்சியாகவோ அமைகிறது.

* * *

இன்று அரசாங்கம் நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறது. இதற்குப் பொறாமை உணர்ச்சியோ, வோட்டு வேட்டையோதான் காரணம் அல்லவெனில் நிலமில்லாத விவசாயிக்கு நிலமளிக்கவே, அவனுக்கு நிலத்தில் வேலை செய்ய ஊக்கமளிக்கவே இந்தச் சட்டம் கொண்டு வருவதாக இருக்க வேண்டும். அப்படியானால் இந்த லட்சியத்தை எப்படி அடைவது? நிலமுடையவனுக்கு உச்ச வரம்பு கட்டி விட்டால் மட்டும் நிலமில்லாதவனுக்கு நிலம் கிடைத்து விடுமா? நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து உச்ச வரம்புக்கு மேல் பெறும் நிலத்தை என்ன செய்வதாக உத்தேசம்? இதை ஏலம் கூறிக் குத்தகைக்கு விட ஒரு சர்க்கார் இலாக்காவைத் திறக்கப் போவதாக உத்தேசமா? இதைவிட மோசமான நிலை வேறு இருக்கமுடியாது. ஏனெனில் ஊழலும் லஞ்சமும் நாடெங்கும் புதுப்புது உருவத்தில் பரவ ஆரம்பித்து விடும். எதற்காக உச்ச வரம்புச் சட்டம் செய்யப் பட்டதோ அந்த லட்சியம் குட்டிச் சுவராகிப் போகும்!

ஒரு உருப்படியான திட்டம் வேண்டும். அத்தகைய திட்டமின்றிச் செய்யப்படும் உச்ச வரம்பு நிலச்சட்டங்கள் அரசியல் சூதாட்டமும், வோட்டுப் பிடிக்கும் தந்திரமுமாகத்தான் முடியும். ஆனால் இவ்வளவுடன் நின்றால் தேவலையே! நிலத்தின் மதிப்பு மிக மிகத் தாழ்ந்து போய், விவசாயம் குன்றி, அத்தியாவசியமான உணவு தான்யங்களின் விலையெல்லாம் ஏறிப் போகும். இதனால் பொது மக்கள் அடையக்கூடிய கஷ்டநஷ்டம் சொல்லி முடியாததாகப் போகும்.

நிலத்துக்கு உச்சவரம்பு கட்ட வேண்டும் என்று சொல்பவர்கள் எல்லோரும், நிலச் சொந்தக்காரர்களைத்தான் தாக்குகிறார்கள். நில உரிமையின்றி, குத்தகைக்குச் சாகுபடி செய்யும் குத்தகைதாரர்கள் நிலச் சொந்தக்காரர்களைவிடப் பெரிய முதலாளிகளாக வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் அரசாங்கத்தின் சலுகை பெற்ற தத்துப் புத்திரர்களாக வளர்வது விந்தையாக இருக்கிறது. இந்தப் பாரபட்சம் ஏனோ!

* * *

நமது நாட்டில் சின்னஞ் சிறு நிலக் கூறுகள் அதிகம். அந்த நிலத்தையுடையவர்கள் முதலீடு செய்து விவசாயத்தைப் பெருக்கக் கூடியவர்கள் அல்ல. அந்த நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானம் அவர்களுக்குப் போதுமானதாக இருக்காது. இப்படிப்பட்ட சிறு நிலக் கூறுகளோடு அக்கம்பக்கத்து நிலங்களை இணைத்து லாபகரமாகச் செயல்படக் கூடிய பெரிய பண்ணைகளாக செய்யவேண்டும்.

ஆகவே, இன்றுள்ள நிலையில், பெரிய பண்ணைகளை உடைத்துச் சின்னாபின்னப் படுத்துவதல்ல நிலச் சீர்திருத்தம். அதுவல்ல உணவு உற்பத்தியைப் பெருக்கும் வழி.

அதற்கு மாறாக, கட்டுப்படியாகாத சிறிய பண்ணைகளாக இருப்பவைகளை யெல்லாம் பெரிய பண்ணைகளாக்குவதுதான் தேசத்துக்கு உண்மையான, பயன் விளைவிக்கும் பணி.

இதற்குத் தீர்க்கமாக ஆலோசித்து திட்டம் வகுக்க வேண்டும். ஓர் இடத்தில், நிலத்தை வாங்கிச் சேர்க்கவேண்டும். இன்னொரு இடத்தில், சேர்க்க வேண்டிய நிலத்தின் மதிப்பு எவ்வளவு உண்டோ, அந்த அளவுக்கு மற்றொரு இடத்தில் நிலம் கொடுப்பதாகச் சொல்ல வேண்டும். இப்படி ஈடு பணமாகவும் கொடுக்க வேண்டியிருக்கும். நிலமாகவும் கொடுக்க வேண்டி யிருக்கும். நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தில் சர்க்கார் ஒருவர் சொத்தை எடுத்துக் கொண்டால் அதற்கு ஈடுசெய்ய வேண்டும் என்று சட்டம் இயற்றியிருக்கிறார்கள். சட்டத்தைப் பேச்சளவில் நிறைவேற்ற முயலக் கூடாது. கண் துடைப்பு விவகாரமாகச் செய்யாமல் அந்தரங்கசுத்தியோடு, அச்சட்டத்தின் உண்மைப் பொருளையுணர்ந்து நிலச் சொந்தக்காரர்களுக்குத் தக்க ஈடு அளிக்க வேண்டும். இதுதான் இன்றைய சர்க்காரின் கடமை.

இப்படிச் செய்யப்படும் நிலப்பரிவர்த்தனைகள் யாவும் மக்கள் தாங்களாக மனமுவந்து செய்யும் வகையில் அரசாங்கம் நடந்து கொள்ள வேண்டும். இதில் சட்டத்தின் பலாத்காரம் கூடாது. நிலம் என்பது ஏலத்தில் விற்கும் மேஜை நாற்காலி போன்றது அல்ல. நிலம் மக்கள் உணர்ச்சிகளுடன் கலந்து விட்ட விஷயம்.

நிலத்தை ஆசையோடு மட்டும் கேட்பவனுக்குக் கொடுத்துவிடக் கூடாது. நிலத்தில் உழுது பாடுபட்டு, உற்பத்தியைப் பெருக்கும் தகுதி பெற்றவனுக்குத்தான் அளிக்க வேண்டும். இப்படிக் கொடுக்கும்போது, "இவனுக்குக் கொடுப்பதால் நமக்கு வோட்டுக்கள் கிடைக்குமா?" என்ற எண்ணம் தோன்றக் கூடாது. வோட்டுப் பெட்டியின் நினைவை உள்ளத்திலிருந்து அறவே நீக்கி விடவேண்டும். வோட்டு பிடித்துத் தரும் தரகர்களின் ஆலோசனையைக் கேட்காமல் விவசாயத்தில் அனுபவமும் அக்கறையுமுள்ளவர்களைக் கலந்தாலோசித்துத் திட்டம் வகுக்க வேண்டும்.

கடைசியாக ஒருவார்த்தை சொல்ல விரும்புகிறோம். அரசாங்கத்திலுள்ளவர்கள் தங்கள் பதவியையும் செல்வாக்கையும் நேர்மையான முறையில் பிரயோகிக்க வேண்டும். தவறான வழியில் செலுத்தினால், "அரசியல் வாதிகளே கெட்டவர்கள்" என்ற அவப்பெயரைத் தேடித் தந்து விபரீத விளைவுகளை ஏற்படுத்தி விடும். சமீபத்தில் பல ஆசிய நாடுகளில் இது போன்ற சம்பவங்கள் நடைபெற்றிருக்கின்றன. இவற்றை எச்சரிக்கையாகக் கொண்டு நடந்து கொள்ள வேண்டும்.

# ராணுவ ஆட்சி

ஒரு தேசத்துக்குப் பின் ஒரு தேசம் ராணுவ ஆட்சிக்கு உட்பட்டு வருகிறது. அந்நாடுகளில் நேற்றுவரை பதவியிலிருந்த அரசியல்வாதிகள் இன்று பதவியை இழந்து பரிதாபமாக நிற்கிறார்கள்.

இருந்தாலும் ஜனநாயக ஆட்சி முறையைத் தகர்த்தெறிந்த ராணுவத் தலைவர்கள் "நாங்கள் ஒன்றும் ஜனநாயகத்துக்கு விரோதிகள் அல்ல. எங்களுக்கு நாட்டில் நிலவும் லஞ்ச ஊழல்தான் பிடிக்கவில்லை; லஞ்சத்துக்கு அடிமைப்பட்ட அரசியல்வாதிகளையும் அரசியல் கட்சிகளையும்தான் பிடிக்கவில்லை. அதனால்தான் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டோம்" என்று சொல்லுகிறார்கள்.

இவர்கள் பெரிய உண்மைவிளம்பிகள் என்று நினைத்து மக்கள் எவ்வித எதிர்ப்பும் தெரிவிக்காமல் ஏற்று வருகின்றனர். ஏனென்றால் ராணுவத் தளபதிகள், அரசாங்கத்தைப் பற்றியும் அரசியல் தலைவர்களைப் பற்றியும், கட்சிகளைப் பற்றியும் சொல்லும் குறைகள் உண்மை என்பது மக்களுக்கும் தெரிந்திருப்பதுதான். இதனாலேயே ராணுவமும், ராணுவத் தலைவர்களும் யோக்கியர்களாகி விடுவார்களா என்ன? மக்கள் ராணுவத்தாருடைய உடுப்பையும், ராணுவ நடை தோரணையையும் கண்டு ஏமாந்து போயிருக்கிறார்கள். ரொம்பவும் ஒழுக்க சீலர்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ராணுவத்தில் எவ்வளவு ஊழல்கள் என்பது ராணுவங்களுக்குத் தளவாடங்களையும், சாமான்களையும் வாங்கித் தரும் கண்டிராக்டர்களைக் கேட்டால் தெரியும். ஆனால் கண்டிராக்டர்கள் வெளியில் சொல்ல மாட்டார்கள். ராணுவ ஆட்சி புரியும் நாடுகளில் மக்கள் சுபிட்சமாக வாழப் போவதாக எதிர்பார்க்கிறார்கள். எப்படி நடக்கிறதோ, போகப் போகத்தான் தெரியும்.

இன்னொரு அதிசயம் இப்பொழுது நிகழ்ந்து வருகிறது. முன்பு இந்த நாடுகளில் ஆதிக்கம் செலுத்தி வந்த மேற்கத்திய நாடுகளும், மற்ற நாடுகளும் ஒன்றுமே நடக்காதது போல் இந்த ராணுவ ஆட்சியை மனப்பூர்வமாக வரவேற்கின்றன. அதுமட்டுமில்லை; இந்த ராணுவ ஆட்சிக்கு ராணுவ உதவியும் பொருளாதார உதவியும் அளித்து வருகின்றன. தங்களுக்கு எதிரியாக உள்ள நாடுகளுடன் சேராமலும், கொஞ்சம் மேற்கத்திய நாடுகளுடன் சிநேக பாவத்துடன் இருந்தாலே போதும், முன்னைவிட அதிக உற்சாகமாக உதவிகள் அளிக்க முன்வருகின்றன! கம்யூனிஸ்ட் நாடுகள் இப் புது ராணுவத் தளபதிகளுடன் நேசம் கொள்வதற்கு முன், தாங்கள் முந்திக்கொள்ள வேண்டும் என்ற ஒரு ஆவல்தான் மேற்கத்திய நாடுகளின் மனதில் மேலோங்கி நிற்கிறது என்பது தெரிகிறது. இந்த ஆவலில் "உண்மையான சர்க்கார்" என்று இந்த ராணுவ ஆட்சிகளை அங்கீகரித்திருக்கின்றன. பாகிஸ்தான், சூடான் ஆட்சிகளை அங்கீகரித்திருக்கின்றன. ஆனால் உண்மையான சர்க்கார் நிலவும் சீன ஆட்சியைத்தான் இந்நாடுகளால் அங்கீகரிக்க முடியவில்லை. ஜனநாயக லட்சியத்தைப் பிரமாதமாகப் பறைசாற்றும் அமெரிக்கா சூடான், பாகிஸ்தான் ஆட்சிகளை அங்கீகரிப்பதில் சற்றும் தயக்கம் காட்டாததுடன் பெரிதும் விரும்புவதாகவே சொல்லிக் கொள்கிறது!

இவை எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம் பிரிட்டிஷ் காமன்வெல்த் உறவுதான். அதைப்பற்றி நினைக்க நினைக்க, வேடிக்கையாக மட்டுமில்லை, வேதனையாகவும் இருக்கிறது.

பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள ராணுவ ஆட்சி இந்திய ஜனநாயகத்தை எப்படிப் பாதிக்கும் என்பதைப் பற்றி லண்டனில் யாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. "காமன்வெல்த் நாடுகள்" என்ற கூட்டில் இத்தகைய ராணுவ ஆட்சிகள் எப்படி இடம் பெற முடியும் என்று லண்டனில் யாரும் சிந்திப்பதாகக் கூடத் தெரியவில்லை!

---

## பிரார்த்தனைக் கூட்டம்

— கிண்டி ராஜபவனம் —

## காந்தி மண்டபத்தில்

நவம்பர் மாதம் 28-ந்தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு

சீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் துதிகீதங்கள் பாடுவார்

*

நாகஸ்வர இன்னிசை, தக்கர்பாபா வித்தியாலய மாணவர்கள்

சாரதா வித்தியாலய போதனாமுறை பயிற்சிப்பள்ளி மாணவிகள்

நூற்புயக்ஞம், கீதை பாராயணம், ராமநாம பஜனை


தெருவெல்லாம் வெள்ளம்
காங்கிரஸ் ஒழுங்கீனம்


வெள்ளத்தில் சிலர் மூழ்குகிறார்கள்
எச்.எம்.படேல்
காமத்
போலீஸ் கமிஷன் அறிக்கை


வீடுகள் சரிந்து விழுகின்றன
அக்கிரமச் சட்டங்கள்
சிவசாமி
நில உடைமைகள்


கலாசாலைகள் மூடிக் கிடக்கின்றன
காசி சர்வகலாசாலை
மாணவர்கள் ஒழுக்கக் குறைவு


கார்கள் ஓட முடியாமல் தவிக்கின்றன
திட்டம்
அந்நிய உதவி

# நினைவுகள்!



மரங்கள் மக்கள் மீது விழுகின்றன
ராணுவ யதேச்சாதிகாரம்
பாகிஸ்தான்




பாலங்கள் உடைகின்றன
நான்கு வல்லரசு மகாநாடு




பலர் மழையில் நனைந்து ஓடுகின்றனர்
அமெரிக்கக் காங்கிரஸ் தேர்தல்




ஜெனிவா அணுகுண்டு தவிர்ப்பு மகாநாடு
ரயில்கள் ஓட முடியாமல் நிற்கின்றன
நிகழ்ச்சி முறையில் தகராறு

# அருள் வாக்கு

ஸ்ரீ சங்கராச்சாரியார் - காஞ்சிகாமகோடிபீடம்

ஈச்வரனுக்குப் பல பெயர்கள் இருக்கின்றன. நித்திய சித்தன், நித்திய புத்தன், நித்திய முக்தன், பட்ட மரம் போன்ற ஸ்தாணு, ஸர்வக்ஞன் என்றெல்லாம் அவனுக்குப் பெயர்கள். அவனிடம் பக்தி பண்ணு, அவனிடத்தில் அன்பு செய் என்றெல்லாம் அடிக்கடி சொல்கிறோம். எதற்காக அப்படிச் சொல்லப்படுகிறது? நாம் நம்முடைய அழுக்குகளைப் போக்கிக் கொள்ளத்தான். நமது அஞ்ஞானத்தைப் போக்கிக் கொள்ளத்தான். மனத்திலுள்ள குறைகளை நீக்கிக் கொள்ளத்தான். கஷ்டம், துக்கம், மோகம், காமம் எல்லாவற்றினாலும் நமது மனம் சஞ்சலப்படாமல் இருப்பதற்காகத்தான். சித்தி விருத்தி நிரோதம் செய்து சதா ஆனந்தமாக நம் காரியங்களைச் செய்வதற்காகத்தான் அந்த ஸ்தாணுவைப் பற்றிக் கொண்டு பக்தி செய்ய வேண்டும்.

நாம் பற்றுள்ளவர்கள். ஈச்வரன் பற்றற்றவன். பற்றுள்ளவர்கள் பற்றில்லாதவர்களாக ஆவதற்குப் பற்றில்லாதவன் தாள்களைத்தான் பற்ற வேண்டும்.

**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

என்று திருவள்ளுவர் சொல்லியுள்ளதை இங்கே நினைவுபடுத்திக் கொள்ளலாம். எவன் ஒருவன் பற்றுக்களை எல்லாம் அறுத்துவிட்டுப் பற்றில்லாதவனாக இருக்கின்றானோ அவனைப் பற்றிக் கொண்டால் நம் பற்றுக்களும் நம்மை விட்டுப் போகும் என்கிறார் வள்ளுவர்.

இதர வயல்களில் மேயாமலிருப்பதற்காக நாம் பசுவைக் கட்டிப் போடுகிறோம். மற்றவர்களின் பயிர்களைக் காப்பாற்றுவதற்கு மட்டும் பசுவைக் கட்டிப் போடவில்லை. மற்றவர்களிடமிருந்து அடி வாங்காமல் பசுவைக் காப்பதற்குக் கட்டிப் போடுகிறோம். அது போலவே நாமெல்லாம் பசுக்கள். ஈச்வரன்தான் பசுபதி. நாமும் காமம், குரோதம் போன்ற உணர்ச்சிகளுக்கு ஆளாகிக் கஷ்டப்படாமல் இருப்பதற்காக நம்மையே உறுதியுள்ள கயிறுகளால் கட்டிக்கொள்ள வேண்டும். இக் கயிறுகள்தான் நாம் அனுஷ்டிக்க வேண்டிய சதாசாரங்களும் கர்மாக்களும் பக்தியும். எப்போது பசுவைக் கட்டவிழ்த்து விடவேண்டுமென்று இடையனுக்குத் தெரியும். அப்போது அதை அவன் அவிழ்த்து விடுகிறான். பசுபதியாகிய ஈச்வரனுக்கும் எப்போது நம்முடைய கட்டுகளிலிருந்து நம்மை அவிழ்த்துவிட வேண்டுமென்று தெரியும். அப்போது நமது கட்டுகள் அவிழ்ந்துவிடும். கட்டுகளை முடிவில் அவிழ்ப்பதற்காகவே இப்போது ஆசாரங்கள், அனுஷ்டானங்கள் என்ற கட்டுகளால் கட்டிக் கொள்ளுகிறோம். நூற்கயிற்றால் கட்டப்பட்ட ஒரு பேல் கட்டு இரும்புத் தகடுகளால் இறுக்கிக் கட்டப்படும் போது நூற்கயிறுகள் தளர்ந்து நழுவி விழுந்துவிடும். அதுபோலவே ஞானம் என்ற இரும்புத்தகடினால் நம்மை இறுகக் கட்டிக் கொண்டால் காமக் குரோதம் என்கிற நூற்கயிறுகள் தளர்ந்து விழுந்துவிடும். இந்த நூற்கயிறுகளான காமக் குரோதாதிகள்தான் நம்மை இவ்வுலகத்துடன் பிணைத்து பிறப்பு இறப்புக்குக் காரணமாக இருக்கின்றன. இவற்றினின்று விடுபடுவதற்கு யக்ஞம், தபஸ், கர்மாக்கள், ஈசுவர பக்தி என்று பல விதங்கள் சொல்லப் படுகின்றன. எல்லாம் ஞானத்தை அடைவதற்குச் சாதனங்கள். ஞானம் வந்துவிட்டால் பற்றுகள் அற்றுப் போகும். ஈசுவரன் ஞானஸ்வரூபி. நித்திய முக்தன்.

இதற்காகத்தான் நாம் ஈசுவர பக்தி செய்ய வேண்டும். பகல் என்றால் ராத்திரி இருக்கிறது. நல்ல வெய்யில் என்றால் மழை இருக்கிறது. ஜடம் என்றால் சித்து (உயிர்கள்) இருக்கிறது. இப்படி ஒவ்வொன்றுக்கும் ஒரு மாற்றுப் பொருள் இருக்கிறது. இதிலிருந்து ஒரே அழுக்கு, ஒரே துக்கம், ஒரே கோபம், ஒரே காமம், எப்போது பார்த்தாலும் ஒரே சஞ்சலம்—இப்படிப் பல ஜீவாத்மாக்கள் இருக்கும்போது இதற்கு நேர்விரோதமாக எப்போதும் பரிசுத்தமாக, பரம ஞானமாய், பரம ஆனந்தமாய் சித்தத்தில் கொஞ்சங்கூட அசைவு இல்லாத பட்ட மரம்போல் ஒரு பரமாத்மா இருக்க வேண்டும் என்று தெரிகிறது. இது இல்லை என்றால் இந்த ஜீவாத்மாக்கள் கடைத்தேற வழியே இல்லை. சுத்த, நித்திய, முக்தப் பொருளாக இருக்கிற ஈசுவரனிடத்தில் நாம் பக்தி செய்வது நாமும் அந்த மாதிரியே ஆக வேண்டும் என்பதற்காகத்தான்

# பிடிவாத மனப்பான்மை

கொழும்பு, நவம்பர், 21உ.

அரசாங்கத்தின் ஒரு விவேகமற்ற காரியம் வகுப்புவாதத்தை மறுபடியும் கிளப்பி விட்டுக் கொண்டிருப்பதோடு தமிழ்த் தலைவர்களைச் சிறையில் தள்ளி, தமிழரின் பகைமையும் வெறுப்பையும் ஆட்சியாளர்களுக்கு ஈட்டிக் கொடுத்து வருகிறது. எப்பொழுதோ நடந்த சத்தியாக்கிரகத்தைப் பற்றி அனேகர் மறந்து போயிருக்கும் சமயத்தில் அது சம்பந்தமான வழக்குகளைத் திரும்ப உயிர் கொடுத்துக் கிளப்பி, தமிழ்த் தலைவர்களுக்குத் தண்டனைவிதித்துவருவதைப் புத்திசாலித்தனமான காரியமென்று யாரும் கருதுவதற்கில்லை. சிங்கள ஸ்ரீ எழுத்துக்களை எதிர்த்துச் சென்ற மே மாதம் தமிழரசுக் கட்சித் தலைவர்கள் சத்தியாக்கிரகம் செய்ததையும், அரசாங்க பஸ்களிலிருந்த சிங்கள ஸ்ரீ எழுத்துக்களை எதிர்த்து அவர்கள் சட்டத்தை மீறியதையும், இதைத் தொடர்ந்து தென் இலங்கையில் சிங்களவர்கள் தமிழ் எழுத்துக்களைத் தார் பூசி அழிக்கும் ஒரு இயக்கத்தை ஆரம்பித்து நடத்தியதையும், இந்த இயக்கங்கள் இறுதியில் ஒரு பயங்கரமான வகுப்புக் கலகமாக உருவெடுத்துப் பல உயிர்களைப் பலி வாங்கியதையும் நேயர்கள் இதற்குள் மறந்திருக்க மாட்டார்கள். சத்தியாக்கிரகத்தையொட்டி அப்போது தாக்கல் செய்யப்பட்ட வழக்குகள் வகுப்புக் கலகம் காரணமாக ஒத்தி வைக்கப்பட்டிருந்தன. இப்போது அவை திரும்ப எடுத்து விசாரிக்கப்படுகின்றன. இவ்வழக்கில் தமிழரசுக் கட்சிப் பிரமுகர்களான ஸ்ரீ செல்வநாயகம், அமிர்தலிங்கம், ராஜமாணிக்கம் முதலான பலர் சமீபத்தில் சிறை சென்று மீண்டார்கள். இவ்வாரம் தமிழரசுக் கட்சிப் பிரமுகரும் கோப்பாய்த் தொகுதியின் பார்லிமெண்ட் அங்கத்தவரும் தமிழரசுக் கட்சியின் முன்னுள் தலைவருமான திரு கு. வன்னியசிங்கத்துக்கு இரண்டுவாரச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. பழைய சத்தியாக்கிரக வழக்குகளையொட்டி அநேகம் தமிழர்கள் தங்களுக்கு விதிக்கப்படும் அபராதத்தைச் செலுத்த முடியாதெனச் சொல்லி மறுத்துச் சிறை சென்று வருகிறார்கள். இந்தச் சம்பவங்கள் தமிழ் மக்களிடையில் மனக் கசப்பை விளைவிப்பதாயும், சிங்கள ஆதிக்கத்தை நினைவுறுத்துவதாயும், அரசாங்கத்தின் பிடிவாத மனப்பான்மையைப் பிரதிபலிப்பதாயும் இருக்கின்றன. ஒரு வகையில் இந்த நடவடிக்கைகள் தமிழரசுக் கட்சிக்கு நன்மை செய்வதாகவும் இருக்கின்றன.

யாழ்ப்பாணத்தில் சமீபகாலத்துக்கிடையில் விசுவரூபமெடுத்திருக்கும் தீண்டாமைப் பிரச்னைக்கு முடிவுகட்ட இவ்வாரம் யாழ்ப்பாண நகர மண்டபத்தில் ஒரு அதிமுக்கியமான மகாநாடு நடைபெற்றது. யாழ்ப்பாணத்திலுள்ள தேநீர்க் கடைகளிலும் இதர உணவு விடுதிகளிலும் தாழ்த்தப்பட்ட மக்கள் அனுமதிக்கப்படாமல் இருப்பதை எதிர்த்துச் சிறுபான்மைத் தமிழர் மகாசபை ஒரு பெரிய சத்தியாக்கிரகப் போராட்டத்தை அங்கு நடத்தத் திட்டமிட்டிருந்தனர். இந்தச் சத்தியாக்கிரகத்தை எப்படியும் தவிர்த்து விடவேண்டுமென்பதற்காகத் தமிழரசுக் கட்சியினர் சகல ஹோட்டல் முதலாளிகளையும் கொண்ட ஒரு மகாநாட்டை நகர மண்டபத்தில் கூட்டினார்கள். அப்போது திரு கு. வன்னியசிங்கம் பேசுகையில், ஹோட்டல்கள் போன்ற பொது இடங்களில் சாதி வேற்றுமை பாராட்டுபவர்களைத் தண்டனைக்கு உட்படுத்த ஏற்கனவே ஒரு சட்டம் இருக்கிறதென்றும், அதைத் தீவிரமாக அமுல் நடத்த வேண்டுமென்றும் ஹோட்டல் முதலாளிகள் சாதி மத இன பாகுபாடின்றிச் சகலரையும் தங்கள் ஹோட்டல்களில் அனுமதிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

இதன்பயனாக, சுத்தமாக வரும் சகல வகுப்பினரையும் பாகுபாடில்லாமல் எல்லா ஹோட்டல்களிலும் அனுமதிப்பதென்று ஒரு தீர்மானம் ஹோட்டல் முதலாளிகள் அடங்கிய மகாநாட்டில் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. ஏற்கனவே யாழ்ப்பாணத்திலுள்ள பல ஹோட்டல்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டதுடன் மற்றும் பல ஹோட்டல்களும் விரைவில் திறந்து விடப்பட இருக்கின்றன. அப்படியிருந்தும் சிறுபான்மைத் தமிழர் மகாசபை தனது உத்தேச சத்தியாக்கிரகத்தைப் பழைய திட்டப்படி நடத்த உத்தேசித்திருப்பதாகப் பேச்சுகள் அடிபடுகின்றன. இந்தப் பேச்சுகள் எவ்வளவு தூரம் உண்மையென்பது போகப் போகத்தான் தெரிய வேண்டும். எனினும், சத்தியாக்கிரகம் நடப்பது தமிழ் மக்களைப் பலவீனப்படுத்துவதாயிருக்குமென்பதைப் பற்றி இரண்டுவிதமான அபிப்பிராயங்கள் இல்லை. தமிழரின் சோதனை மிக்க இத் தருணத்தில் சிறுபான்மைத் தமிழர் மகாசபை தீர்க்கமாக ஆலோசிக்க வேண்டும்.

பிரதம மந்திரி பண்டாரநாயகா கடும் சுகவீனத்துடன் இருப்பதாயும் எந்த நிமிடமும் பொதுத் தேர்தல் திடீரென்று இலங்கையில் நடைபெறலாம் என்றும் சில அரசியல் கட்சிகள் நாடு முழுதும் பிரசாரம் செய்து கொண்டிருக்கையில், பிரதமர் பண்டாரநாயகா இவ்வாரம் அரசாங்க ஏஜண்டுகளின் மகாநாடு ஒன்றுக்குச் சமுகமளித்து ஒரு முக்கியமான அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். நாட்டில் வகுப்பு சௌஜன்யத்தைத் திரும்ப ஏற்படுத்துவதிலேயே அரசாங்க ஏஜண்டுகள் முதல் கவனம் செலுத்த வேண்டுமென்றும், சமாதானக் கமிட்டிகள் மூலமாகப் பல்வேறு சமூகத்தவர்களுக்குமிடையில் பரஸ்பர நல்லெண்ணத்தையும் நம்பிக்கையையும் வளர்க்க வேண்டுமென்றும் நாட்டில் பரிபூரண சமாதானம் நிலவும் என்பது நிச்சயப்படும் வரையில் அவசர காலச் சட்டத்தை ரத்துச் செய்யும் பேச்சுக்கே இடமில்லையென்றும் அவர் அறிவித்தார். சென்ற வகுப்புக் கலகத்தில் கஷ்ட நஷ்டமடைந்தவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கும் பிரச்னையைப் பற்றி அரசாங்கம் யோசித்து வருவதாயும் தெரிவித்தார். —ரஜனி



அட்டைப் பட விளக்கம்

# நிலவும் உலகும்

வான மண்டலத்தில் உலாவி வரும் சந்திரன் அநாதி காலந் தொட்டு மக்களுக்கு உற்சாகம் அளித்து வந்திருக்கிறான். சின்னஞ் சிறுகுழந்தைமுதல் தொண்டு கிழம் வரை எல்லாப் பருவ மக்களும் சந்திர மண்டலத்தின் மீது ஒரு வகை காதலே கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது.

குழந்தைக்குச் சோறு ஊட்ட வேண்டுமென்றால் தாய் என்ன பாடுபடுகிறாள் தெரியுமா? குழந்தை நிலவை அழைத்து வந்தால் தான் சாப்பிடுவேன் என்று பிடிவாதம் பிடித்து விடுகிறது. இதற்காக, தாய்,

"நிலா! நிலா ஓடிவா!
நில்லா மலே ஓடிவா!"

என்று கெஞ்ச வேண்டியிருக்கிறது! அந்தக் கெஞ்சுதனிலும், அந்த நிலவைக் காட்டிக் காட்டிக் குழந்தைக்கு ஒவ்வொரு நாளும் அன்ன மூட்டுவதிலும் அந்தத் தாய் அடையும் ஆனந்தம்தான் எவ்வளவு!

இன்னொரு கதையும் இந்த இடத்தில் நினைவுக்கு வருகிறது!

ராமர் சின்னஞ் சிறு குழந்தையாக இருந்த போது, "எனக்குச் சந்திரனைப் பிடித்துக் கொண்டு வந்து என் கையில் கொடு" என்று அழ ஆரம்பித்து விட்டாராம். தாய் கௌசலை எவ்வளவோ சமாதானம் சொல்லிப் பார்க்கிறாள். குழந்தை ராமர் கேட்கவில்லையாம்!

கடைசியில் முகம் பார்க்கும் கண்ணாடியில் சந்திரனுடைய பிரதிபிம்பம் விழும்படி காண்பித்து, அந்தக் கண்ணாடியை ராமர் கையில் கொடுத்தாராம். கண்ணாடியில் சந்திரனுடைய பிம்பத்தைப் பார்த்துப் பார்த்துத் தம் கையிலே சந்திரன் சிக்கிக் கொண்டதாகக் குழந்தை ராமர் சந்தோஷப்பட்டாராம்!

பூரண சந்திரன் தண்ணிலவு பொழியும் இரவென்றால், விண்ணுலக இன்பமெல்லாம் இம் மண்ணுலகில் பெற்றாற் போல் பெரு மகிழ்வு எய்துகிறார்கள் காதலர்கள்!

நிலவுப் பொழுதெல்லாம், காதலர்கள் சரச சல்லாபமாடிக் களிப்பதில் சற்றும் சோர்வு கொள்வதில்லை.

இப்படி முழுமதியின் வெண்ணிலவை எதிர் பார்க்கும் காதலர்களுக்கு ஒரு விஷயத்தில் சந்திரனைக் கண்டால் பிடிப்பதில்லை.

காதலன், சந்திரன்மீது ஆணையிட்டுத் தன் காதலின் உறுதியைத் தெரிவித்தானானால், காதலி, "ஐயோ, வேண்டாமே! இந்தச் சந்திரன்மீது ஆணையிடாதீர்கள்! இந்தச் சந்திரன் இன்று முழுமையாக இருக்கிறான். நாளைக்குத் தேய்ந்து போவான். அதற்கு மறுநாள் அதைவிடத் தேய்ந்து போவான்! இவனுக்கு ஸ்திரமான தன்மை கிடையாது. உங்கள் காதல் அப்படியிருக்கக்கூடாது. இன்று போல் என்றும் இருக்க வேண்டும்!" என்று கெஞ்சுவாள்!

* * *

இப்படி நிலவில் காதலர்களுடன் கூடி மகிழும் காதலிகள், காதலர்களைப் பிரிந்து விட்டால் முதலில் வைவது நிலவைத்தான்!

காதலனைப் பிரிந்த நிலையில் வானத்தில் முழு நிலவு தோன்றிப் பெண்களைப் படுத்தும் பாடு சொல்லி முடியாது.

காதலனுடன் முந்தைய நிலவு நேரங்களில் பேசி மகிழ்ந்தவை யாவும் நினைவுக்கு வந்து அவர்களைக் கொடுமைப் படுத்தும்!

இவ்வளவுக்கும் காரணம் இந்த நிலவு தோன்றியதனால் அல்லவா என்று சந்திரன் மீது கோபம் பொங்கும் பெண்களுக்கு.

நந்திக் கலம்பகத்தில் நந்திவர்மன்மீது காதல் கொண்ட ஒரு பெண் நிலவைப் பார்த்துச் சொல்லுவதைப் பாருங்கள்:

பெண்ணில்லா ஊரில்
பிறந்தாரைப் போலவரும்
வெண்ணிலா வேஇந்த
வேகம்உனக் காகாதே!

சந்திரன் பெண் மக்கள் பிறக்காத ஊரில் பிறந்து, பெண் இனத்தின் உணர்ச்சியை அறியாதவன் போல் வருகிறானாம். இந்த இரண்டு அடிகளில் கவிஞர் பிரிவாற்றாமையினால் துயரடையும் பெண்களின் இதய உணர்ச்சிகளை யெல்லாம் கொட்டி விட்டார்!

மற்றொரு கவிஞர் சொல்வதைப் பாருங்கள்:

நல்ல தென்றல் காற்று குளுகுளு வென்று வீசிக் கொண்டிருக்கிறது. ஊரிலுள்ள மற்றப் பெண்கள் எல்லாம் அனுபவிக்கிறார்கள்!

ஆனால் காதலனைப் பிரிந்திருக்கும் அவளுக்கோ, தென்றலும் அனலாக இருக்கிறது!

எல்லோரும் இரவு நெடுநேரமாகி விட்டது என்று படுக்கையை (பாயல்) விரித்து நிம்மதியாகத் தூங்குவதற்கு வேறு ஆயத்தம் பண்ணுகிறார்கள். ஆனால் அவளுக்குப் படுக்கை என்று சொன்னால் உடம்பெல்லாம் எரிகிறது.

எல்லோரும் வானில் தோன்றும் முழுமதியைக் கண்டு மகிழ்ச்சி பொங்கிப் பரவசப் படுகிறார்கள். ஆனால் அவளுக்கோ......

பாவையர்க்கு வாடைவே(று)
எனக்குவேறு வாடையோ
பாயல்மற் றவர்க்குவே(று)
எனக்குவேறு பாயலோ
யாவருக்கும் மதியம்வே(று)
எனக்குவேறு மதியமோ
யாரொருத்தி பெண்பிறந்(து)
இரண்டுபட்ட(து) உலகமே!

இவளுக்கு துன்ப உலகம்; மற்றவர்களுக்கு அது இன்ப உலகம். உலகம் இரண்டாகப் பிரிந்து போவதற்குக் காரணம் தான் ஒரு பெண்ணாகப் பிறந்ததுதான் என்று ஏங்குகிறாள்! இந்த அற்புதக் காட்சியைத்தான் நமது ஓவியக் கலைஞர் வினு இவ்விதம் அட்டைச் சித்திரமாகச் சித்திரித்திருக்கிறார்.

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

58

துறவறத்தின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறார் :

**துறந்தார்க்குத் துப்புரவு**
**வேண்டி மறந்தார்கொல்**
**மற்றை யவர்கள் தவம்**

எல்லாருமே துறவறம் பூண்டு தவம் செய்ய வேண்டியது! ஆயினும் அப்படிச் செய்யாமல் இல்லறம் நடத்துகிற மக்களுக்கு ஒரு சாக்கு தேடிக் கொடுக்கிறார் முனிவர் : துறவறத்தில் இருப்பவர்களுக்கு வேண்டிய உணவும் இருப்பிடமும் பிற உதவியும் செய்வதற்குச் சிலர் இருக்க வேண்டுமல்லவா அதற்காக இவர்கள் துறவறம் பூணவில்லை என்கிறார்.

துறவறத்தில் இருப்பவர்கள் மற்றவர்களைத் தாழ்ந்தவர்களாக எண்ணலாகாது. "அவர்களும் உங்களைப்போல் தவம் செய்பவர்கள், ஆனால் உங்களுக்குச் சேவை செய்யச் சிலர் வேண்டுமே, அதற்காகத்தான் அவர்கள் இல்லறம் நடத்துகிறார்கள்" என்று துறவறத்தாருக்குச் சொல்லுவதுபோல் கூறுகிறார்.

இல்லறத்தில் இருப்பவர்களுக்கும் சொல்லுகிறார்: "நீங்கள் உங்களுடைய யோக க்ஷேமத்திலேயே மூழ்கிப் போய் விடாதீர்கள் : துறவறம் பூண்டவர்களுக்கு வேண்டியதைச் செய்வதும் உங்கள் இல்லறக் கடமைகளில் அடங்கும். அவர்களுடைய தவம் உங்களுக்கும் பயன்படும் அவர்களுக்கு உதவுவீர்களாக" என்கிறார் முனிவர்.

· · ·

துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு செய்யப்படும் தவத்தின் பெருமையைச் சொல்லுகிறார் :

**சுடச்சுடரும் பொன்போல்**
**ஒளிவிடும், துன்பம்**
**சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.**

தவம் என்றால் என்ன என்பதை முந்தியே சொன்னாரல்லவா? உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை — இதுவே தவத்திற்கு உரு என்று கூறினார் அல்லவா? நோயைப் பொறுப்பதன் மேன்மையை, இந்தக் குறளில் சொல்லுகிறார்.

சுடச்சுடத் தங்கமானது சுடர் வீசும். நெருப்பினால் பொன் அழியாது. பொன்னில் கலந்திருந்த மாசுகள் நீங்கி இன்னும் அழகாகும். அது போல் துன்பம் என்னும் தீயானது பொறுமையோடு நோற்பவர்களின் குணத்தை மாசு நீக்கிப் பொன்போல் திகழச் செய்யும். குறை ஒன்றும் ஏற்படாது. குற்றங்கள் தீர்ந்து பரிசுத்தம் உண்டாகும்.

துன்பங்களை மேற்கொண்டு தவம் செய்கிறவர்களின் கஷ்டத்தைக் கண்டு பரிதபித்து இது என்னத்துக்கு என்று கேட்பாருக்குப் பதிலாகும் இந்தக் குறள் எவர் உள்ளத்திலும் குற்றங்கள் இருக்கின்றன. அதைச் சுட்டு எரிப்பதற்காக இந்தக் கஷ்டம் என்கிறார் முனிவர்

**தன் உயிர் தான அறப்**
**பெற்றானை ஏனைய**
**மன்னுயிர் எல்லாம்**
**தொழும்**

தன் உயிர் தான் அறப் பெற்றான் — தான் என்கிற அகங்காரத்தை ஒழித்துத் தன் உயிரை [illegible] [illegible] பெற்றவன். இது ஒரு உரைகாரரின் கருத்து. தன் உயிரை முற்றிலும் தன் உரிமையாகப் பெற்றவன். அதாவது அதற்குத் தான் அடிமையாகாமல், அதைத் தன் அடிமையாகச் செய்து

வாழ்பவன்—என்று வேறு உரைகாரரின் வியாக்கியானம் "தான் என்பது அற" அதாவது ஆணவம் ஒழித்து என்று கொள்வது ஒரு உரை. "தான் அறவே பெற்றவன்" அதாவது தன் உயிரை அறப் பெற்ற ஒருவன். அறப் பெறுதல் - குறைநீரப் பெறுதல். இது இரண்டாவதான உரை

தான் என்கிற உணர்ச்சிக்கு அகங்காரம் என்று பெயர். அதை ஒழிக்க வேண்டும். அகங்காரத்தை ஒழிக்காமல் புலன்களைத் தன்வசமாக்கிக் கொள்ளாமலும் புலன்களுக்குத் தான் அடிமையாகிப் போதல் தவ வழிக்கு நேர் விரோதம். புலன்களைத் தன் வசம் ஆக்கிக் கொள்வது தவமுறை. புலன்களைத் தன் வசமாக்கிய தவ வீரன் தெய்வ நிலை அடைவான். அதாவது எல்லா உயிர்களும் அவனைத் தொழும்.

ஆன்மாவினுக்கு உடல் அடிமையாக இருக்க வேண்டும். உடலுக்கு அடிமையாக ஆன்மா போகலாகாது. துறவு முறை இதற்கு வழி. உடலை அடக்கி ஆள்வது துறவிகளின் முயற்சி. அவர்கள் அந்த முயற்சியில் வெற்றி பெற்றால் தெய்வநிலையடைந்தவர்களாவார்கள்.

# திருச்சியில் தமிழ்நாடு ஆயுர்வேத மஹாமண்டலம்

(நமது விசேஷ நிருபர்)

அகில இந்திய ஆயுர்வேத காங்கிரசுடன் இணைப்பு பெற்ற தமிழ்நாடு ஆயுர்வேத மகாமண்டலத்தின் விசேஷக் கூட்டமொன்று சென்ற 19-ந் தேதி திருச்சியில் நடைபெற்றது. ஆயுர்வேத மண்டலத்தின் தலைவர் பிஷக்வர டாக்டர் ஏ. ராகவராவ் ஏ. எல். ஐ. எம். அவர்களே இந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

மகாநாட்டுக்குத் தமிழ்நாட்டின் பல பாகங்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான சித்த ஆயுர்வேத வைத்தியர்கள் வந்திருந்தனர். இணைப்பு வைத்தியக் கல்லூரி – ஆஸ்பத்திரி என்ற சென்னை நிலையத்தில் பெயரளவுக்குமட்டுமே இந்திய மருத்துவம் இருந்து வருகிறது. அத்நிலையத்தை நிறுவிய காலத்தில் நிச்சயித்த லட்சியத்திலிருந்து அது விலகி விட்டது. ஆகையால் இந்திய மருத்துவமுறைகள் முன்னேற்றம் பெற ஆலோசனை செய்வதற்காகவே இந்தக் கூட்டம் நடைபெற்றது.

மண்டலத்தின் பொக்கிஷதாரரான ஆயுர்வேதாசார்ய பண்டித வி. பி. நடராஜ சாஸ்திரி அவர்கள், "ஆயுர்வேத சித்த யூனானி வைத்திய முறைகளைச் சுத்தமாக நவீன வைத்தியத்தின் இணைப்பில்லாமல் போதிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். அப்போதுதான் இந்திய வைத்திய முறைகள் முன்னுள் நிலையை அடைவதற்கு முடியும். இதைச் செய்வதற்கு அரசாங்கத்தின் உதவியும் மேல்நாட்டு வைத்தியர்களின் ஆதரவும் தற்போது கிடைக்கும் வாய்ப்பு இருக்கிறது. இந்த உதவிகளைப் பெற்று நமது லட்சியம் பூர்த்தியாவதற்கு முயல வேண்டும்" என்று சாங்கோபாங்கமாகப் பேசினார்.

மண்டலத்தின் விசேஷ அழைப்புக்கிணங்கிச் சென்றிருந்த இணைப்புக் கல்லூரியின் முன்னுள் பேராசிரியரான மு. வ. வே. ராகவன் சில யோசனைகளைக் கூறினார்: "கீழ்நாட்டு வைத்தியம், மேல்நாட்டு வைத்தியம் என்ற சாதிப் பாகுபாடுகளை ஒழிக்கவேண்டும். அப்போதுதான் நெடுநாளாக வைத்தியத் தொழிலில் இருந்துவரும் வேற்றுமை மனப்பான்மையும், உயர்வு தாழ்வு என்ற பாவங்களும் ஒருவருக்கொருவர் போடும் சண்டையும், குறைகூறலும் மாறும். நோயாளியின் வியாதியைப் போக்குவது ஒன்றுதான் எல்லோருக்குமே உள்ள ஏகலட்சியம். ஆகையால், வைத்தியத் தொழிலில் சாதி மனப்பான்மையும் அதனால் ஏற்படும் பிளவுகளும் விரும்பத் தக்கவையல்ல; முற்றும் வெறுக்கத் தக்கவை.

"'சுத்த ஆயுர்வேதம்' என்று பெயர் வைத்துக் கலப்பற்ற கீழ்நாட்டு வைத்தியத்தைக் கற்பது, கற்பிப்பது முதலிய முயற்சிகள் இந்தச் சாதி பேதத்தை என்றென்றைக்கும் நிலைநிறுத்துமே யன்றி இதைப் போக்கி இந்நாள் வரையிலிருந்து வரும் சண்டை பூசலை அறவே நீக்கிவிட உதவாது. கீழ்நாட்டு வைத்தியத்தில் சல்யசாலாக்கிய பாகங்கள் இன்று நடைமுறைப் பழக்கத்தில் இல்லை. அத்துறைகளில் மேல்நாட்டு வைத்தியம் மிகவும் முன்னேற்றம் பெற்றிருக்கிறது. அத்தியாவசியமான இந்தப் பாகங்களை மேல்நாட்டு வைத்தியத்திலிருந்து ஏற்றுக் கீழ்நாட்டு வைத்தியத்துடன் இணைத்து நம் நாட்டு வைத்தியமாக்கி, அதையே நமது தேசிய வைத்தியமாக்கிவிடல் அவசியம். இதற்காக இவ்வகை இணைப்பு முறையை ஏற்பதுதான் நலம். மேலும், எந்தக் குறிப்பிட்ட முறைப்படி விசேஷமாக வைத்தியம் படித்தவனானாலும், அத்துடன் மற்றொரு வைத்திய சாஸ்திர முறையிலும் ஓரளவு படிப்பும் பயிற்சியும் பெற்றவர்களையே அரசாங்கம் ஆதரிக்கும் என்ற கொள்கையை மத்திய அரசாங்கமும், ராஜ்ய அரசாங்கமும் ஐயந்திரிபறத் தெரிவித்தல் வேண்டும். இவ்வகைப் பயிற்சிகளை அளிப்பதற்கு வாய்ப்பளிக்கும் வகையில் முன்னுளிருந்த L.I.M., H.P.I.M., A L.I.M., F.I.M., A.I.M. ஆகிய போதனு முறைகளை மறுபடியும் ஏற்றுச் செயல்பட வழிசெய்ய வேண்டும். இத்துடன் மேல்நாட்டு முறையில் நடக்கும் நிலையங்களிலும் இந்திய வைத்திய நிபுணர்களை நியமித்து அவர்களால் நிச்சயமாகச் சுகம் பெறக்கூடிய நோயாளிகளை அவர்களிடமே ஒப்படைக்கும் வழக்கத்தை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும். இவ்விதமான முயற்சியுடன் உழைத்து வந்தால் காலக்கிரமத்தில் வைத்தியத் துறையில் சாதிபேதம் ஒழிந்து, சமஷ்டியமான தேசிய வைத்திய முறை ஒன்று நம் நாட்டில் நிலைபெறும். அதனால் தேவையான அளவுக்கு நம் நாட்டில் வைத்தியர்களும், வைத்திய வசதியும் பெற வழி உண்டாகும்" என்று சொன்னார்.

கரூர் வைத்திய விசாரத ஸ்ரீ ராமசர்மா என்பவர் இதை ஆட்சேபித்து, "மேல்நாட்டு வைத்தியத்தின் இணைப்பு கடுகளவு இருப்பினும் இந்திய முறைகள் பாழாகிவிடும். வைத்தியத் துறையில் இப்போதுள்ள இரண்டு சாதிகளோடு மட்டும் நில்லாது இரண்டும் கெட்ட மூன்றாவது, நான்காவது சாதிகளும் ஏற்பட நேரிடும்" என்று சொல்லி மிகவும் வன்மையாகக் கண்டித்தார்.

அடுத்தபடியாக கோவையில் பொது மக்களின் ஒத்துழைப்பாலும் தம் சொந்த உழைப்பினுலும் ஒரு சித்த வைத்தியப் பள்ளியையும், வைத்தியசாலையையும் நடத்தி வரும் திருகுமாரசாமிபிள்ளை பேசினார்கள். "எடுத்ததற்கெல்லாம் நாம் அரசாங்கத்தின் உதவியை முழு அளவுக்கும் எதிர்பார்ப்பது அவசியமில்லை. நம் நாட்டின் கலைகளை ஆதரிக்கப் போதுமான செல்வந்தர்கள் இன்றும் இருக்கிறார்கள். இதற்கு நான் நடத்திவரும் நிலையங்களே சான்று. நமது வைத்தியத்தின்

நல்ல மருந்துகள் இருப்பது உண்மை. இதை நாம் நிரூபித்துக் காண்பிக்க முற்பட்டால் பொதுமக்களின் ஆதரவு கிடைக்கும். அப்போது என் நிலையங்களைப் போன்ற வேறு நிலையங்களையும் ஏற்படுத்திச் சிறப்பாக நடத்த முடியும். அரசாங்கத்தின் சிறிதளவு ஆதரவு கிடைத்தாலும் போதும். நமது வைத்திய சாஸ்திரங்கள் பரிபூர்ணமானவைதான். ஆயினும் சில வியாதிகளில் நமது சாஸ்திரங்களில் சொல்லியுள்ள சஸ்திர சிகிச்சைக் கிரமங்கள் நமக்குக் கைப்பழக்கத்தில் இப்போது இல்லை. சஸ்திர சிகிச்சையினுல்தான் குணப்படுத்த முடியும் என்ற சில ரோகங்களில் நாம் மேனுட்டு வைத்திய முறைகளிலிருந்து கைப் பழக்கத் திறமை கிடைக்கும் வரையில் ஏற்றுத்தான் ஆக வேண்டும். அவ் வகையில் நாம் தேர்ச்சி பெற்று அக் கைப் பழக்க முறைகளையும் நமதாக்கிக் கொண்டு, நமது சாஸ்திரம், பயிற்சி ஆகியவற்றைப் பரிபூர்ண நிலைகளுக்குக் கொண்டு வரவேண்டும். அது வரையில், மேற்குறிப்பிட்ட அளவுக்கு மேல் நாட்டு வைத்திய முறையின் சேர்ப்பு நமக்கு அவசியமாகும். நாளது ஜூலை மாதத்திலிருந்து இவ்வகைப் பயிற்சியை நான் நடத்தி வரும் சித்த வைத்தியப் பள்ளியில் பயிலும் மாணவர்களுக்குக் கற்பிக்க ஒரு மேனுட்டு ரண வைத்திய நிபுணரின் உதவியை ஏற்கத் தான் போகிறேன்'' என்றார்.

இவருடைய நோக்கத்தை ஆதரித்துப் பலர் தொடர்ந்து பேசினர். அப்படிப் பேசியவருள் ஒருவரான ''காந்தி வைத்தியர்'' என்று அழைக்கப்படும்கோவை வைத்தியர், ''இனி நமது வைத்திய முறைகள் யாவும் ஒன்று கூட்டிய வகையில் பேதமற்று ஒரே வைத்தியமாக இருக்க வேண்டும். அதை இந்திய வைத்தியம் என்றோ அல்லது தேசிய வைத்தியமென்றோ அழைக்கலாம்'' என்று கூறினர்.

இதைத்தொடர்ந்து மறுபடியும்பேசிய திரு குமாரசாமிப் பிள்ளையவர்கள் ''இனி ஆயுர்வேதம் சித்த வைத்தியங்களை யெல்லாம் ஒருமைப் படுத்திய பொருளில் நாட்டு வைத்தியம்'' என்று அழைப்பதுதான் சரியாகும் என்று அழுத்தமாகக் கூறினர்.

மற்றுமுள்ள சில வைத்திய நிபுணர்கள் பேசியபின் சுமார் ஏழு தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

இவைகளை அரசாங்கத்துக்கு அனுப்புவதற்கும் இம் முயற்சிகளைத் தொடர்ந்து நடத்துவதற்கும் ஒரு குழுவும் நிறுவப்பட்டது. மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள்:

1. சென்னை இணைப்புக் கல்லூரியிலுள்ள ஜி. ஸி. ஐ. எம். போதனு முறை ஆதியில் ஏற்ற லட்சியத்திலிருந்து மிகவும் தடம் புரண்டு விட்டதால் அந்தப் போதனு முறையை உடனடியாக நிறுத்திவிட வேண்டும்.

2. இந்திய வைத்திய முறைகளைப் பிரதானமாகக்கிய வகையில் சென்னை சர்வகலாசாலையின் பி.ஐ.எம். போதனு முறையை யொட்டியதும், தேவையான இடத்து அவசியமான சேர்த்தல் மாற்றல்களுடன் கூடியதுமான ஒரு புதிய போதனு முறையை அப் பள்ளியில் ஏற்று நடத்த வேண்டும்.

3. கேரளம், ஆந்திரம், மத்திய உத்தரப் பிரதேசங்களில் உள்ளது போல் இந்திய மருத்துவத்துக்காகத் தனி இலாகா ஒன்றை நிறுவுதல் வேண்டும்.

4. அந்த இலாகாவின் நிர்வாகஸ்தர்கள் யாவரும் இந்திய வைத்தியங்களில் ஆழ்ந்த ஞானமும் அனுபவமும் பெற்ற திறமைசாலிகளாகவே இருத்தல் வேண்டும்.

5. ஆராய்ச்சிக் குழுவிலும் அவ்வாறே இந்திய வைத்தியத்தில் ஞானமும் திறமையும் பெற்ற நிபுணர்கள் இருக்க வேண்டும்.

6. பொதுவாக இந்த இலாகாவின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்தும் டைரக்டருக்கும், ஆராய்ச்சிக் குழுவினருக்கும் அவ்வப்போது அவசியமான ஆலோசனைகள் சொல்லி உதவுவதற்குத் தனித் தனியே இரண்டு நிபுணர்கள் குழுவும் இருக்க வேண்டும்.

7. ஒவ்வொரு ஜில்லாவிலும், மற்றுமுள்ள தற்போதைய ஆஸ்பத்திரிகளிலும் இந்திய மருத்துவ விடுதிகளென 50 படுக்கைகளாவது ஒதுக்கி வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

இந்தத் தீர்மானங்கள் நிறைவேறிய பிறகு மகாநாடு இனிது முடிந்தது. மகாநாடு வெற்றிகரமாக நடைபெறப் பாடுபட்ட மண்டலத் தலைவர் டாக்டர் ஏ. ராகவராவ் ஏ. எல். ஐ. எம்., ஆயுர்வேத விசாரத ஸ்ரீ ராதாகிருஷ்ணய்யர், காரியதரிசி டாக்டர் ஈஸ்வரன் எல். ஐ. எம். ஆகியோர் பாராட்டுதல்களுக்கு உரியவராவார்கள்.

# குழந்தைகள் தினம்

குழந்தைகள்தான் ஒரு நாட்டின் செல்வம். இந்த நாட்டை எதிர்காலத்தில் மகோன்னத நிலைக்கு உயர்த்தக் கூடியவர்கள் குழந்தைகள்தானே. அப்படிப்பட்ட செல்வங்களைப் போற்றி வளர்க்கும் நாடுதான் எல்லா வகையிலும் முன்னேறும். இதை உணர்ந்தே சென்ற பல ஆண்டுகளாக நேருஜி பிறந்த நவம்பர் 14-ந் தேதியைக் குழந்தைகள் தினமாகக் கொண்டாடி வருகிறோம். இந்த ஆண்டும் நவம்பர் 14-ந் தேதியைப் பாரத நாடெங்கும் குழந்தைகள் தினமாகச் சிறப்புடன் கொண்டாடினார்கள். சென்னையில் குழந்தை எழுத்தாளர் சங்கத்தார் புத்தகங்கள் வெளியிட்டு, நாடகங்கள் நடத்திக் கொண்டாடினார்கள். சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தினர் குழந்தைகள் வாரத்தைக் கோலாகலமாக நடத்தினார்கள். குழந்தைகள் அரங்கில் சுமார் 1500 குழந்தைகள் முன்னிலையில் கதம்ப நிகழ்ச்சி ஒன்றை நடத்தினார்கள். இந்த நிகழ்ச்சியைக் கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் ஆரம்பித்து வைத்தார். ஆகாசவாணி சென்னை நிலையம் நிகழ்த்திய கதம்ப நிகழ்ச்சிக் காட்சிகள் சிலவற்றைப் பக்கத்தில் உள்ள படத்தில் காணலாம்.

குழந்தைகள் தினத்தை யொட்டி இந்தியக் குழந்தைகளின் நலப் பாதுகாப்புக் கழகத்தில் சென்னைக் கிளை ஸ்தாபனம் அருமையான மலர் ஒன்றை வெளியிட்டிருக்கிறது. இதில் அகில இந்தியத் தலைவர்களும், உலகத் தலைவர்களும் குழந்தைகள் பாதுகாப்பு பற்றிய தங்கள் அருமையான கருத்துக்களைத் தெரிவித்திருக்கின்றனர். ஒவ்வொரு பெற்றோரும் பார்த்துப் பலன் அடைய வேண்டிய அற்புதமான மலர். இத்தச் சிறப்பான மலரை வெளியிட்டிருக்கும் அகில இந்தியக் குழந்தைகள் நலப் பாதுகாப்புக் கழகத்தின் சென்னைக் கிளை ஸ்தாபனக் குழுவினரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.






## கைவிளக்கு

[மதுரை திரு சின்ன கிருஷ்ண நாயுடு அவர்கள் எழுதியுள்ள கடிதம் நேயர்களுக்கு மகிழ்ச்சி யளிக்கும் — ஆசிரியர்.]

ஸ்ரீமத் பகவத்கீதையை முழுமையும் ராஜாஜி சரளமான தமிழ் நடையில் மொழி பெயர்த்து அருளும்படி ராஜாஜி அவர்களுக்கு 2–4–50 தேதியில் விஞ்ஞாபித்துக் கொண்டிருந்தேன். கண்ணபிரான் அருளால் என் எண்ணம் எட்டு வருஷங்களுக்குப் பிறகு பூர்த்தியாயிற்று. கீதை முழுதும் சுலோகத்துக்கு சுலோகம் தமிழில் சமீபத்தில் மொழி பெயர்த்து ராஜாஜி அளித்திருப்பதாக ஒரு நண்பர் மூலம் கேள்விப்பட்டேன்.

பரிபூரண ஆனந்தமடைந்தேன்.

என்னுடைய விண்ணப்பத்துக்கு ராஜாஜி அவர்கள் எழுதியிருந்த பதில்:

அன்புடையீர்,

படித்துப் படித்து என்ன பயன்? நான் எழுதிய கண்ணன் காட்டிய வழி என்னும் நூலிலுள்ளது போதாதா? முழு கீதையும் எழுதித் தருவதில் என்ன விசேஷம்? "திருவாசகம்:" ஒன்று போதாதா? பட்டணத்துப் பிள்ளையார் பாடல்கள் போதாதா? தமிழில் எத்தனையோ பரமார்த்திக நூல்கள் இருக்கின்றனவே? 'கல்கி'யில் நான் எழுதிவரும் ராமகிருஷ்ணர் உபதேசங்களும் பயன்படும். ஆனபடியால் தங்களுடைய யோசனைப்படி கீதை முழுவதையும் தமிழில் நான் எழுதும் பணியில் இறங்கவில்லை.

உங்கள் பக்தி சுபோட்டுக்கு ஆண்டவன் அருள்வானாக.

இங்ஙனம்
(ஒம்) இராஜகோபாலாச்சாரி
4—4—50

ஆம்! ஆண்டவன் அருள்செய்து விட்டான்.

மதுரை
16—11—58 என் சின்னகிருஷ்ணநாயுடு

## விவசாய ஆபீஸின் லட்சணம்

சிங்களாந்தபுரத்திலுள்ள என் நிலத்துக்குப் பம்பு செட்டுக்கு ஒரு 5 எச். பி. புருக்ஸ் மோட்டார் மதராஸ் மார்ஷல் கம்பெனி மூலம் சாங்ஷன் ஆகியிருந்தது. மோட்டார் இறக்குமதியானதும் விநியோகத்துக்குத் தயாரா யிருப்பதாயும், விவசாய ஆபீஸ் அத்தாட்சி வந்ததும் விநியோகம் செய்வதாய் மார்ஷல் கம்பெனியார் எழுதினார்கள். மாதக் கணக்காய் விவசாய ஆபீசின் மௌனத்தைக் கண்டு மார்ஷல் கம்பெனியார் எங்கள் சேலம் ஏஜண்டுக்குக் கவனிக்கும்படி எழுதினார்கள்.

அதன்மேல் மின்சாரத்துக்கு அனுமதி ஆனதற்கு மின்சார ஆபீசில் ஒரு சர்டிபிகேட் ஜூலை மாதத்தில் வாங்கி, இராசிபுரம் தாலுக்கா விவசாய ஆபீசில் கொடுத்து, உடனடியாக அத்தாட்சியை அனுப்பும்படி கேட்டுக் கொண்டேன். ஆனால், மேற்படி அத்தாட்சி ஜில்லா விவசாய ஆபீசுக்கு செப்டம்பர் முதலில் வந்தது. ஜில்லா ஆபீசில் பேப்பரை அனுப்பி வைக்கும்படி சொன்னால், பேப்பர் வரவேயில்லை யென்று, பல வாரங்கள் சொல்லிக் கடைசியாக, அக்டோபர் மாதம் 10-ந் தேதி, டைரக்டர் ஆபீசுக்கு அனுப்பி விட்டதாகச் சொன்னார்கள். மதராஸ் டைரக்டர் ஆபீசுக்கு ஒரு கடிதம் எழுதிக் கேட்டேன். பதில் வராததால் மறுபடியும் 31–10–58-ல் ரிஜிஸ்தர் கடிதம் எழுதினேன். இன்று வரையில் பதிலே இல்லை.

இது இப்படியிருக்க, 4–11–58-ல் மார்ஷல் கம்பெனியார் எங்கள் ஏஜண்டுக்கு எழுதிய கடிதத்தில், இன்று வரையில் விவசாய ஆபீசிலிருந்து யாதொரு அத்தாட்சியும் வராததால், எங்களுக்குப் பதிவு செய்திருந்த மோட்டார்ப் பம்பு ரத்து செய்யப்பட்டு, வேறு கோட்டாவுக்கு மோட்டார்கள் கொடுக்கப்பட்டு விட்டன என்று எழுதி விட்டார்கள். என்னைப் போலவே, எங்களூர் பல விவசாயிகளுக்கும் இத்தகைய ஏமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. விவசாயக் காரியாலயங்களின் லட்சணத்தை என்ன சொல்லுவது?

சிங்களாந்தபுரம்
சேலம்
14—11—58 கே. வி. ஏ. வெங்கடாசலம் செட்டியார்

## மின்சார ரயிலில்....!

மின்சார ரயில்வே நிலையத்தில் ரயில் வரும் நேரத்தை 9-1, 9-11, 9-27, 9-39 என்று குறித்து விடுகிறார்கள். ஒரு வண்டியாவது குறிப்பிட்ட நேரத்துக்கு வருவதாகத் தெரியவில்லை. பாசுபதாஸ்திரமடைய அர்ச்சுனன் ஒற்றைக் காலில் நின்று மாதவம் செய்ததுபோல், நாமும் தவம் கிடக்கவேண்டும். எதிர்பார்த்த வண்டி வந்துவிட்டால்!... 'அப்பப்பா! போதும், போதும்! இம்மாதிரி வாழ்க்கை' என்று தோன்றி விடுகிறது. ஆபீஸ் சூப்பிரண்டெண்டண்டு முதல் அங்காடிக்காரிவரை ஒருவரை யொருவர் நெருக்கி அடித்து நசுக்கிக்கொண்டு போடும் மல்யுத்தம் முடிவதற்குள் 'கார்டு' இரண்டு விசில் கொடுத்து விடுகிறார். பிளாட்பாரத்தில் இருந்த தலைகள் குறைந்ததாகத் தெரிவதில்லை.

இன்னொரு விஷயம்: இது பெண்கள் வெளியில் போய்ப் படிப்பதோ அல்லது அலுவலகம் சென்று தொழில் புரிவதோ சர்வ சகஜமாகி விட்ட 'ஸ்புட்னிக்' யுகம்.

மின்சார ரயிலில் பெண்களுக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கும் பெட்டியைப் பெரிதாக, விசாலமாகவாவது ஆக்க வேண்டும்; அல்லது அவர்களுக்காக இன்னொரு பெட்டியையும் ஒதுக்க வேண்டும். பெரும்பாலான பெண் பிரயாணிகள் சில சமயம் இருவருக்கும் பொதுவான பெட்டிகளில் ஏறி வழியில்

# மேஜை



நின்றுகொண்டு விடுவதால், "அம்பா! நீ இரங்காயெனில் புகலேது?" என்று பாட வேண்டியிருக்கிறது!

பழைய மாம்பலம்-2
20—11—58

பா. சுந்தரராஜன்

## திருச்சி நகரில் ரஸ்தாக்களின் நிலை

பல வெளிநாட்டு யாத்ரீகர்கள் விஜயம் செய்யும் முக்கியமான நகரம் திருச்சிராப்பள்ளி. கடந்த பல மாதங்களாக இந் நகரத்தின் சுகாதார நிலை மிகவும் சீர்கேடடைந்து வருகிறது. நகரசபையின் சரியான பராமரிப்பும் சுகாதார அதிகாரிகளின் கண்காணிப்பும் இல்லாததனால் இங்குள்ள தெருக்கள் எப்போதும் குப்பையும் கூளமுமாகவே காட்சியளிக்கின்றன. நகரசுத்தியாளர்கள் சரியான மேற்பார்வை இல்லாத காரணத்தினால் அநேக ரஸ்தாக்களை, ஒரு நாளைக்கு இரு முறை சுத்தி செய்ய வேண்டும் என்ற நியதி இருந்தும் ஒரு முறைதான் சுத்தி செய்கின்றனர். இன்னும் அநேக இடங்களில் நாட்கணக்கில் குப்பை கூளங்கள் அள்ளப்படாமல் பலவகையான நோய் நொடிகள் பரவக் காரணமாகின்றன.

ரஸ்தாக்களின் ஓரங்களை ஆடு மாடுகளை வளர்க்கும் தொழுவங்களாகச் சிலர் ஆக்கிக் கொண்டு விட்டனர். இதனால் மக்கள் பல வித இன்னல்களுக்கு ஆளாகின்றனர்.

திருச்சி டவுன் ஸ்டேஷன் ரஸ்தா, பராமரிப்பு சரியானபடி இல்லாததினால் மிகவும் பழுதடைந்து கிடக்கிறது. தெருக்கள் எல்லாம் தார் போடப்பட்டிருந்தும், மழைக் காலங்களில் இத் தெருக்கள் கப்பி ரோட்டை விடக் கேவலமாகக் காட்சியளிக்கின்றன. காரணம் ரஸ்தாவை அமைக்கும்போது, நடுப் பாகம் மேடாகவும் பக்கங்கள் சற்றுச் சரிந்தும் அமைக்காததேயாகும்.

திருச்சி
18—11—58

ஏ. கே. சுந்தரம்

## அரசாங்கம் கவனிக்குமா?

எங்கள் ஊர் கமுதக்குடி. பரமக்குடிக்கும், பார்த்திபனூருக்கும் இடையில் உள்ளது. எங்கள் ஊருக்கும், ரயில்வே ஸ்டேஷனுக்கும் இடையில் உள்ள தூரம் சுமார் ஒரு மைல். நாங்கள் ரயில்வே ஸ்டேஷனுக்கு வர உள்ள வழி ஒன்றே ஒன்றுதான். அவ்வழியாக வந்தாலும், ஸ்டேஷனை அடையும் முன் இடையில் மூன்று வாய்க்கால்களைக் கடந்து தான் வர வேண்டும். மழைக்காலமாகிய இக் காலத்தில் அவைகளில் ஆற்று வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும். அவற்றின் ஆழமும் அதிகமானதால், வெள்ளம் போகும் காலத்தில் ஸ்டேஷனுக்கு வர முடியாது.

எங்கள் ஊரிலிருந்து தினமும் சுமார் ஐம்பது பேர்கள் பக்கத்திலுள்ள பரமக்குடி பள்ளிக்கூடத்துக்குப் போய்ப் படிக்கிறார்கள். மற்றும் அலுவலகத்தில் வேலை பார்ப்போரும் உள்ளனர். மழைக் காலத்தில் நாங்கள் ஸ்டேஷன் வர முடியாமல் தவிப்பதை, அரசாங்கம் கவனிக்குமா? மூன்று வாய்க்கால்களைக் கடக்க விரைவில் ஒரு மேம்பாலம் அமைத்தால் சௌகரியமாக இருக்கும்.

கமுதக்குடி
19—11—58

சி. வி. நாகராஜன்

## அக்கறையில்லா ஆட்சிமன்றம்

குளித்தலை வட்டம் மத்தகிரி கிராமத்தில் அமைந்துள்ள ஊராட்சி மன்றத்தில் உறுப்பினர்கள், தலைவர் தேர்தல் நடைபெற்றுச் சுமார் நான்கு மாத காலமாகியும் இதுவரையில் ஒரு கூட்டமாவது கூட்டி உதவித் தலைவரைத் தேர்ந்தெடுக்காதிருப்பது விந்தையாக இருக்கிறது.

மேலும் செங்குளம் என்ற சிற்றூரிலே சிறியதோர் கிணறு வெட்டத் துவக்கப்பட்டு ஐந்து ஆண்டுகளுக்கு அதிகமாகியும் அவ்வேலை இன்னும் பூர்த்தியாகாது அரைகுறையாகக் கிடக்கிறது. இது பற்றி மன்றத்துக்கு மகஜர்கள் பல அனுப்பியும் அதை மன்றம் நிறைவேற்ற முன்வரவில்லை.

செங்குளம்
4-10-58

அ. பி. ஆரோக்கியம்

## கற்பனைத் திறன்

பொங்கிவரும் பெரும் நிலவு என்ற தலைப்பு சகல விதத்திலும் பொருத்தமானது என்பதைத் திரு ராஜேந்திரனின் கற்பனா சக்தி நிரூபித்து விட்டது. கதிர்வேலன் கையை இழந்து தவிக்கும் காட்சி, சுகுமாரனின் மனைநிலை, நிர்மலாவின் மாசற்ற பிரேமை இவைகளை வாசகர் மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்தி இருக்கிறார். வாழை அடி வாழையாக வந்து உள்ள அந்தக் கற்பனாசக்தி, நீடுழி வாழ, வளர ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்.

சென்னை
10-11-58

ரா. சபேசன்

## தீப்பெட்டித் தொழிற்சாலை

திருச்செந்தூர் தாலுகா சாத்தான் குளத்துக்கு அருகாமையிலுள்ள பன்னம்பாறை கிராமத்தில் சுமார் இரண்டு வருடங்களாகத் தீப்பெட்டித் தொழிற்சாலை ஒன்று நடந்து கொண்டிருந்தது. இந்தத் தொழிற்சாலையால் பக்கத்துக் கிராமவாசிகளுக்கும் தினம் ஐந்நூறு பேர்களுக்கு மேல் பிழைப்பு நடந்து வந்தது. தற்போது சர்க்காரின் உத்தரவின் பேரில் தொழில் அதிபர் தொழிற்சாலையை மூடி விட்டார். இத் தொழிற்சாலையை மூடியதின்பேரில் ஏழைகளின் பிழைப்பில் மண் விழுந்து விட்டது.

அம்பலசேரி
3-10-58

மூ. மா. முத்தையா பிள்ளை



அந்தப்புரக் காவலன் நடுநிசியாகி விட்டது என்பதை அறிவிக்க யாம ஓசையை எழுப்பினான்.

அதுவரையில் தூக்கமே வராது படுக்கையில் புரண்டு கொண்டிருந்த இளவரசி திலகா, எழுந்து உட்கார்ந்தாள். அவளைச் சுற்றி அவளுக்குக் காவலாகவும், துணையாகவும் இருந்த எல்லாத் தோழிகளும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தனர்.

அந்தச் சிநேகிதிகளுக் கெல்லாம் என்ன கவலை? வேளாவேளைக்கு வயிறு நிறையச் சாப்பாடு, விதம் விதமான ஆடை ஆபரணங்கள், கவலையே அற்ற வாழ்வு, ஆகவே அவர்கள் நிம்மதியாக உறங்கிக் கொண்டிருக்கின்றனர்.

அப்படியென்றால் இளவரசி திலகாவுக்கு மட்டும் என்ன கவலை வந்து விட்டது? கவலையே அறியாத வாழ்வு அல்லவா அவளுடையது. இப்படி ஊரும் உலகமும் நினைக்கலாம். ஆனால் அவளுடைய நெஞ்சம் விம்முவது யாருக்குத் தெரியப் போகிறது?

மற்றவர்களுக்குத்தான் தெரியவில்லை. அவர்கள் நிம்மதியாகத் தூங்கட்டும். ஆனால் திலகாவின் தோழி கமலா, அவளுக்கு இளவரசியின் எண்ணப் போராட்டங்கள் எல்லாம் தெரியுமே. அவள் கூட அல்லவா, எல்லாவற்றையும் மறந்து துயிலுறுகிறாள்? அவளுடைய சொந்தக் காரியம் என்றால் அவள் இப்படித் தூங்குவாளா? இந்த உலகமே அப்படித்தான். தன் கவலையைத் தான் தானே படவேண்டும்.

திலகாவுக்கு மனம் மிகவும் சலித்து விட்டது. நெஞ்சார அவளுக்கு இருக்கும் துக்கம் போதாதென்று இதெல்லாம் வேறு கவலை. அவளுக்கு வாய் விட்டுப் புலம்பி அழ வேண்டும் போலிருந்தது. 'என்ன இளவரசி வாழ்வு வேண்டிக் கிடக்கிறது!' வாய் விட்டு அழக் கூட அவளால் முடிய வில்லை. அவள் அழுதால் எல்லோரும் விழித்துக் கொண்டு விடுவார்கள். பிறகு அவள் காரியம் குட்டிச்சுவர் தான்!

பொங்கி வந்த கண்ணீரைப் பிரயாசைப்பட்டு அடக்கிக் கொண்டாள் திலகா. வாய் விட்டுப் பல முறைகள் பெருமூச்சு விட்டுக் கொண்டாள். அவள் நிம்மதியாகத் தூங்க வேண்டும் என்றுதான் மிக உயர்ந்த பஞ்சணையின் மீது, பஞ்சை விட மிருதுவான பக்ஷி இறகுகளைப் பரப்பி, நறுமலர்களைத் தூவிப் படுக்கை தயாரித்திருந்தார்கள் சேடிகள். அந்த அறை முழுதும் வாசனைப் பொடிகளின் ரம்மிய மணம் 'கம்' மென்று கமழ்ந்து கொண்டிருந்தது.

அதனால் எல்லாம் தூக்கம் வந்து விடுமா என்ன? இதயம் என்ற வஸ்துவை எண்ணம் என்ற நெருப்பு வாட்டிக் கருக்கிக் கொண்டிருப்பது யாருக்குத் தெரியும்? இந்தப் பாழும் ஈசுவரன் அன்று மதனனைச் சாம்பலாக்கினாரே, அத்துடன் அவனுடைய சக்தி களையும் எரித்திருக்கக் கூடாதோ? அனங்கனாக அவன் உலகில் வாழ்வான் என்று வரமளித்து விட்டாரே—அது எவ்வளவு பெரிய தவறு?

இந்தப் பாழாய்ப் போகிற பருவ உணர்வே அவளுக்கு வராமல் இருந்திருக்கக் கூடாதா? இந்த உலகில் வாழும் அவ்வளவு பேரும் பருவ உணர்வேதான் இல்லாமல் இருக்கிறார்களா? அவர்களுக்கும் காதல் பிறக்கிறது; கல்யாணம் ஆகிறது; பிறகு தங்கள் வாழ்வைத் துவங்குகிறார்கள்.

திலகாவின் உள்ளம் எளிதில் இசையக் கூடிய ஒருவரிடம் பதிந்திருக்கக்கூடாதா? இந்தச் சனியன் பிடித்த மனம் அவரிடம்தானே பதிந்தது.

அவருக்குத்தான் என்ன குறைச்சல்? அழகிலோ, திறமையிலோ, அந்தஸ்திலோ ஒரு குறைவும் இல்லை. அவளுடைய தந்தைக்கும் அவர் மிகவும் வேண்டியவர்.

அவளுடைய தந்தைக்கு முன்பு வேண்டியவராக இருந்தார். இப்பொழுது.....அதை நினைப்பானேன்.....?

தாராவின் அரசராக இருந்த போஜ தேவரின் செல்வப் புதல்வி திலகா. உலகமெங்கும் புகழ்பெற்ற போஜராஜனின் பெயரை அவளுடைய தந்தை வெறும் மரியாதைக்கு மட்டும் தரிக்க வில்லை. உண்மையிலேயே அவர் அந்தப் பெயருக்கு மிகவும்பொருத்தமானவராக இருந்தார். வாரி வாரி வழங்குவதிலும், சிறந்த கலைவாணர்களைப் போற்றுவதிலும்—எல்லாவற்றிலும் சரி, அவர் இரண்டாம் போஜராகவே திகழ்ந்தார்.

அவர் மட்டுமா? தம் செல்வமகள் திலகாவையும் நிறையப் படிக்கச் செய்தார் அவர். காளிதாஸன் போன்ற மாபெரும் கவிகளின் எழுத்தோவியங்களிலே ஊக்கம் கொண்டு படித்தாள்

திலகா. தன் தந்தை கூட்டும் கவியரங்கங்களில் அவள் முக்கிய பங்கெடுத்துக் கொண்டாள்.

அப்படித்தான் ஒரு நாள் தன் தந்தையுடன் கவியரங்கத்துக்குச் சென்றிருந்தாள் திலகா. பற்பல கவிஞர்கள் தங்கள் புலமையைக் காட்டினர் அங்கே.

அதன் பிறகு ஒரு கவிஞன் எழுந்தான். அவனை உற்றுப் பார்த்தாள் திலகா. இது வரையில் பார்த்த முகமல்ல; புதுமுகம். களையான, கவர்ச்சி மிகுந்த முகம்.

சபை முறைப்படி அந்த இளம் கவிஞன் எழுந்து நின்றான். சபைத் தலைவரான ஆஸ்தான கவி அவனைப் பார்த்து வழக்கப்படி "உன்னுடைய பெயர்....?" என்று கேட்டார்.

"தனபாலன்" என்று அடக்கமாகப் பதிலளித்தான் அந்த இளைஞன்.

தனபாலன் — என்று பன்முறை எதிரொலித்தது திலகாவின் உள்ளம்.

"நீ கத்ய காவியம் இயற்றுபவனா? அல்லது திருச்ய, சிரவ்ய காவியம் செய்பவனா?" என்றுகேட்டார் ஆஸ்தான கவி.

"பொதுவாக என்னால் நாடகமும், காவியங்களும் இயற்ற முடியும். ஆனால் எனக்கு அதிகமாக விருப்பம் இருப்பது உரைநடைக் காவியங்களில்தான்."

"சந்தோஷம். உன்னுடைய காவியத்திலிருந்து ஏதாவது ஒரு பகுதியைச் சபையின் முன்னால் சொல்ல முடியுமா?"

அந்த இளைஞன் தன்னுடைய ஏதோ ஒரு உரைநடைக் காவியத்திலிருந்து ஒரு பகுதியைப் படித்துக் காட்டினான். சொல்லழகும், பொருளழகும் கொண்டு சபையோர்களைப் பிரமிக்கச் செய்தது அந்த உரைநடைக் காவியம்.

"ஆஹா! பிரமாதம்! பாணருடைய எழுத்துப் போலவே தென்படுகிறதே."

"ஆம், ஐயா! நான் பாணருடைய எழுத்தில் அதிகம் ஊன்றியவன். முக்கியமாக அவருடைய காதம்பரியில் மிகவும் ஈடுபட்டவன் நான்!"

"மிக்க சந்தோஷம். உனக்கு இந்தச் சபையின் வாழ்த்து என்றும் இருக்கும்."

"சபையின் வாழ்த்து மட்டுமல்ல, அந்த இளம் கவிஞனுக்கு இனி என் பரிபூரண ஆதரவும் கிடைக்கும். சபைத் தலைவரே! நம் ஆதரவு பெற்ற கவிகளில் இந்த இளைஞனும் ஒருவனாகட்டும்" — என்றார் மன்னர் போஜர்.

திலகாவின் உள்ளம் பூரித்தது. அந்தக் கவிஞன் இனி தலைநகரிலேயே இருப்பான். அடிக்கடி அரண்மனைக்கு வருவான். அவனை அடிக்கடி சந்திக்கலாம்; பேசலாம்..... இந்த இன்ப நினைவுகளிலே அவள் உள்ளம் அலைபாய்ந்தது.

அன்றைய தினம் அவளுக்கு மறக்க முடியாத தினமாகி விட்டது. தனபாலனைக் கொடுத்த சபை அதுதானே. அன்றையிலிருந்து திலகாவின் உள்ளத்தில் தனபாலன் குடியேறி, பதிந்து விட்டான். தனக்கும் அவனுக்கும் திருமணம் செய்து விடுவதாகத் தந்தை வாக்களித்து விட்டதாகவே எண்ணித் தன் எண்ணங்களை வலுவாக்கிக் கொண்டே போனாள் திலகா.

"இளவரசி!"—தோழி கமலா திலகாவைக் கூப்பிட்டாள்.

"என்ன?"



"நீங்கள் இப்பொழுது அந்தத் தனபாலனைத்தானே நினைத்துக் கொண்டிருந்தீர்கள்?"

"ஆமாம்!"

"நீங்கள் ஒரு இளவரசி. அவர் ஒரு கவி. இருவருக்கும்....."

"கமலா! என் தந்தையை உனக்குத் தெரியுமல்லவா? அவருடைய உள்ளத்தில் இந்த வித்தியாசமே தோன்றாதடி!"

"என்னமோம்மா. ஒரு இளவரசி ஒரு கவிஞனைத் தந்தையின் அனுமதியுடன் மணந்ததாக இதுவரையில் நான் கேள்விப்படவில்லை!"

"போடி! அபசகுனம் போல் அப்படியெல்லாம் சொல்லாதே. எனக்கும் அவருக்கும் திருமணம் தடையில்லாமல் நடக்கும் என்று சொல்லடி."

"அது போதுமா? அவர் மனத்துக்குள் உங்களைப் பற்றி என்ன நினைக்கிறார் என்று தெரிய வேண்டாமா, இளவரசி?"

"அதை நீதானடி தெரிந்துகொண்டு வரவேண்டும்!"

"கூடிய சீக்கிரம் தெரிந்து சொல்கிறேன், அம்மா!" என்றாள் தோழி கமலா.

அதன் பிறகு கமலா பன்முறை தனபாலனின் உள்ளத்தை அறிவதற்கு முற்பட்டாள். ஆனால் தனபாலனைத் தனிமையில் சந்திக்கும் வாய்ப்பே அவளுக்குக் கிட்டவில்லை.

ஆனால் திலகா மட்டும் தன் எண்ணங்களை, தன் ஆசைகளை வளர்த்துக் கொண்டே போனாள். திலகாவைத் தனபாலன் காதலிக்கிறானா, இல்லையா என்பது யாருக்குமே தெரியாது.

தனபாலன் திலகாவின் உள்ளத்தில் பதிந்த பிறகு பலமுறைகள் கவியரங்கம் நடந்தது. ஒவ்வொரு முறையும் கவிகள் என்ற முறையில் திலகாவும், தனபாலனும் வாதம் புரிந்து கொண்டிருக்கின்றனர். அவர்களின் சந்திப்பும், பேச்சும் அத்துடனேயே நின்றன.

அரண்மனைக் கட்டுப்பாடுகளையும் மீறி ஒரு நாள் கமலா தனபாலனின் இருப்பிடத்தைக் கண்டுபிடித்தாள். ஆவலுடன் கதவைத் தட்டச் சென்ற அவளுடைய கரத்தைக் கதவிலே இருந்த பூட்டு தடுத்தது. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. மெதுவாக அக்கம் பக்கத்தில் அவனைப் பற்றி விசாரித்தாள். அவன் எங்கேயோ ஊருக்குப் போயிருப்பதாகச் சொன்னார்கள்.

ஊருக்கு என்றால் நிரந்தரமாகவா, அல்லது தற்காலிகமாகவா? அதெல்லாம் சொல்ல அவளுக்கு யாரும் அங்கேயில்லை. அதே நிலைதான் திலகாவுக்கும். தன் தந்தையை அது குறித்துக் கேட்க முடியவில்லை அவளால்.

அடுத்து இரண்டு மூன்று சபைகள் தனபாலன் இல்லாமலே நடந்து விட்டன. ஏதோ வேண்டா வெறுப்பாகப் போய் உட்கார்ந்திருந்தாள் திலகா. தனபாலன் இல்லாத சபையில் அவளுக்கு என்ன வேலை? அவள் உள்ளம் கவர்ந்தவன் இல்லாத இடம் வெறிச்சென்றிருந்ததில் வியப்பென்ன?

ஒரு வருஷம் ஓடி விட்டது. மறுபடியும் ஒரு நாள் கவியரங்கம் நடந்தது. வேண்டாவெறுப்பாக அதில் உட்கார்ந்திருந்தாள் திலகா.

திடீரென்று தனபாலன் குரல் கேட்டது. அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தாள். ஒரு இளம் சன்யாசி — மொட்டைத் தலையுடனும், காவி வஸ்திரங்களுடனும் அங்கே நின்று கொண்டிருந்தார்.

"யார் இது?"

"நான்தான் மன்னவா, தெரியவில்லையா? நான்தான் தனபாலன்."

எல்லோருக்கும் தூக்கி வாரிப் போட்டு விட்டது.

"நீ தனபாலனா?"

"ஆம். என் உறவினர்களைச் சந்திக்க என் சொந்த ஊர் சென்றிருந்தேன். அங்கே ஒரு ஜைன சந்நியாசியைச் சந்தித்தேன். அதன் விளைவுதான் இது. ஒரு ஆண்டு அவரிடம் ஜைன கிரந்தங்களைக் கற்றுத் தேர்ந்தேன். பிறகு இங்கே வந்துள்ளேன்!"

"தனபாலா! உன்னை ஜைன மதம் கவர்ந்த காரணம் யாது?"

"உலகின் தலைசிறந்த மதங்களுள் ஒன்று ஜைன மதம் என்பது என்னுடைய அபிப்பிராயம்."

"அது எப்படி?"

"மன்னவா! தாங்கள் அனுமதித்தால் ஜைன மதத்தின் கொள்கைகளை ஒரு காவிய உருவில் உருவாக்கிச் சபையின் முன் வைக்கிறேன்."

"நல்லது. எனக்கு மற்ற மதங்களின் மீது வெறுப்பு கிடையாது. ஆகவே நாளையிலிருந்து தினம் சபை கூடட்டும். ஒவ்வொரு நாளும் நீ கொஞ்சம் கொஞ்சமாக எழுதி இங்கு படித்துக் காட்டு."

"நன்றி, மன்னவா!"

அன்று சபை கலைந்தது. அது மட்டுமா? திலகாவின் எண்ணம், கனவு, மகிழ்ச்சி எல்லாமே கலைந்து விட்டன. அவளுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. கமலாவிடம் சொல்லிச் சொல்லிப் புலம்பி அழுதாள் திலகா.

அதைத் தவிர, அவளால் வேறு என்ன செய்ய முடியும்? இனி இந்த ஜன்மத்தில் அவள் தனபாலனை மணக்க முடியுமா?



நவம்பர் 15ந் தேதி கும்பகோணம் அரசினர் கல்லூரியில் குழந்தைகள் தினவிழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. இந்த விழாவில் அறுபதுக்கு மேற்பட்ட ஆரம்ப உயர்நிலைப் பள்ளிகள் கலந்து கொண்டன. கலைநிகழ்ச்சிகளில் முதல் பரிசு பெற்ற ஸ்ரீராமா ஆரம்பப் பாடசாலை மாணவர்களையும், ஆசிரியர்களையும் மேலே படத்தில் காணலாம்.

அவனை அவளால் மறக்க முடியவில்லை; நினைக்கவும் முடியவில்லை. அவள் அதற்கும் இதற்கும் மத்தியில் தத்தளித்துக் கொண்டிருந்தாள். இனி, தான் ஏன் வாழ வேண்டும் என்று தோன்றியது அவளுக்கு. ஆனாலும் இனி அவன்தான் கிடைக்க மாட்டான். ஏதோ ஒரு காவியம் எழுதுவதாகச் சொல்லியிருக்கிறானே, அதைக் கேட்டு விட்டுச் சாவோம் என்றது அவள் உள்ளம்.

ஒரு பொருளை ஆசைப்பட்ட பிறகு அது கண்டிப்பாகக் கிடைக்கவே கிடைக்காது என்று தீர்மானமாகத் தெரியும் வரையில் மனம் சும்மா யிருந்து விடுமா?

மறு நாள் சபை கூடியது. தனபாலன் தன் காவியத்தைப் படிக்கத் துவங்கினான். உரைநடைக் காவியம்தான். ஒரு காதற் காவியமாகப் பாடி அதிலே ஜைன மதத்தின் கோட்பாடுகளையும், பெருமைகளையும் புகுத்தியிருந்தான் அவன். சிறந்த காவியம். சபையோர்கள் அதை மிகவும் ரசித்தனர்.

பல தினங்களாயின. அவனுடைய காவியம் பாதிக்கு மேல் பூர்த்தியாகியிருந்தது. அன்றைய தினம் வழக்கம் போல் தன் காவியத்தைப் படித்தான் தனபாலன். அன்று மிகவும் அதிகமாக ஜைன மதத்தையும், மஹாவீரரையும் புகழ்ந்திருந்தான் அவன்.

போஜன் பண்பாடு நிறைந்த மன்னன் தான். ஆனாலும் அன்று என்னமோ அப்படியாகி விட்டது.

"நிறுத்து, படிப்பதை!"

சபை ஸ்தம்பித்தது; தனபாலன் திடுக்கிட்டான்; திலகா தவித்தாள்.

"தனபாலா! நீ அளவுக்கு மீறிப் புகழ்ந்து விட்டாய்."

"இல்லையே, மன்னவா! ஜினருடைய பெருமைகளை என் போன்ற சிறியவனால் வர்ணித்து விட முடியுமா?"

"நிறுத்து. ஜினன் என்னைவிடப் பெரியவனா?" என்றான்.

"மன்னவா!" — அதற்குமேல் தனபாலன் என்ன சொல்லுவான்?

"நீ நன்றியற்றவன். என் சோற்றைத் தின்று வேறு எவனையோ புகழ்கிறாய்!"

"தாங்கள்தானே அனுமதித்தீர்கள். தங்களுக்கு விருப்பமில்லை என்றால் இந்தக் காவியத்தை..."

"அந்தக் காவியத்தை நெருப்பில் போட வேண்டும்."

"அப்பா!"—திலகா கூவினாள்.

"மன்னவா?"—தனபாலன் அலறித் துடித்தான்.

"யாருமே பேசாதீர்கள்— இந்த ஓலைச் சுவடிக் கட்டுகளை யெல்லாம் எடுத்து நெருப்பில் போடு."

வலுமிருந்த மன்னன் முன் யார் என்ன பேச முடியும்? அவ்வளவு நாட்கள் சிரமப்பட்டுத் தனபாலன் எழுதிய காவியம் ஒரு நொடியில் கருகிச் சாம்பலாகி விட்டது.

போஜன் ஏன் அப்படிச் செய்தான்? — அது அவனுக்கே தெரியாது.

தன் காவியம் எரிந்தவுடன் தனபாலனின் உடல் தவிர மற்றெல்லாமே போகங்கி விட்டன. அவன் நடைப்பிணமாகி விட்டான்.

அன்று மாலை திலகா தன் அந்தப்புரம் திரும்பினாள். அவளும் ஏறக்குறைய நடைப்பிணமாகி விட்டாள். தன் தந்தையின் போக்கு அவளுக்குச் சிறிதும் புரியவில்லை.

ஆனால் ஒன்று, தனபாலனின் மீதிருந்த அன்பில் ஒவ்வொரு நாளும் அவன் படிப்பதை மிகுந்த ஆர்வத்துடன் கேட்பாள். அன்று இரவே தன் இடம் திரும்பி அதை மறக்காமல் நினைவுபடுத்தி ஓலையில் வடிப்பாள். அவனையறியாமல் அப்படிச் செய்தது இப்பொழுது எவ்வளவு நல்லதாகி விட்டது?

மனம் ஒடிந்திருக்கும் தன் அன்பனுக்கு இந்த ஓலைச் சுவடியைக் கொண்டு போய்க் கொடுத்தால் அவன் உள்ளம் எவ்வளவு சந்தோஷப்படும்?

எப்பொழுது நடுநிசி வரும் என்று காத்திருந்தாள் திலகா. நடுநிசியும் வந்து விட்டது. நினைவு அலைகள் கலைந்து படுக்கையிலிருந்து எழுந்தாள் அவள்.

'ஏய், கமலா! எழுந்திரு.'' திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள் கமலா.

''இளவரசி! நடுநிசியாகி விட்டதா?''

''ஆம்! ஓலைச்சுவடியை எடுத்துக் கொண்டு புறப்படு.''

பரக்கப் பரக்க எழுந்து, ஓலைச்சுவடிக் கட்டை எடுத்துக் கொண்டு முன் நடந்தாள் கமலா. அவளைப் பின்தொடர்ந்தாள் இளவரசி திலகா.

பதுங்கிப் பதுங்கி, மிரட்டுபவர்களை மிரட்டி, ஒளிபவர்களுக்கு ஒளிந்து, தனபாலனின் வீட்டை அடைந்தாள் திலகா.

அந்த நட்ட நடுநிசியில் சிலையில் எழுதப்பட்டிருந்த ஜினருடைய உருவின் முன் உட்கார்ந்திருந்தான் தனபாலன். அவன் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது.

''கவிச்ரேஷ்டரே!''

திடுக்கிட்டுத் திரும்பினான் தனபாலன். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

''இளவரசி!''

''இந்தாருங்கள், தங்களுடைய காவியம்...?''

''என்ன, என்னுடைய காவியமா...?''

''ஆம்! என் தந்தையின் சார்பில் நான் தங்களை வேண்டுகிறேன். அவரைக் கோபிக்காதீர்கள். தங்களுடைய காவியத்தை அன்றாடம் கேட்டு, அதற்கு ஒரு பிரதி எடுத்து வைப்பது என் வழக்கம் அதுதான் இது.''

''இளவரசி! இளவரசி! தங்களுக்கு நான்...'' சொல்ல முடியாமல் திணறினான் தனபாலன்.

''தாங்கள் என்னை மறக்காமல் இருந்தால், அதுவே போதும்.''

''இளவரசி! தங்களை நான் மறப்பதா..? என் காவியத்துக்கே தங்கள் பெயரைச் சூட்டி விடுகிறேன்.''

அவன் ஒரு கவியாகவேதான் பேசிக் கொண்டிருந்தான். அவள் எதை மனத்தில் கொண்டு அப்படிச் சொன்னாள் என்று அவனால் புரிந்து கொள்வதற்கு முடியவில்லை.

அவளும் அதற்குமேல் தன் உள்ளத்தை வெளிப்படுத்தவில்லை.

'கவிஞரே! மிகவும் நன்றி. தாங்கள் இனி இங்கு இருக்காதீர்கள். காவியத்துடன் எங்கேயாவது போய் விடுங்கள்.''

''உத்தரவு, இளவரசி! இனிமேல் என் காவியமும் கதாநாயகியும் தங்கள் பெயரால் திகழ்வார்கள்.''

'நன்றி''—இவ்வளவுதான் சொன்னாள் இலகா. அடுத்த கணம் வெறிபிடித்தவள் போல அங்கிருந்து ஓடி விட்டாள் அவள்.

அவள் என்ன பேசினாள், ஏன் ஓடினாள் என்று அறிய அந்தக் கவிஞன் முயலவில்லை. தனக்குத் திரும்பத் ''திலகா'' கிடைத்து விட்டாள் என்று நிம்மதியாக அன்றிரவே அந்நகரை விட்டுப் புறப்பட்டான் தனபாலன்.

அதனால், நமக்கு ஒரு ''திலக மஞ்சரி'' என்ற காதற் கதை கிடைத்தது. ஆனால் தனபாலனுக்குத் திலகா கிடைக்கவும் இல்லை; அதை அவன் உணரவும் இல்லை.

[வடமொழியிலிருந்து]




# மலைச்சாரல் மாதவி

"அன்பே!"

"ஆருயிரே!"

"நீ இதழ்களை விரித்துச் சிரிக்கும் செந்தாமரை; நான் அதைச் சுற்றிச் சுற்றி வந்து மொய்க்கும் கருவண்டு!"

"நீங்கள் பொற் கிரணங்களை அள்ளி வீசும் ஆதவன்; நான் அதிலே உடல் சிலிர்க்கும் ரோஜா மலர்."

இதைப்போன்ற காதல் வசனங்கள் இந்த நாடகத்தில் கிடையாது.

"யோவ்! என்னய்யா நம்ம கைலேயே ஒன் வேலையைக் காட்டறியே, கையே புடிச்சி ஒரு தம் கட்டி இஸ்துக்கின்னே போயி இன்ஸ்பெக்டர் ஐயாகிட்டே 'மாமியார் ஊட்லே தள்ளு'ன்னுவேன். தெரிஞ்சுக்க!"..

ஹாஸ்யம் என்ற பெயரிலே எழுதப்படும் இது போன்ற கொச்சை மொழிகளும் இந்த நாடகத்தில் கிடையவே கிடையாது.

மலைச்சாரல் மாதவியில் புதுமைகள் பல இருக்கக் காண்கிறோம். ஆனால் அத்தனையும் சிரமப்படாமல் இயற்கையாக, சரளமாகத் தோன்றுகின்றன. ஹாஸ்யமும் காதலும் துண்டாகத் தனித்து நிற்காமல் நாடகம் போகிற போக்கிலேயே இணைந்து வருகிற அழகு சொல்லி முடியாது.

ஸ்ரீமதி ஆனந்தி எழுதிய மலைச்சாரல் மாதவியைக் கல்கியில் வாரா வாரம் படித்து வாசகர்கள் மகிழ்ந்திருப்பார்கள். அந்தக் கதையைத் திருவல்லிக்கேணி நுண்கலைக்கழகத்தார் நல்ல முறையில் நாடகமாக்கி இம் மாதம் 16ந் தேதி ரஸிக ரஞ்சனி சபையில் அரங்கேற்றினார்கள்.

சிவசங்கரன் ஒரு நூதனக் கதாநாயகன். 'கல்யாணம் வேண்டாம்' என்று சொல்லியே காலங்கடத்திவிட்ட நடுத்தர வயதினர். மாஜிஸ்திரேட்டாக வேலை பார்க்கக் கழுகு மலைப் பிரதேசத்துக்கு வரும்போது மலைச்சாரலிலே மாதவியைப் பார்த்துக் காதல் கொள்கிறார். காதலித்தவுடன் என் கண்ணுக்குக் கண்ணான அன்பே' என்றாவது 'இன்னுயிரே' என்றாவதுபேசுகிறாரா? அதுதான் கிடையாது. பேந்தப் பேந்த விழிக்கிறார். காதலை எப்படி அவளிடம் சொல்வது என்று தெரியாமல் தவியாகத் தவிக்கிறார். திரு எஸ். ஆர். கிருஷ்ணசாமி கதையை நாடகமாக்கியதோடு சிவசங்கரனாக நடித்தும் இருக்கிறார்.

கதைகளிலே மாதவியைப் போன்ற கதாநாயகியைக் காண்பது அரிதாக இருக்கலாம். ஆனால் வாழ்க்கையில் எத்தனையோ மாதவிகள் இருக்கிறார்கள். தாய் தகப்பனை இழந்த அவள் தனது தம்பிக்காகவே வாழ்கிறாள். அவன் படித்துப் பட்டம்பெறத் தான் உழைக்கிறாள். அவள் உழைப்பின் பயனைத் தம்பி கருணாகரன் அனுபவிக்கும் போது மாதவிக்குக் கல்யாண வயது தாண்டி நீண்ட நாட்கள் ஆகிவிட்டன! திரு ஆர். சீனிவாசகோபாலன் மாதவியாகத் தோன்றுகிறார்.

கருணாகரன் மற்றும் ஒரு விசித்திரமான கதாபாத்திரம். முன்கோபக்காரன், ஆனால் குழந்தை உள்ளம் படைத்தவன். இந்த இரண்டு குணாதிசயங்களும் மாறி மாறிச் செயல்படும் போது பிரமிப்பே உண்டாகிறது. மிகக் கடினமான இந்தப் பாத்திரத்தை ஏற்று அலட்சியமாக நடித்து 'சபாஷ்' வாங்கி விட்டார் திரு வீரராகவன்.

நாடகத்தைத் திறம்பட டைரக்ட் செய்தவர் திரு என்.எஸ். நடராஜன். அவரே மில் அதிபர் விஜயராகவனாகத் தோன்றிச் சக்கைப் போடு போடுகிறார். தமது அருமை மனைவியை 'அடியே, அம்முகுட்டி!' என்று அழைத்து வம்புச் சண்டைக்கு இழுக்கும் காட்சி; உதவாக்கரை கோவிந்தனைச் சாப்பிட உள்ளே அனுப்பும் இடம்; எல்லாமே 'ஜோர்'தான்.

கருணாகரனின் காதலி ஜயந்தியாக நடிப்பது ஒரு பெண்மணி அல்ல, 'ஆண்மணி' தான் என்பதை அவர் நடனமாடும் போதுதான் கண்டுபிடிக்க முடிகிறது. கிருஷ்ணன் குட்டியாகவும், அச்சுதனாகவும் கச்சிதமாக நடித்திருக்கிறார்கள், கிட்டாவும், மணியும்.

இப்போதெல்லாம் தமிழ் நாட்டில் மூலைக்கு மூலை அமெச்சூர் நாடகங்கள் நடப்பதைப் பார்க்கிறோம். அவற்றில் பல நாடகங்கள் 'அமெச்சூர்' என்ற நிலையிலே வைத்துப் பார்க்கும்போது முதல் தரமாக அமைந்து விடுகின்றன. மலைச்சாரல் மாதவியும் முதல் தரத்தை எட்டிப் பிடிக்க முயல்கிறது. அதில் முழு வெற்றி காண வேண்டுமானால் ஒரு அடிப்படை உண்மையை உணர வேண்டும். அது 'புத்தகத்தில் படிப்பது வேறு, மேடையிலே பார்ப்பது வேறு' என்பதுதான். புத்தகத்தில் படிக்கும்போது மிகமிக சுவாரஸ்யமாக இருக்கும் பலபகுதிகள் மேடையில் சோபிப்பதில்லை. நாடகத்தின் கடைசிப் பகுதியில் கவனம் செலுத்தி ஏற்றவாறு மாற்றி யமைத்தார்களேயானால் நிச்சயம் முதல்தரமாக அமையும்.

## 13. புரஞ்ஜனன் கதை

பிரசேதர்கள் தவம் செய்து கொண்டிருக்கையில், நாரதர் அவர்களுடைய தந்தையான பிராசீன பர்ஹிஸைக் காணச் சென்றார். அவரிடம் "அரசே! கர்மாவினால் எந்த நலத்தைத் தேடுகின்றீர்? துன்பத்தை அழிக்கவும் நன்மையை நல்கவும் அவை திறமற்றவை" என்று கூறினார். அதற்கு அரசன் "கர்மாவில் கிடந்து உழலும் எனக்கு அழியாத சுகம் என்ன என்பது தெரியவில்லை. ஆகையால் உலக வியவகாரங்களால் கட்டுண்டவனுக்குத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் வழி என்ன என்பதை எடுத்துரைப்பீர்" என்று வேண்டினார்.

நாரதர் அதற்குப் பின்வருமாறு பதில் உரைத்தார்: "மன்னரே! வேள்விக்கு வேண்டி எண்ணில் அடங்காத பசுக்களைக் கொன்றிருக்கிறீர். உங்கள் வரவை அவை வேறுலகில் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. உங்களைக் கண்டதும் பாய்ந்து வந்து இரும்பு போன்ற கொம்புகளால் கிழிப்பதற்குச் சித்தமாயிருக்கின்றன."

ஒரு கதை சொல்கிறேன், கேளுங்கள்:

"புரஞ்ஜனன் என்று ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு அவிஞாதன் என்றொரு தோழன்; யாரும் அறியாது செயல் செய்வதால் அவனுக்கு அப்பெயர் வாய்ந்தது. சுகத்துடன் வாழ வசதியான இடம் வேண்டுமென்று புரஞ்ஜனன் பூமியெல்லாம் சுற்றித் திரிந்தான். ஆனால் மனத்துக்கிசைந்த இடமொன்றும் அமையவில்லை. பார்த்த பட்டணமெல்லாம் ஆனந்த வாழ்வுக்குத் தகுதியற்றவை எனக் கண்டு புரஞ்ஜனன் வருந்தினான்.




ஒருநாள், இமயமலையின் தென் சாரலில், ஒன்பது கோட்டை வாயில்களுடன் துலங்கும் ஒரு நன்னகரைக் கண்டான். கோட்டைச் சுவரால் சூழுண்டு, அகழும் பூங்காவனமும், கமான் வளைத்த வாயில்களும், பொன் சிகரம் பொருந்திய வீடுகளும் நிறைந்த அந்நகரை நோக்கி அவ்விளைஞன் வியந்தான். கல்லிழைத்த தரையின் ஒளியால் அவ்விடம் நாகராஜனுடைய தலைநகரமான போகவதியோ என்று ஐயம் தந்தது. மன்றங்களும், வீதிகளும், சூதாடும் வீடுகளும், கடைகளும், ஓய்வெடுக்க விடுதிகளும் அங்கே நிறைந்திருந்தன. பவழப் படிக்கட்டு அமைந்த கொடி மரத்தினின்று கொடிகள் பறந்தாடின.

நகரத்துக்கு வெளியே ஒரு பூந்தோட்டம் இருந்தது. அங்கே மரமும், செடியும் அடர்ந்திருந்தன. வண்டோசையின் எதிரொலியை எழுப்பும் குளங்கள் இருந்தன. அருவியின் நீர்த் துளிகளைத் தாமரைத் தடாகத்தினருகில் தென்றல் வாரித் தெளித்துக் கொண்டிருந்தது. குயில்கள் 'வா' என்று அழைப்பது போல் கூவின. முனிவரைப் போல் மிருகங்களும் அமைதியாய் நின்றன.

அவ்விடத்தில் புரஞ்ஜனன் ஓர் அழகிய பெண்ணைக் கண்டான். அவளுக்குப் பத்து வேலைக்காரர்கள். ஒவ்வொரு வேலைக்காரனுக்கும் நூற்றுக்கணக்கான பெண்டிர். அவளுக்குக் காவலாக ஒரு ஐந்து தலை நாகம். பருவம் முதிராத பெண்மணி. வடிவழகி. மணாளன் வேண்டுமென்று தேடி நிற்கும் மங்கை.

அவளுடையஎழில்வதனத்தில்தெரிந்த பற்களின் வரிசையும், கன்னத்தின் களையும், ஒன்றோடொன்றொத்துக் காதில் துலங்கும் குண்டலங்களும், இடையிலே அணிந்த பொன்னுடையும் தங்கமேகலையும், சத்தமிடும் சலங்கையுடன் பெண்யானை போல் நடையும், மங்கல் மேனியும், புரஞ்ஜனன் மனத்தைக் கவர்ந்தன. இவ்வளவு அழகுடன், பருவத்தைப் பிரகாசிக்கும் இடையில்லாச் சமமான குசங்களைத் தன் முந்தானியால் மூடிக் கொண்டு மன்னவின்முன் தோன்றினாள்.

அன்பினால் அசையும் புருவமென்ற வில்லினின்று கடைக்கண் பார்வை என்று எய்த அம்பினால் அடிபட்ட அரசன், வெட்கி நிற்கும் அப் பெண்ணிடம் பின்வருமாறு பேசினான் :—

"தாமரையின் இதழ் போன்ற கண் படைத்த நீ யார்? யார் பெற்ற பாக்கியம் நீ? நகருக்கு வெளியே என்ன செய்ய வந்தாய்? இந்தச் சேவகரும் பல மங்கையரும் யார்? முன் செல்லும் பாம்புதான் யாது? நீ, நாணத்துக்கு நாயகியான ஹ்ரீதேவியா, அல்லது பரமசிவனின் பாதியான பார்வதியா, வாக்கென்ற வாணியா, அல்லது அவர்மங்கையா? காட்டிலே கணவனை முனியைப் போல் தனியே தேடுகின்ற இந் நால்வரில் நீ ஒருத்தியா? பத்மாவதியேயானால் கை நுனியினின்று தாமரை தவறி விட்டதா? இல்லை, பூமியைத் தொட்டு நிற்பதால் நீ தேவ மாதாக மாட்டாய். வீரனை என்னுடன் கூடி இந்நகரிலே வாழ்வாய். வைகுண்டத்தில் ரமையுடன் கூடிய அச்சுதனைப் போலிருப்போம். ஏற்கனவே உன் கண் பார்வையால் கட்டுண்டஎன்னை, உன் புன்சிரிப்பும், புருவமும் ஒன்று பேசிக்கொண்டு மதனனை என் மீது ஏவுகின்றன. கூந்தலால் மறைந்து வெட்கத்தால் கீழ் நோக்கும் உன் முகத்தால் என்னை ஏறிட்டுப் பார். என்னை ஏற்றுக் கொள்" என்றான்.

இதைக் கேட்ட மங்கையும் மகிழ்ந்தாள். "நம் குலத்தை நாம் அறியோம். பரிவாரங்களைப் பெற்றோரையும் அறியோம். இப்பொழுது இங்கிருப்பதை மட்டும் தான் யாமறிவோம். எமக்காக இப்புரத்தைச் செய்தவரும் யாரோ! இவ் வாண்களும் பெண்களும் என் கூடவே இருப்பவர்கள். நான் உறங்கும்பொழுது இப் பாம்பு கண் விழித்திருந்து இந்நகரைக் காக்கும். வீரனே! உன் வரவு நல்வரவாகுக. என் இனத்தாரின் உதவியால் உனக்குத் தீராத போகங்களைத் தருவேன். ஒன்பது வாயில் நகரத்தை நீ அடைந்து நான் கொடுக்கும் சுகங்களை நூறாண்டு அனுபவிப்பாய். உன்னையல்லால், வேறெவருக்கு நான் ஆனந்தம் அளிப்பேன்? போகத்தில் இச்சையற்ற மதியீனனுக்கா? இல்லறத்தில்தான் அறமும், பொருளும், இன்பமும், மக்கட்பேறும், புகழும், துன்பமுமில்லா வேறுலகும் கிடைக்கும். இதைத்துறவிகள் அறியார். பாம்பெனப் பெருங் கை பொருந்திக் கருணைக் கண் பார்வையும் வாய்ந்து வந்திருக்கும் நீங்களே எனக்கு இசைந்த மணாளன்" என்று மொழிந்தாள்.

இவ்வாறு இருவரும் மனம் கலந்து, நகர் ஏகி நூறாண்டு வாழ்ந்தனர். கோடையில் புரஞ்ஜனன் மங்கையருடன் கூடி விளையாடி நீர்மடுவில் இறங்கினான். அந் நகரத்தின் நாயகன் வெளிநாட்டை அடைவதற்கென்று ஏழு வாயில்கள் மேலும், இரண்டு வாயில்கள் கீழுமாகக் கட்டப்பட்டிருந்தன.



அந்தப்புரம்போனபொழுதெல்லாம், மன்னன் மனைவியையும், மக்களையும் கண்டு களித்துக் காமத்துக்கு ஆளாகினான். அரசி செய்வதைத் தானும் செய்து வந்தான். அவள் குடித்தால் குடிப்பான்; உண்டால் உண்பான். அவனுடன் பாடுவான். கூடவே அழுவான். சிரித்தால் சிரிப்பான். பிதற்றினால் தானும்பிதற்றுவான். அவள் கண்டதையே அவனும் கண்டான். மனைவி மேல் மோகம் கொண்ட மன்னவன் தன் மதி இழந்து ஆண்டி சொற்கேட்டு ஆடும் குரங்கு போல் ஆனான்.

ஒருநாள் வேட்டையாடும் பொருட்டுக்கவசம் அணிந்து வில் ஏந்தித் தேரில் ஏறிக் கொண்டு புரஞ்ஜனன் வெளியேறினான். பஞ்சப்ரஸ்தம் என்ற காட்டில், வேட்டையில் மனம் செலுத்தி, இரக்கத்தைக் கைவிட்டுப் பல விலங்குகளைத் தன் கூரிய அம்புகளால் கொன்றான். முயலையும், காட்டுப் பன்றியையும், காட்டெருமையையும், காளையையும், கரு மானையும், முள்ளம்பன்றியையும் வேட்டையாடி மிக்க களைப்படைந்தான். வீடு திரும்பிக் குளித்து ஆகாரம் அருந்திக் களைப்பாறினான். பிறகு தன் மேனிக்கு நறுமணங்களும் களபமும் பூசிப் பூமாலை அணிந்துகொண்டு, காமம் மேலிட்டவனாய்த் தன் மனைவியைத்தேடினான். அந்தப்புரச் சேடியரை, மனைவியைக் குறித்து வினவினான். "உங்கள் தலைவி எப்பொழுதும் போல் சுகமாக இருக்கின்றனளா? கணவனைக் கடவுளென்று போற்றும் மனைவி இல்லா வீட்டில் அறிவுள்ளவன் எவன்தான் இருப்பான்? கவலை என்ற கடலில் நான் விழுங்கால் என்னைக் கைதூக்கிக் களிக்க வைத்து அடிதோறும் என் மதிக்கு ஒளியைத் தரும் கட்டழகி எங்கே?" என்றான்.

அதற்குச் சேடிமார், "அரசே! தரையில் கிடக்கும் உன் மனைவியைப் பார். ஏன் இந்தக் கோலமோ, நாங்கள் அறியோம்" என்றனர். அலங்கோலமாய்க் கீழே படுத்திருக்கும் தன் மனைவியைக் கண்டு மன்னவன் வருத்தம் கொண்டான். அவளைப் பலவாறு தேற்றினன். தாள் தொட்டு, மடிமேல் வைத்து அணைத்துக் கொண்டு பின்வருமாறு பேசினன்: "பணிவிடை செய்பவரின் தவறைத் திருத்துவதே நலம். பிரபு விதிக்கும் தண்டனையானது சேவகனுக்கு வாய்த்த அருளேயாகும். ஆகவே, கரும்பெனக் கறுத்த கூந்தலுடைய மாதே! அன்பினால் கவிழ்ந்த முகத்தால் உன் அன்பனைப் பார். உன்னை வருத்தினவன் யார்? மூவுலகிலும் தேடிப் பிடித்து அவனைத் தண்டிப்பேன். திலகமின்றிப் புன்முறுவல் நீங்கி, சினத்தால் கருங்கிய வதனமும், கண்ணீரால் நனைந்த கொங்கையும், கோவைச் சிவப்பில்லா உதடும், உன்னிடம் இதுவரை நான் கண்டதில்லையே? தனியே வேட்டையாடச் சென்றதற்கு மன்னித்து விடு. நாடி வரும் கணவனை ஏற்காத மங்கையும் உண்டோ?" என்று குலாவினன்.

இவ்வாறு கணவனைத் தன் வசம் ஆக்கிக்கொண்ட புரஞ்ஜனி, அவனுடன் அநேகம் ஆண்டுகள் ஆனந்தம் அனுபவித்தாள். காம வலையில் கட்டுண்ட மன்னனும் இரவோ பகலோ என்றுகூட அறியாதவனாய் நாளைக் கழித்தான். மனையாளே மகத்தான மோகமென்று எண்ணி மதி இழந்தான். இவ்வாறு இளமைப் பருவம் கணமெனப் பறந்து போயிற்று. நூற்றுக்கணக்கான மக்களைப் பெற்று வாழ்நாளில் பாதியைக் கழித்து விட்டான். பிறகு அவர்களுக்கு மணம் செய்து வைப்பதில் ஊக்கம் அடைந்தான். அவர்களுக்கும் குழந்தைகள் பிறந்தன. வீடென்றும் வாயிலென்றும் குடிகளென்றும் பொருளென்றும் பல்வேறு பற்றுதல்கள் புரஞ்ஜனனிடம் ஊன்றி விட்டன. தனது நன்மையைக் கருதாமல் காலம் கழிக்கும் அரசனுக்குச் சிறிது சிறிதாக, மங்கையர் மேல் மையல் கொண்டவருக்கு வெறுப்பைத் தரும் முதுமை தோன்றியது.

சண்டவேகன் என்று பெயர் கொண்ட ஒரு கந்தர்வ ராஜன் இருந்தான். அவனுக்கு முந்நூற்றறுபது வேலையாட்கள்; கறுப்பும் வெளுப்புமாகக் கணவருடன் கூடின முந்நூற்றறுபது கந்தர்வப் பெண்கள். இவர்கள் அனைவரும் சேர்ந்து புரஞ்ஜனனுடைய தலைநகரைத் தகர்க்கத் துணிந்தனர். ப்ரஜாகரன் என்ற பாம்பு அவர்களை எதிர்த்துத் தனிமையில் நூறாண்டு போராடியது. ஆனால் இறுதியில் அதுவும் தளர்ச்சி அடைந்தது.

நிற்க, காலதேவனுக்கு ஒரு பெண் இருந்தாள். அவளும் கணவனைத் தேடி மூவுலகும் திரிந்து வந்தாள். ஆனால் ஒருவரும் அவளை விரும்பவில்லை. அமங்கலமே பொருந்திய அவளுக்கு "துர்பகா" என்று பெயர்.

ஒரு சமயம் நான் (நாரதர்) பிரம்மலோகத்திலிருந்து பூமியில் இறங்கின தருணம், என்மேல் மோகம் கொண்டு, நான் துறவி என்று தெரிந்தும், என்னை அடைய விரும்பினள். மறுத்த என்மீது பெருஞ் சாபமொன்றை இட்டாள். "முனியே! என்னைத் தள்ளிவிட்ட நீங்கள் ஓரிடத்திலும் நெடு நாள் தங்கமாட்டீர்" என்றாள். பிறகு என் சொல்லைக் கேட்டு, பயமென்ற யவனராஜனைக் கணவனாக வரித்தாள். ஆனால் "பயம்" என்ற அரசன் அவளைத் தான் ஏற்றுக் கொள்ளாமல் 'இவ்வுலகில் அனைவரையும் நீ மறைவாக இருந்து அனுபவிப்பாய். இதோ இருக்கும் என் தம்பி 'ப்ரஜ்வாரன்' என்பவனும் உனக்கு உதவியாக இருப்பான். இவ்வாறு நாம் மூவரும், எனது சேனையுடன் கூடி, கண்ணுக்குப் புலப்படாமல் மானிடருள் திரிந்து அனைவரையும் அழிப்போம்" என்றான்.

துர்பகாவுடனும் ப்ரஜ்வாரனுடனும் கூடிப் பயம் என்ற அரசன் இப் பூமியில் திரிந்து வந்தான். ஒரு நாள் அவர்கள் புரஞ்ஜனனுடைய தலைநகரை முற்றுகை



போட்டனர். காலனின் மகள் அந்நகரைத் தன் வலிவால் வசப்படுத்தினாள். நகரவாயில்கள் வழியாக உள்ளேறி யவனர்கள் குடிகளைப் பலவாறு துன்புறுத்தினார்கள். புரஞ்ஜனனும் துயரத்துக்கு ஆளானான். கந்தர்வராலும் யவனராலும் தன் பதவியினின்று தள்ளப்பட்டு, பகுத்தறிவைப் பறிகொடுத்து, கூடி நிற்கும் மைந்தரும், மந்திரிகளும் அவமதிக்க மனைவியின் ஆசையை இழந்து காலனின் மகள் வலையில் அகப்பட்டுப் புரஞ்ஜனன் என்ன செய்வது என்று தெரியாமல் திண்டாடினான். தன் நகரை விட்டு வெளியேற எண்ணம் கொண்டான். இதனிடையே ப்ரஜ்வாரன்நகரத்தை எரிக்க ஆரம்பித்தான்.

ப்ரஜாகரவ என்ற பாம்பு தன்னால் இயன்ற அளவு போர் செய்தது. ஆனால் ப்ரஜ்வாரனுடன் அதனால் எதிர்த்துப் போராட முடியவில்லை. பாம்பு தப்பித்து ஓடிவிட முயன்றது.

புரஞ்ஜனனுக்குத் தன் மனைவியை விட்டுப் பிரிய மனம் வரவில்லை. தன் மக்களையும் பொருளையும் வீட்டையும் பற்றியே எண்ணி வருந்தினான். ஆனால் யவனர்கள் அவனைத் தங்கள் நாட்டுக்கு இழுத்துச் சென்றார்கள். அங்கே இவன் முன்பு யாகங்களில் கொன்ற பசுக்கள் இவனைத் தாக்கின. மனைவியின் மீதே மனத்தைச் செலுத்தின புரஞ்ஜனன் மறுபடியும் விதர்ப்ப தேசத்து மன்னனுக்கு மகளாகப் பிறந்தான். வீர கல்கமாக மலயத்வஜன் என்ற பாண்டியனை இப்பெண் மணந்தாள். இவர்களுக்குக் கருவிழி வாய்ந்த ஓர் பெண்ணும் ஏழு மைந்தர்களும் பிறந்தார்கள். அழகு மிகுந்த அப் பெண்ணை அகஸ்தியர் மணந்து கொண்டார்.

பூமியைத் தன் ஏழு மைந்தருக்கும் அளித்து விட்டு மலயத்வஜன் கண்ணனைக் குறித்துத் தவம் செய்யும் பொருட்டுக் குலாசலம் என்ற மலையை அடைந்தான். சந்திரனைப் பின் தொடரும் கிரணம் போல் அவன் மனைவியும் அவனுடன் சென்றாள். அரசன் நூறாண்டு தவம் செய்து கடவுளென்ற மகிழ்ச்சியிலே மூழ்கினவனுகித் தான் என்ற தத்துவத்தை அறிந்து முக்தியில் முடிவுற்றான். கனிந்திருக்கும் நெருப்பருகில் எரிந்துநிற்கும் கடரெனத் தன் கணவன் அருகிலேயே இருந்து பணிவிடை செய்து வந்த விதர்ப்பன் மகளும், அவன் இறந்ததும், பரிதவித்துப் புலம்பி, தானும் சிதை ஏறி உயிர் மாய்க்கத் துணிந்தாள்.

ஆனால் அச் சமயம் அவள் முன் ஒரு அந்தணன் தோன்றிப் பின்வருமாறு சொன்னான் :—

"நீ யார்? யாருடைய மகள்? சிதையில் கிடக்கும் இந்த மனிதன் யார்? முன்னாளில் என்னுடன் நட்புறவாடினது நினைவு இருக்கிறதா? அவிக்ஞாதன் என்ற நண்பனை விட்டுச் சிற்றின்பத்தைத் தேடிச் சென்றனையே. ஆதியில் நாம் இருவரும் மானசப் பொய்கையில் அன்னங்களாக இருந்தோம். அதை விட்டகன்று மண்ணுலகை வாஞ்சையுடன் வருந்தி அழைத்தாய். அங்கே ஒரு மங்கையால் நிர்மாணிக்கப்பட்ட மாளிகையில் இன்புற்றிருந்து, உன்னுடைய உண்மையான தெய்வீகத்தை மறந்து, இந்தப் பரிதாபமான கோலத்தை அடைந்திருக்கிறாய்.

"நீ விதர்ப்ப ராஜனின் மகளும் அல்ல; இம் மானிடன் உன் கணவனும் அல்ல; புரஞ்ஜனியின் பதியும் அல்ல. என்னுடைய மாயையினால் அப்பொழுது ஆணென்று எண்ணினாய்; இப்பொழுது கற்புடையாப் பெண்ணென்று எண்ணுகிறாய். உண்மையில் நாம் இருவரும் அன்னங்கள். நானும் நீயும் ஒன்றேயாவோம். புரிந்தவருக்குப் பேதம் இல்லை. கண்ணாடியிலும் கண்ணிலும் காணும் தான் வேறானவனா?" என்றான்.

இவ்வாறு துணை அன்னத்தால் உபதேசம் பெற்றதும் மானசப் பொய்கையிலிருக்கும் அன்னத்துக்குத் தன் தன்மை தெளிந்து விட்டது.

# லட்சிய பூர்த்தியின் வாயிலிலே

கடந்த அக்டோபரில் ஜாம்ஷெட்பூரிலே ரூ 70 மில்லியன் செலவில் புதிய ப்ளாஸ்ட் ப்வர்னெஸை இயங்கச் செய்தது. உற்பத்திச் சக்தியை ஆண்டொன்றுக்கு இரு மில்லியன் டன்னுக்கவென்று 1955 டிஸம்பரில் டாடா ஸ்டீல் தொடங்கிய விரிவான திட்ட பூர்த்தியின் ஆரம்பமாகும்.

உலகிலுள்ள மிகப் பெரியவைகளில் ஒன்றான இப்புதிய ப்ளாஸ்ட் ப்வர்னெஸ், நாளொன்றுக்கு 1,650 டன் இரும்பு உற்பத்தி செய்யும். இதற்கு முன்னர், ஏழு ஓபன் ஹெர்த் ப்வர்னெஸ்களுள்ள மூன்றாவது ஸ்டீல் மெல்டிங் ஷாப் பூர்த்தியாக்கப் பட்டது. ஆண்டொன்றுக்கு இது மட்டுமே 1.3 மில்லியன் டன் ஸ்டீல் இங்காட்ஸ் உற்பத்தி செய்யும். தவிர, ரூ 100 மில்லியன் செலவில் இரு மில்லியன் டன் பிரைமரி ரோலிங் சக்தி கொண்ட புதிய ப்ளூமிங் மில் இப்பொழுது இயங்கி வருகிறது.

தாதுப் பொருள் சேகரிப்பதிலிருந்து உருக்கு ரோலிங் தயாரிப்பது வரையிலுமுள்ள ஒவ்வொரு நிலையின் இயக்கமும் பூரணமாகி, விரிவான திட்டம் 1958 இறுதியில் பூர்த்தி பெறும். 1955-60 இவ் ஐந்தாண்டுகளில் விரிவான திட்டத்திற்கும், வருடா வருடம் இயந்திரங்களைப் பழுது பார்ப்பதற்கும் புதிய இயந்திரங்கள் அமைப்பதற்குமாக டாடா ஸ்டீலின் முதலீடு ரூ 1,330 மில்லியனாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. இது, தனியார் தொழில் ஸ்தாபனங்களின் மொத்த முதலீட்டின் ஐந்தில் ஒரு பங்கிற்கு அதிகமானது.

## டாடா ஸ்டீல்

இரு மில்லியன் டன் உற்பத்திற்கு



TN 3186

The Tata Iron and Steel Company Limited

# பாண்டிமாதேவி

நான்காம் அத்தியாயம்

## கோட்டாற்றுக் குணவீர பண்டிதர்

இடையாற்றுமங்கலத்தில் கொள்ளை போன செய்தியையும், கரவந்தபுரத்திலிருந்து வந்த போர்ச் செய்தியையும் மகாமண்டலேசுவரர் எவ்வளவுக்கெவ்வளவு இரகசியமாகப் பாதுகாக்க வேண்டுமென்று கருதினாரோ, அவ்வளவுக்கு அவர் நினைக்குமுன்பே அவைபொதுவாக வெளியில் பரவி விட்டிருந்தன. இடையாற்றுமங்கலத்திலிருந்து அம்பலவன் வேளானும், கரவந்தபுரத்திலிருந்து மானகவசனும் செய்திகளை அரண்மனைக்குள் கொண்டு வந்தபின்பே அவற்றைப் பாதுகாக்க் வேண்டுமென்ற அக்கறை அவருக்கு உண்டாயிற்று. ஆனால் அந்தச் செய்திகள் அரண்மனை எல்லைக்குள் வந்து சேருவதற்குமுன்பே வெளியில் பரவி விட்டன என்பதை அவர் உணரவில்லை.

இடையாற்றுமங்கலத்து நிகழ்ச்சி மறுநாள் பொழுது புலரும்போதே சுற்றுப் புறங்களுக்கு எட்டி விட்டது. போர் வரப் போகிறது என்ற செய்தியைச் சூழ்நிலை இருக்கிற விதத்தால் மக்களே அனுமானித்துக் கொள்ள முடிந்தது. ஆகவே செய்திகளை வெளியில் தெரியாமல் ஒடுக்கி வைக்க வேண்டுமென்ற ஏற்பாடு அவர் புரிந்து கொள்ள முடியாதபடி அவருக்குப் பெருத்த ஏமாற்றத்தை அளித்து விட்டது.

'அரசுரிமைப் பொருள்கள் கொள்ளை போய் விட்டன' — என்ற செய்தியை அடுத்து – வசந்த மண்டபத்துத் துறவியைக் காணவில்லை – என்று அம்பலவன் வேளான் கூறுவான் என்று அவர் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. குமாரபாண்டியன் தன்னிடமே இரகசியமாகத் தங்கியிருப்பதாகவும், உடனே அவரை அரண்மனைக்கு அழைத்து வருவதாகவும் மகாராணியார் முன்னிலையில் அவர் ஒப்புக் கொண்டிருந்தார். நாளை நடக்கப் போவதை மட்டுமல்ல, நாற்பது ஆண்டுகளுக்குப் பின் என்ன நடக்க முடியும் என்று அனுமானிக்கிற அளவுக்கு அறிவும், சிந்தனையும் உள்ள அவரே இந்த இடத்தில் புள்ளி பிசகி விட்டார். இடையாற்றுமங்கலம் மகா மண்டலேசுவரருடைய கணக்கு தப்புக் கணக்காகி விட்டது.

குமார பாண்டியன் இராசசிம்மன் தன்னை மீறி எங்கும் எதற்கும் போகத் துணிவான் என்று அவர் நினைத்ததில்லை. அவன் மீறிச் செல்ல வழியின்றித் தம் அருமைப் புதல்வியையே துணை வைத்து விட்டு வந்தார். எல்லோரையும், ஏமாற்றி விட்டுத் தனது முன்னோர் செல்வத்தையும் இளப்பிக் கொண்டு போய் விட்டான் அவன். அவன் தான் அவற்றைக் கொண்டு போயிருக்க வேண்டும் என்பதுகூட



நடந்த நிகழ்ச்சிகளை ஒவ்வொன்றாக இணைத்துப் பார்த்து அவராக அனுமானித்துக் கொண்டது.

இப்போது மகாராணியாருக்கு என்ன பதில் சொல்வதென்ற திகைப்பு அவருக்கு ஏற்பட்டது. எல்லோரையும் அனுப்பிவிட்டு அவர் மறுபடியும் மகாராணியாரைச் சந்திக்கச் சென்றார். மகாராணியும் அவரையே எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பது போல் அங்கேயே இருந்தார்.

"வாருங்கள்! நீங்கள் குமாரபாண்டியன் இராசசிம்மனைப் பற்றி நாம் தனிமையில் ஏதோ பேச வேண்டுமென்று கூறி விட்டுப் போயிருந்தீர்கள். அதனால்தான் வேறு எங்கும் போகாமல் ஒவ்வொரு கணமும் உங்களை எதிர்பார்த்து இங்கேயே காத்துக் கொண்டிருக்கிறேன்."

மகாராணியின் வார்த்தைகளில் தம் புதல்வனைப் பற்றி அறியக் காத்திருக்கும் ஆவல் தொனித்தது.

நம்பி எதிரே யிருந்த இருக்கையில் அமர்ந்தார். நல்ல கண்ணாடியில் சிறிது புகை படிந்தாற்போல அவர் முக பாவம் ஒளி மங்கியிருந்தது. எதையோ நினைத்துப் பெருமூச்சு விட்ட பின் மகாராணியாருக்கு மறுமொழி கூறத் தொடங்கினார்.

"தேவீ! குமார பாண்டியரை எந்தெந்த உயர்ந்த நோக்கங்களோடு இடையாற்றுமங்கலத்தில் என்னிடம் மறைவாகக் கொண்டு வந்து தங்கச் செய்திருந்தேனோ, அவற்றுக்கு முற்றிலும் மாறாக அவர் நடந்து கொண்டு விட்டார்."

"அப்படி என்ன செய்தான் அவன்?"

"அதைத் தங்களிடம் மட்டும்தான் நான் சொல்ல முடியும். எல்லாருக்கும்தெரிந்தால் குமார பாண்டியருடைய பெருமையையே நாம் விட்டுக் கொடுத்தது போலாகி விடும்."

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் பெரிதாக ஏதோ செய்து விட்டான் போல் அல்லவா தோன்றுகிறது!"

"பெரிதுதான்! நேற்றிரவு நம்முடைய பாண்டிய மரபின் மாபெரும் அரசுரிமைச் சின்னங்களை கொள்ளை போனதாக இப்போது செய்தி வந்ததே; அதைச் செய்தவர் இடையாற்றுமங்கலத்தில் வந்து தங்கியிருந்த தங்கள்குமாரர்இராசசிம்மனேதான்."



"என்ன? இராசசிம்மனா அப்படிச் செய்தான்? இங்கிருந்து கொண்டே அவன்தான் அதைச் செய்தானென்று நீங்கள் எதைக் கொண்டு முடிவு செய்தீர்கள்?" —மகாராணியின் முகத்தில் வியப்பும் கலவரமும் பதிந்தன.

"இன்று நாம் எல்லோரும் கூடியிருந்த இடத்தில்தான் இடையாற்றுமங்கலத்துப் படகோட்டி இங்கு வந்து அந்தச் செய்தியைச் சொன்னான். கொள்ளை போன செய்தியோடு வசந்த மண்டபத்திலிருந்த துறவியைக்காணவில்லை என்றும், அன்று பகலில் அவரை யாரோ தேடி வந்திருந்ததாகவும் அவன் கூறினான். நீங்கள் எல்லோரும் 'கொள்ளை போயிற்று' என்ற அளவிலேயே அதிர்ச்சியடைந்து அதையடுத்து அவன் கூறிய குறிப்புக்களை ஊன்றிக் கவனிக்கவில்லை. வசந்த மண்டபத்தில் தங்கியிருந்த துறவிதான் தங்கள் புதல்வர் குமார பாண்டியர் என்பதை முன்பே தங்களிடம் குறிப்பிட்டுள்ளேன்."

மகாராணி வானவன்மாதேவி எதுவும் சொல்லத் தோன்றாமல் அவருடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"தேவி! கொள்ளை போன செய்தி வேண்டுமானால் என் முன்னெச்சரிக்கையையும் மீறி எங்கும் பரவியிருக்கலாம். ஆனால் அதைச் செய்தவர் குமார பாண்டியர்தான் என்பது இப்போதைக்கு என்னையும், தங்களையும் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்க முடியாது. ஒரு வேளை என்னுடைய அந்தரங்க ஒற்றனை நாராயணன் சேந்தனுக்கும், தளபதிக்கும் சிறிது சந்தேகம் இருக்கலாம். வெளிப்படையாக



இன்னார்தான் என்று அவர்களுக்கும் தெரிந்திருக்க நியாயமில்லை.

"மகா மண்டலேசுவரரே! குமார பாண்டியன் எந்த நோக்கத்தோடு இதைச் செய்தானோ? ஆனால் 'அவன் தான் இதைச் செய்தான்' என்ற இந்தச் செய்தி வெளியே பரவினால் பொது மக்களிடையே அவனைப் பற்றி என்னென்ன இழிவான பேச்சுக்களெல்லாமோ பேசி விடுவார்கள். செயலைக் கொண்டு மனிதனை அளக்கிறவர்களே எங்கும் நிறைந்துள்ள உலகம் இது. எண்ணங்களையும் மனப்போக்கையும் மதிப்பிட்டுப் பார்க்க மாட்டார்களே! இதுவும் என் போதாத காலந்தான்!" மகாராணியின் குரல் தழுதழுத்தது.

"தங்களுக்கு அந்தப் பயம் தேவையில்லை! குமார பாண்டியரின் பெயருக்கு எந்தவிதமான களங்கமும் ஏற்படாமல் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது."



"மகாமண்டலேசுவரரே! உங்களுக்குத் தெரியாததில்லை. இவ்வளவு துன்பங்களையும், சோதனைகளையும் தாங்கிக் கொண்டு நான் வாழ்ந்து கொண்டிருப்பதெல்லாம் அவனை நம்பித்தான். மறுபடியும் அவன் முகத்தைப் பார்க்க வேண்டும். அவனை இந்த நாட்டில் அரசனாக உலாவச் செய்ய வேண்டும். என் மகன் காலத்தில் பாண்டிய அரச மரபு இருண்டு அழிந்தது என்ற பழமொழி எதிர்காலத்தில் வந்துவிடக் கூடாதே என்பதுதான் என் கவலை. ஐயோ! இந்தப் பிள்ளை இப்படி என்னென்னவோ செய்யத் தகாததைச் செய்துவிட்டு நெருங்கி வராமல் விலகி விலகி ஓடிக் கொண்டிருக்கிறானே?"

பேசிக் கொண்டே வந்த மகாராணி மெல்லிய விசும்பலோடு பேச்சை நிறுத்தினார். கண்கள் கலங்கிக் கண்ணீர் துளித்து விட்டது. முகத்திலிருந்த கலவரத்தைப் பார்த்தபோது வாய்விட்டு அழுது விடுவாரோ என்று மகாமண்டலேசுவரர் பயந்தார். அந்தப் பெருந்தேவி உள்ளங் குமுறி அழுத காட்சியைப் பராந்தக பாண்டியர் அமரபதவி அடைந்தபோது ஒரு முறைதான் மகாமண்டலேசுவரர் பார்த்திருக்கிறார். "இந்த அரசப்பெருங்குலத்து அன்னையை எதிர்காலத்தில் இனி என்றுமே அழவிடக் கூடாது" என்று அப்போது தம் பொறுப்புடன் எண்ணி வைத்திருந்தார் மகாமண்டலேசுவரர்.

"தேவி! இதென்ன? இப்படித் தாங்களே உணர்ச்சி வசப்படலாமா? யாருடைய கண்ணீரையும் எங்களால் பார்த்துக் கொண்டிருக்க முடியும்! ஆனால் மகாராணியாகிய தாங்களே கண்ணீர் சிந்தினால் என்ன செய்வது?"

"கண்ணீர் சிந்தாமல் வேறென்ன செய்வது? வடக்கு எல்லையில் 'போர் இதோ வந்து விட்டது' என்கிறார்கள். இராசசிம்மன் வருவான் என்று நம்பிக் கொண்டிருந்தேன். அவனோ தன்னோடு போகாமல் இந்த அரசுரிமைப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு அசட்டுத்தனமாக என்னென்னவோ செய்து விட்டுப் போயிருக்கிறான். எனக்கு ஏது நிம்மதி? என் தாய் கன்னியாகுமரி அன்னையை அடிக்கடி வழிபட்டு என் துயரங்களை மறக்க முயலலாம் என்றால் நான் வெளியில் புறப்படுவதே என் உயிருக்கு ஆபத்தாக இருக்கிறது."

"கவலைகளையெல்லாம் எனக்கு விட்டு விடுங்கள்! அவற்றுக்காகவே நான் இருக்கிறேன். தங்களைப் போன்றவர்களுக்கு அதிகக் கவலைகள் இருந்தால் நிம்மதி இராது. என்னைப் போன்றவனுக்கு அதிகக் கவலைகள் சூழும்போதுதான் சிந்தனை நிம்மதியாகத் திட்டமிடும். உங்கள் மனம் குழம்பியிருக்கிறது. இப்போது உங்களுக்குத் தனிமை தேவை. நான் பின்பு வந்து சந்திக்கிறேன்."

மகாமண்டலேசுவரர் அங்கிருந்து புறப்பட்டு விட்டார். துயரம் குமுறிக் கொண்டுவரும்போது, மிகவும் வேண்டிய மனிதர் எதிரில் இருந்தாலே அழவேண்டும் போலத் தோன்றும். அழுது தணித்துக் கொள்ளவும் துணிவு இருக்காது. தனிமையில் விட்டு விட்டால் ஒருவாறு தணியும் என்று கருதியே அவர் அங்கிருந்து சென்றார். அவர் சென்றபின்பும் நெடுநேரமாக மகாராணி அமைதியாகக் கண்ணீர் வடித்தவாறு அதே இடத்தில் வீற்றிருந்தார். அமைதியோ, நிம்மதியோ ஏற்படுகிற வழியாயில்லை. கவலைகளை மறக்க, அல்லது மறைக்க ஏதாவது புதிய பேச்சு வேண்டியிருந்தது. கோட்டாற்றிலுள்ள சமணப் பள்ளியில்

குணவீரபண்டிதர், கமலவாகன பண்டிதர் என்று இரண்டு சமணத் துறவிகள் இருந்தனர். அவர்கள் எப்போதாவது சில சந்தர்ப்பங்களில் மகாராணியாரைச் சந்திக்க வருவதுண்டு. வந்தால் நீண்ட நேரம் சமயசம்பந்தமான தத்துவங்களைப் பேசிவிட்டுப் போவார்கள். அவர்கள் வந்து பேசிவிட்டுச்சென்ற பின்பு அதைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் மனத்தில் அழுக்கைத் துடைத்து வாசனை பூசியமாதிரி ஒரு சாந்தி, ஒரு நம்பிக்கை வாழ்க்கை முழுவதும் நல்ல விளையாட்டு என்ற பயமற்ற ஒரு எண்ணம் — ஏற்படும். இந்தமாதிரி நாநலம் படைத்தவர்கள் உலகில் அத்திபூத்தாற்போலத்தான் அகப்படுவார்கள். வாழ்க்கையில் அவநம்பிக்கை ஏற்படும்படி பேசி விட்டுச் செல்பவர்களே பெரும்பாலோர்.

பேச்சைப் பொறுத்தமட்டில் மகாராணிக்கு எடை போட்டுப் பார்த்த அனுபவம் உண்டு. இடையாற்று மங்கலம் நம்பி பேசி விட்டுப் போனால் கேட்டுக் கொண்டிருந்தவர் மனத்தில் அவரை எண்ணிப் பிரமிக்கும்படி செய்து விட்டுப் போவார். தளபதி வல்லாள தேவன் வெடிப்பாகப் பேசி உணர்ச்சி யூட்டுவான். அதங்கோட்டாசிரியர், பவழக்கனிவாயர் போன்ற பண்டிதர்கள் காரண காரிய ரீதியாக அழுத்தம் படப் பேசுவர். நாராயணன் சேந்தன் குதர்க்கமும் சிரிப்பும் உண்டாக்குவான்.

ஆனால் கோட்டாற்றுச் சமணத்துறவியின் பேச்சு இவற்றோடு மாறுபட்டது. வாடும் பயிருக்குப் பருவமறிந்து பெய்து தழைக்கச் செய்யும் மழை போன்றது அது. சில துயரமான நேரங்களில் மகாராணியே சிவிகையை அனுப்பி அவரை வரவழைப்பதுண்டு. சமீபத்தில் சிறிது காலமாக அந்தத் துறவி யாத்திரை போயிருந்ததால் அரண்மனைப் பக்கம் வரவில்லை. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் அவர் திரும்பி வந்திருப்பதாகக் கூறினார்கள். நிம்மதியற்ற அந்தச் சூழ்நிலையில் அவரை வரவழைத்துப் பேசினால் மனத் தெளிவு ஏற்படுமென்று அவருக்குத் தோன்றியது. உடனே சிவிகையை எடுத்துப் போய் அவரையும் முடிந்தால் மற்றொருவரையும் அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினார். சில நாழிகைகளில் அவர் வந்து சேரும்வரை தனிமையும், கவலைகளும் மகாராணியாரின் மனத்தை வாட்டி எடுத்து விட்டன. இரண்டு துறவிகளுமே வந்திருந்தார்கள். ஒளி தவழும் தூய முகமும், முண்டிதமாக்கப்பட்டு வழுவழுவென்று மின்னும் தலையுமாக அருளொளி கனியும் அந்தத் துறவிகளின் தோற்றத்தைப் பார்த்தபோதே நிம்மதி வந்துவிட்டது போலிருந்தது. மகாராணி எதிர்கொண்டு எழுந்து சென்று வணங்கி அவர்களை வரவேற்றாள். ஒருவருக்கொருவர் நலம் விசாரித்துக் கொண்ட பின் யாத்திரை அனுபவங்களைச் சிறிது நேரம் கூறினார்கள் அவர்கள் இருவரும். அந்தச் சமயத்தில் அதங்கோட்டாசிரியரும், பவழக்கனிவாயரும் வேறு அங்கு வந்து சேர்ந்தார்கள். 'சரியான அவை கூடி விட்டது!' — என்று நினைத்து மன நிறைவு பெற்றார் மகாராணி. "சுவாமி! கவலைகளை உணர்ந்துகொண்டு கலங்கும் இயல்பு முதன்முதலாக எப்போது மனித மனத்துக்கு உண்டாயிற்று?" என்று ஒரு கேள்வியைக் கேட்டு விட்டுக் குணவீர பண்டிதருடைய முகத்தை நிமிர்ந்து பார்த்தார் மகாராணி.

குணவீர பண்டிதர் தம்மோடு வந்திருந்த கமலவாகனரைப் பார்த்துச் சிரித்தார். பின்பு கூறினார்:



"இன்பங்களை உணர்ந்து மகிழும் இயல்பு ஏற்பட்டபோது!"

மகாராணி இதற்குப் பதில் சொல்வதற்குள் அதங்கோட்டாசிரியரும் பவழக்கனிவாயரும் குறுக்குக் கேள்வி கேட்டார்கள். பேச்சு அவர்கள் நால்வருக்குள்ளேயே விவாதம் போலச் சுழன்றது. மகாராணி அதன் நயத்தை விலகியிருந்து அனுபவிக்கலானார்.

"சமணர்கள் எப்போதுமே நிலையாமையைத்தான் வற்புறுத்துவார்கள்" — அதங்கோட்டாசிரியர்பிரான் இடையிலே குறுக்கிட்டார்.

"'நிலையாமை ஒன்றே நிலைப்பது. நிலைப்பதாகத் தோன்றுவதெல்லாம் நிலையாதது' என்றுதானே சமணர்களின் நூல்கள் எல்லாம் கூறுகின்றன?" என்றார் பவழக்கனிவாயர்.

"நீங்கள் எங்களுடைய கொள்கையைத் திரித்துக் கூறுகிறீர்கள். நிலையாமையைக்குறித்து எல்லாச் சமயங்களுமே உடன்படுகின்றன. எங்கள் நூல்கள் உண்

மையை ஒளிக்காமல் சொல்லும்போது கசப்பாக இருக்கிறது. திருக்குறளும் நிலையாமையைச் சொல்கிறது. எங்கள் சமயத்தார் எழுதிய நாலடியாரும் நிலையாமையைச் சொல்கிறது. திருக்குறள், 'வாழ்க்கை நிலையாதது, செல்வம் நிலையாதது, இளமை நிலையாதது, உடல் நிலையாதது; ஆனாலும் வாழ்ந்து பார். மனைவி மக்களோடு அறம் பிறழாமல் வாழு. புகழ் எய்து' என்று நம்பிக்கை யூட்டுகிறது. நாங்கள் சாதாரண மனித இயல்பை மனத்தில் கொண்டு பயமுறுத்திச் சொல்லியிருக்கிறோம்'' என்றார் குணவீர பண்டிதர்.

"எங்கே? நிலையாமையைப் பற்றி ஒரு பாட்டு சொல்லுங்கள்!'' என்று அவரைக் கேட்டார், அதுவரையில் பேசாமல் இருந்த மகாராணி.

**"இளமையும் நில்லாவால் இன்பமும்**
**நின்றவல்ல**
**வளமையும் அஃதேயால் வைகலும்**
**துன்பவெள்ளம்**
**உளவென நில்லாதே செல்கதிக் கென்று**
**மென்றும்**
**விளைநிலம் உழுவார்போல் வித்துநீர்**
**செய்து கொள்மின்!"**

குணவீர பண்டிதரின் குரல் கணீரென்று ஒலித்து ஓய்ந்தது.

"இதுதான் எங்கள் தத்துவம். இன்றைக்கு இருப்பதை என்றைக்கும் இருக்குமென்று எண்ணி நாங்கள் நம்பி ஏமாறுவதில்லை. என்றைக்கும் இருக்கும் அது எதுவோ அதைப் பயிர் செய்ய முயலுகிறோம்''—அவரே விளக்கினார்.

"தமிழ் இலக்கியத்திலுள்ள பெரும் பாலான சமணப் பாடல்கள் இதைத்தான் வற்புறுத்துகின்றன'' என்று அதங்கோட்டாசிரியர் கூறினார்.

"சித்திரக்காரனுக்கு ஏழு வர்ணங்கள் மேலும் ஒரே மாதிரி அன்புதான். உலகத்திலுள்ள இன்பம், துன்பம் எல்லா உணர்ச்சிகளையும் நாங்கள் பிரித்துப் பார்ப்பதில்லை. எல்லாமே நிலையாதவை என்ற உணர்வில் அடங்கியவை. நிலையாதவற்றை வெறுக்கவில்லை. அனுதாபப் படுகிறோம். 'எவ்வளவு நாட்களானாலும் வாடாது' என்ற பேதைமை நினைவுடன் கையில் பூச்செண்டை ஏந்திக் கொண்டிருக்கும் குழந்தை மாதிரி உலகம் இருக்கிறது. நாங்கள் தூர இருந்து அந்தக் குழந்தையைப் பார்த்து அனுதாபப்படும் வயதானவர் போலிருக்கிறோம். காரணம்? 'அந்தப் பூச்செண்டு வாடி விடும்' என்ற உண்மை எங்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கின்றன!'' என்றார் குணவீரர்.

"விவாத முறைக்கு உங்கள் பேச்சு ஏற்கும்! ஆனால் நடைமுறைக்கு ஒத்து வராதே'' என்றார் பவழக்கனிவாயர்.

"நடைமுறையைப் பற்றிக் கவலைப்படுகிறவர்கள் அல்லது பயப்படுகிறவர்கள் எந்த இலட்சியங்களையும் நிறுவ முடியாது'' என்று பவழக்கனிவாயருக்குக் கமலவாகனர் பதில் கொடுத்தார். விவாதம் கருத்துச் செறிவுள்ளதாக இருந்தது. அந்த உரையாடல் வளர்ந்து கொண்டே போனவிதத்தில் மகாராணிக்கு ஆறுதல் ஏற்பட்டிருந்தது.

நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுக் குணவீர பண்டிதர் புறப்பட எழுந்தார். எல்லோருமே மரியாதையாக எழுந்து நின்றனர்.

"சுவாமீ! ஒரு சிறு விண்ணப்பம்."

"என்ன?"

"தாங்கள் சற்றுமுன் பாடினீர்களே; அந்தப் பாடலை ஒரு ஓலையில் எழுதிக் கொடுத்து விட்டுப் போக இயலுமோ?'' இருந்தாற் போலிருந்து நினைத்துக் கொண்டு கேட்பவர்போலக் கேட்டார் மகாராணி வானவன்மாதேவி.

"ஆகா! ஓலையும் எழுத்தாணியும் கொண்டுவரச் சொல்லுங்கள். இப்போதே எழுதிக் கொடுத்து விட்டுப் போகிறேன்'' என்றார் அவர். ஓலையும் எழுத்தாணியும் வந்தன. குணவீரர் வாயால் சொல்ல, கமலவாகனர் ஓலையில் எழுதினார். எழுதி முடித்ததும் மகாராணி அதைப் பயபக்தியோடு வாங்கிக் கொண்டார். அந்தப் பாட்டுக்கு அவ்வளவு மரியாதை கொடுத்து மகாராணியார் வாங்கிக் கொண்டதைக் கண்டு அதங்கோட்டாசிரியரும் பவழக்கனிவாயரும் ஆச்சரியத்தோடு சிறிது அருவையும் அடைந்தனர்.

## ஐந்தாம் அத்தியாயம்

# மானகவசனுக்கு நேர்ந்த துன்பம்

"தென்பாண்டி நாட்டுப் படைகள் விரைவில் வடக்கு எல்லைக்கு அனுப்பப்படும். அதுவரையில் எல்லைப் பாதுகாப்பு ஏற்பாடுகளை நீங்களே சமாளித்துப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியது'' என்ற கருத்தடங்கிய திருமுகத்தோடு மானகவசனை அன்று காலையிலேயே அவசரமாகக் கரவந்தபுரத்துக்குத் திருப்பி அனுப்பி விட்டார் மகாமண்டலேசுவரர். மானகவசனும் தாமதமின்றி







உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்
குழந்தை டெய்சியின்
உன்னத நடிப்பை காணுங்கள்
சரவணபவா & யூனிட்டி பிக்சர்ஸ்
நான் வளர்த்த தங்கை
சென்னை. கிரௌன் · ராக்ஸி
ராஜகுமாரி மற்றும்
தென்னகெங்கும்
டைரக்ஷன்... Ch. நாராயணமூர்த்தி
அஸோஸியேட் டைரக்ஷன் T.K. ராமு



ஆடிட்டர் ஸ்ரீ பி. பி. ஜயராம ஐயர் அவர்களைத் தலைவராகக் கொண்டு 'லக்ஷ்மி தியேட்டர்ஸ்' என்ற பெயரில் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் கலைவளர்க்கும் சங்கத்தினர், தோட்டக்கார விசுவநாதன் எழுதியுள்ள 'ராஜா' என்னும் நாடகத்தைத் திறம்பட நடித்தனர். நாடகத்தின் ஒரு காட்சியை மேலே காணலாம்.

உடனே புறப்பட்டு விட்டான். வருகிற போது வந்ததுபோல் முன் சிறைப்பாதை வழியே சென்றான். சரியாக நடுப்பகல் நேரத்துக்கு முன்சிறை போய்விட முடியும். குதிரையை விரைவாகச் செலுத்தினால் அதற்கும் முன்னால்கூடப் போய்விடலாம். அந்த நேரத்துக்கு அங்கே போவதனால் ஒரு நன்மையும் இருக்கிறது. பகல் உணவை முன்சிறை அறக்கோட்டத்தில் அந்த வேடிக்கைத் தம்பதிகளின் உபசரிப்புக்கு இடையே சுவை நிறைந்ததாக முடித்துக் கொள்ளலாம். கணவனும், மனைவியுமாக ஒருவருக்கொருவர் கேலி செய்து கொண்டே அறக் கோட்டத்துக்கு வந்து செல்வோருக்கெல்லாம் அறுசுவை உணவோடு நகைச்சுவையும் அளிக்கும் அண்டராதித்தனையும், கோதையையும் நினைக்கும் போது அப்போதே அவர்களைக் கண்டு விட்டது போன்றிருந்தது அவனுக்கு. கரவந்தபுரத்திலிருந்து முக்கியமான திருமுகத்தை அரண்மனைக்குக் கொண்டு வரும் அவசரத்தில் ஒரே ஒருவேளை தான் அந்த அறக்கோட்டத்தில் தங்கிச் சாப்பிட்டிருக்கிறான் அவன். இருந்தும் அந்த ஒருவேளைப் பழக்கத்துக்குள்ளேயே அவர்கள் அவனுடைய மனத்தில் ஆழப் பதிந்திருந்தார்கள்.

"குழந்தை குட்டிகள் இல்லாமல் வயது மூத்த அந்தத் தம்பதிகள் அதை ஒரு குறைவாக எண்ணிக் கவலைப்படுவதாகவே தெரியவில்லை. அதனால்தானே என்னவோ வருகிறவர்களையெல்லாம் குழந்தைகளாக நினைத்து அன்பு செலுத்த அவர்களால் முடிகிறது. அறக் கோட்டங்களும், அட்டிற் சாலைகளும் நடத்தினால் மட்டும் போதுமா? உலகம் முழுதுமே சிரிப்பதற்கும், அன்பு செய்வதற்கும், உபசரிப்பதற்கும், ஏற்றது என்று எண்ணும் அண்டராதித்தனும், கோதையும் போன்ற ஆட்கள்தான் அறக்கோட்டத்தை அர்த்த முள்ளதாக்குகிறார்கள். சேர, சோழ நாடுகளில் எத்தனை அறச்சாலைகள் இருந்தால் என்ன? அங்கெல்லாம் அண்டராதித்தனும், கோதையும் இல்லாதவரை அவை அறச்சாலைகளாக முடியுமா? சிரிப்பதற்கு ஆளில்லாத அறச்சாலைகள் அவை! கடல்கடந்தும் தரை வழியாகவும், எவ்வளவு தொலைவிலிருந்து யாத்திரீகர்கள் வந்தாலும் அவர்களையெல்லாம் அண்ணன் தம்பிகளாக, உடன் பிறந்தோராக எண்ணும் கோதையும் அண்டராதித்தனும்தான் பார்க்கப் போனால் இந்நாட்டின் உண்மையான பிரமுகர்கள்! 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்ற தத்துவத்தை மெய்ப்பித்துக் கொண்டு வருபவர்கள் அவர்கள்தானே?" — அன்று ஏனோ அந்தத் தூதன் மனத்தில் முன் சிறை மணியகாரனும், அவன் மனைவியுமே நிறைந்திருந்தார்கள். அவர்களைப் பற்றியே அவன் அதிகமாகச் சிந்தித்தான். தான் கொண்டு போகும் அரசாங்கச் செய்தி, அதன் அவசரம் ஆகியவை கூட அவ்வளவாக அவனுடைய மனத்தைக் கவர்ந்துவிடவில்லை.

ஆனால் நண்பகலில் அவன் முன்சிறை அறக்கோட்டத்தை அடைந்தபோது பெரிதும் ஏமாற்றமடைந்தான். அங்கே அண்டராதித்த வைணவனும், கோதையும் இல்லை. "கொற்கை முத்துக்குளி விழாவைப் பார்ப்பதற்காகப் போயிருக்கிறார்கள்" என்று அறக் கோட்டத்துப் பணியாட்கள் கூறினார்கள். தூதனுக்கு அன்றும் அங்கே பகல் உணவு கிடைத்தது. ஆனால் அண்டராதித்தனும், கோதையும் பக்கத்திலிருந்து சிரிக்கச் சிரிக்கப் பேசி உபசாரம் செய்து போடுகிற சாப்பாடு மாதிரி இல்லை அது! அங்கு அதிக நேரம் தங்கக் கூட விருப்பமில்லாமல் உடனே புறப்பட்டு விட்டான் அவன். கொற்கையிலிருந்து திரும்பினாலும் தான் செல்லுகிற அதே சாலை வழியாகத்தான் திரும்ப வேண்டும் என்று அவனுக்குத் தெரியும். ஆனால் முத்துக்குளி விழாவைப் பார்க்கப் போயிருக்கிறவர்கள் அவ்வளவு அவசரமாகத் திரும்ப மாட்டார்கள் என்று தோன்றியதனால் அவர்களை வழியில் எங்கேயாவது எதிரே சந்திக்கலாம் என்ற நம்பிக்கையை அவன் கைவிட்டு விட்டான்.

அதே நிலையில் இடைவழியில் எங்கும் தங்காமல் பயணத்தைத் தொடர்ந்தால்

அன்று இரவு நடுச்சாமத்துக்குள்ளாக ஒருவாறு அவன் கரவந்தபுரத்தை அடைந்துவிட முடியும். வெய்யிலின் மிருதியையும் வானில் அங்கொன்றும், இங்கொன்றுமாக மேகக் கற்றைகள் மிதப்பதையும் கண்டு மழை வந்து நடுவே பிரயாணத்தைத் தடைப்படுத்தி விடாமல் இருக்க வேண்டுமே என்று கவலையா யிருந்தது அவனுக்கு. ஏதாவது ஊர்ப்புறத்தை ஒட்டிச் சென்று கொண்டிருக்கும்போது மழை வந்தால் குதிரையையும் கட்டிவிட்டு எங்கேயாவது தங்கிக் கொள்ளலாம். இல்லாவிட்டால் தொல்லைதான். முன்சிறையிலிருந்து ஒரு குறிப்பிட்ட தொலைவுவரை அந்தச் சாலையில் ஊர்கள் இடையிடையே வரும். அதன் பின் கரவந்தபுரம் வரை மலைச் சரிவிலும், அடர்ந்த காடுகளை வகிர்ந்து கொண்டும் செல்கிறது சாலை. 'எதற்கும் கொஞ்சம் வேகமாகப் போவதே நல்லது' என்ற எண்ணத்துடன் குதிரையை விரைவாகச் செலுத்திக் கொண்டிருந்தான் அவன். சாலையில் எந்த இடங்களில் சிறு சிறு ஊர்கள் இருந்தனவோ, அங்கெல்லாம் கூட அதிகமான கலகலப்பு இல்லை. எல்லோரும் முத்துக்குளி விழாவுக்குச் சென்றிருந்தார்களாதலால் ஊர்கள் அமைதியாக இருந்தன. அனேகமாக அந்தப் பெருஞ்சாலையில் சிவிகைகள், யானைகள், குதிரைகள், கால்நடையாகச் செல்வோர் என்று போக்குவரவு இருந்து கொண்டே இருக்கும். அன்றைக்கோ அதுவும் குன்றியிருந்தது. அவனுடைய குதிரைதான் சாலையை ஏகபோகமாக ஆக்கிரமித்துச் சுதந்திரமாகச் சென்று கொண்டிருந்தது. மாலையில் சிறு தூறல் இருந்தது. பெருமழையாகப் பெய்யாததால், அதனால் அவனுக்கு அதிக இடையூறு இல்லை. எங்கும் நிற்காமல் சென்று கொண்டிருந்தான். ஆனால் இருட்டுகிற சமயத்துக்குச் சாலை மலைச்சரிவை ஒட்டிச் சென்று கொண்டிருந்த போது மழை வலுவாகப் பிடித்துக் கொண்டு விட்டது. மின்னலும் இடியுமாக மேகம் இருட்டிக் கொண்டு இயற்கையான இருளோடு கலந்து கருமைக்கு அழுத்தம் கொடுத்திருந்தது. வானப் பெருங்குளத்தின் வடிகாற் கண்களை யாரோ உடைத்து விட்டுவிட்ட மாதிரி மழை கொட்டியது. இருளில் வழி அறிவதுகூட வர வரக் கடினமாகிக் கொண்டிருந்தது. ஏதாவது ஒரு பாழ்மண்டபம் அகப்பட்டால்கூடப் பிரயாணத்தைத் தாற்காலிகமாக நிறுத்திக் கொண்டு தங்கிவிடலாமென்று அவனுக்குத் தோன்றியது. பெருமழைக் காலங்களில் இடி அதிகமாக இருக்கும் போது காட்டு மரங்களின் கீழே தங்குவது நல்லதல்லவே என்ற அச்சமும் அவனுக்கு இருந்தது.



கொழும்பு 'வீரகேசரி' பத்திரிகையின் துணை ஆசிரியர் திரு வி. பி. ஆதித்தனுக்கும், செல்வி சரஸ்வதிக்கும் சமீபத்தில் திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த தண்டப்பத்து கிராமத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

அந்தச் சமயத்தில் சமயசஞ்சீவிபோல் சாலையோரத்தில் ஒரு பாழ் மண்டபம் தெரிந்தது. அதில் காட்டுச் சுள்ளிகளால் நெருப்பு மூட்டிக் குளிர் காய்ந்து கொண்டிருந்தார்கள் சிலர். அந்த வெளிச்சம் இல்லையானால் அப்போதிருந்த இருட்டில் அந்த மண்டபம் அங்கிருப்பதோ, அதில் ஆட்கள் உட்கார்ந்திருப்பதோ அவன் கட்புலனுக்குத் தெரிந்திருக்கவே முடியாது.

அவ்வளவு மழையோசையிலும் அவனுடைய குதிரைக் குளம்பொலி அவர்களுக்குக் கேட்டிருக்க வேண்டும். எல்லோரும் சாலைப் பக்கமாகத் திரும்பிப்பார்த்ததை மானகவசன் கண்டான். குதிரை நனையாமல் மண்டபத்தின் முன்புறத்தூணில் கட்டிவிட்டு, உடைகளைப் பிழிந்து விட்டுக் கொண்டான். உடல் தெப்பமாக நனைந்திருந்தது. மகாமண்டலேசுவரரின் திருமுக ஓலை இடுப்புக்குள் பத்திரமாக இருந்தது. "அந்தக் காலத்தில் இந்தப் பாழ் மண்டபத்தைக் கட்டிய வள்ளல் யாரென்று தெரிந்தால் இப்போது அவனுக்கு நாம் எல்லோரும் சேர்ந்து ஒரு நல்ல நினைவு மண்டபமே கட்டி வைத்து விடலாம்" என்று சிரிப்புடன் சொல்லிக்கொண்டே அவர்களுக்குப் பக்கத்தில் தானும் போய்க் குளிர் காய்வதற்கு உட்கார்ந்தான் மானகவசன். அவன் சிரிப்போ, பேச்சோ அவர்களிடையே பதில் சிரிப்புக்களையோ, பேச்சுக்களையோ உண்டாக்கவில்லை. தங்களுக்குள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். மானகவசன் அதைப்பொருட்படுத்தாவிட்டாலும் மனித இயல்பை மீறியதாக இருந்தது, அவர்கள் நடந்து

கொண்ட விதம். இந்தமாதிரி சமயத்தில் 'நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று விசாரித்து அறிய முயல்வதுதான் சாதாரண மனித இயற்கை. அதற்குக்கூட அவர்கள் முயலவில்லை. ஆனால் மானகவசன் அவர்களைப் போல் ஊமையாக இருந்து விடவில்லை.

''ஐயா! நீங்களெல்லாம் யார்? கொற்கை முத்துக் குளி விழா பார்த்துவிட்டுக் கால்நடையாகத் திரும்பிவரும் போது மழையில் அகப்பட்டுக் கொண்டீர்களோ? அடடா! எதற்கு இவ்வளவு அவசரமாகத் திரும்பினீர்கள்? நாளைக்குக் காலையில் சாகவாசமாகத் திரும்பியிருக்கக் கூடாதோ?'' என்று அன்போடு விசாரித்தான்.

அவர்கள் இந்த விசாரிப்புக்கும் பதில் சொல்லவில்லை. தங்களுக்குள் ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டார்கள். மானகவசனுக்கு முகம் சுண்டிப் போயிற்று. பேசுவதை நிறுத்திக் கொண்டான். வேற்று முகம், புது ஆட்கள் என்ற வேறுபாடின்றிப் பேசிப் பழகும் அண்டராதித்தன் தம்பதிகள் அவன் நினைவில் மறுபடியும் தோன்றினார்கள். 'மனிதனுக்கு மனிதன் பேசிப் பழகிக் கொள்ளத்தானே மொழி, உணர்ச்சிகள் எல்லாம் இருக்கின்றன? அதற்குக் கூடத் தயங்கும் சில பிரகிருதிகள் இப்படியும் இருக்கின்றனவே'—என்று எண்ணி வியந்தான் அவன். ஒன்று அவர்கள் ஊமைகளா யிருக்க வேண்டும், அல்லது அமிழ்தினும் இனிய தமிழ் மொழியே தெரியாதவர்களா யிருக்க வேண்டும் [என்று அவனுக்குத் தோன்றியது.

மழையும் விடுகிறபாடா யில்லை. நேரமாகிக் கொண்டிருந்தது. அந்தப் பாழ்மண்டபத்திலேயே எல்லோரும் மூலைக்கு மூலை சுருண்டு படுத்தனர். குளிர் காய்வதற்காக மூட்டியிருந்த தீ அணைந்து மண்டபத்தில் இருள் சூழ்ந்தது. படுத்த சிறிது நேரத்துக்கெல்லாம் மானகவசன் அயர்ந்து தூங்கிவிட்டான்.

நல்ல தூக்கக் கிறக்கத்தில் யாரோ உடம்பைத் தொட்டு அமுக்குகிற மாதிரி இருந்தது. உடம்பைத் தொட்டு அமுக்கி இடுப்பைக் கட்டுவதுபோல் உணரவே துள்ளி எழுந்தான். அவனால் எழுந்திருக்க முடியவில்லை. ஏதோ சொல்ல முயன்றான். வார்த்தைகள் வரவில்லை. வாய் உளறியது. தன்னை யாரோ பலமாகப் பிடித்துக் கொண்டு, வாயையும் மூடியிருக்கிறார்கள் என்பதை உணர்ந்தான். அடுத்த கணம் முதுகிலும் தலையிலும் பலமான அடிகள் விழுந்தன. அவனுக்குத் தன் நினைவு தவறியது. அப்படியே சுருண்டு விழுந்தான். அதன் பின்னர் பாழ் மண்டபத்தில் நடந்த தொன்றும் அவனுக்குத் தெரியாது.

பொழுது விடிந்து கதிரவன் ஒளி மேலேறி மண்டபத்துக்குள் விழுந்த போது வலி பொறுக்க முடியாமல் முனகிக் கொண்டே மெல்ல எழுந்திருக்க முயன்றான் அவன். எழுந்து நடக்க முடியவில்லை. மூட்டுக்கு மூட்டு வலித்தது. அந்த நேரத்தில் தெய்வம் அவனுக்கு ஒரு அருமையான உதவியைக் கொண்டு வந்து சேர்த்தது. இடுப்பிலிருந்த திருமுகமும் மண்டபத்துத் தூணில் கட்டியிருந்த குதிரையும் அவனிடமிருந்து பறிபோயிருந்தன. கொற்கைத் திருவிழாவுக்குப் போயிருந்த அண்டராதித்தனும்,கோதையும் அந்தப் பாதையாகத் திரும்பி வந்தார்கள். அவன் இரைந்து கூச்சலிட்டான்.

''யாரைப் பற்றி நாம் அதிகம் சிந்திக்கிறோமோ, அவர்களைத் தெய்வம் நம் பக்கத்தில் துணையாகக் கொண்டு வந்து சேர்க்கின்றதென்பது எவ்வளவு பெரிய உண்மை?'' என்று அவர்களை அந்தப் பாதையில் கண்டவுடனே எண்ணினான். அவன் மெய் சிலிர்த்தது. அவர்களை அங்கு கொண்டு வந்து சேர்த்த இறைவனை வழுத்தினான் மானகவசன்.

அந்தத் தம்பதிகள் அந்நிலையில் அவனை அங்கே கண்டு பதறிப் போனார்கள். நடந்ததை யெல்லாம் அவர்களிடம் விவரமாகக் கூறினான் மானகவசன்.

''நாடு முழுவதுமே கெட்டுப் போய்க் கிடக்கிறது அப்பா! நல்லவன் வெளியில் இறங்கி நடக்கவே காலமில்லை இது!'' என்று தொடங்கிக்கொற்கையில் நடந்த குழப்பத்தை அவனுக்குச் சொன்னார்கள்.

அடி, உதை பட்டது கூட அவனை வருத்தத்துக்குள்ளாக்கவில்லை. 'முக்கியமான அரசாங்கத் திருமுகத்தைத் திருட்டுக் கொடுத்து விட்டோமே, என்ன ஆகுமோ — என்ன ஆகுமோ?' என்று எண்ணி அஞ்சினான் அவன்.

''பரவாயில்லை அப்பா! நீ என்ன செய்வாய். உன்னை முதலில் ஊருக்கு அழைத்துப் போக ஏற்பாடு செய்கிறேன்'' என்று கோதையை அவனருகில் துணை வைத்துவிட்டுத் தான் மட்டும் பக்கத்து ஊர் வரை நடந்து போய் ஒரு சிவிகையும் சுமக்கும் ஆட்களும் தயார் செய்து கொண்டு வந்தான் அண்டராதித்த வைணவன். சிவிகை அன்று மாலைப் பொழுது சாயும் நேரத்துக்கு அவனைக் கரவந்தபுரத்துக்குக் கொண்டு போய்ச் சேர்த்தது. (தொடரும்)




நிலைகொள்ளாத நெஞ்சோடு என் சிறிய அறையில் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தேன். துக்கத்தைச் சொல்லிக் கொள்ள அருகில் யாரும் இல்லை. இருந்தாலும்தான் என்ன? ஆறுகிற துக்கமா அது? என் காயம் மிக ஆழமானது. மிகப் புதிது. என் வாழ்க்கையெல்லாம் நொடியில் சிதறி மண்ணோடு மண்ணாகி விட்டது — ஒரு பெண்ணினால். வாணி—இப்போது அவள் என்மேல் சாட்டும் குற்றத்தோடு அவள் முன் என்னிடம் காட்டிய அன்பைச் சமரசப்படுத்திப் பார்க்கவும் முடியவில்லை. இப்படியும் நடக்க முடியுமா? நடந்து விட்டது — என்னுடைய வாழ்வு அழிய, என்னுடைய நெஞ்சு சிதற.

திடீரென்று என் எண்ணம் ரவியின்மேல் தாவியது. அவன் இன்பமாயிருந்தான்—பிருந்தாவோடு. நான் இப்போது இழந்துவிட்டதை அவன் இன்னமும் அடைந்திருந்தான். நான் எப்படி இருந்திருக்கலாமோ அப்படி அவன் இருந்தான். இவ்வளவு வித்தியாசத்தோடு விதி எப்படி எங்களை நடத்தலாம்? நாங்கள் இருவரும் ஒருவர்போல அல்லவா? சாதாரணச் சகோதரர்களைவிட அதிக இணைப்போடு நாங்கள் பிறந்து வளர்ந்தவர்கள் இல்லையா? இந்தப் பயங்கர வித்தியாசம் எப்படி ஏற்படலாம்? இந்த நிமிஷம் அவன் பிருந்தாவோடு சல்லாபித்துக் கொண்டிருப்பான். தை மாதத்தில் பந்தல் போடும் நாளை நினைத்து இன்பத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறானோ?... ஆனால் நான்? எனக்கு அந்த நாள் கிடையாது.

என் இரட்டைச் சகோதரனைக் குறித்து நான் பொறாமையா கொண்டேன்? வேண்டாம், வேண்டாம்......ஆனால் உண்மையை இல்லை என்று மறுக்க முடியவில்லையே?

ஒரே அச்சில் வார்த்த இரு பதுமைகள் நாங்கள். ஒரு வயதுக் குழந்தைகளாய் நாங்கள் இருந்தபோது ஓரிரவு என் அழகைக் குறித்து எனக்கு ஒரேயடியாய்ச் சந்தேகம் வந்து விட்டதாம். தூங்கமாட்டேன் என்றேனாம். எங்கள் தாயார் உடனே ரவியின் தலைமயிரைச் சீர் செய்து என் தூக்கம் தவழும் விழிகள் முன் அவனைத் தூக்கிப் பிடித்தாளாம். நிலைக்கண்ணாடியின் தீர்ப்பில் திருப்தி கொண்டு நான் உறங்கி விட்டேனாம்.

நாங்கள் ஒருவருக்கொருவர் உலகமாயிருந்தோம். பள்ளியிலும் மற்றச் சிறுவர்களுக்கிடையே நாங்கள் இருவரும் ஒருவர் தோள் மேல் ஒருவர் கையை இணைத்துக்கொண்டு தனி இடம் சென்று உலாவுவோம். வீட்டிலும் அப்பாவோ அம்மாவோ "ரவி!" என்று அழைத்தால் நான் "ஏன்?" என்று போவேன். "ரகு" என்று அழைத்தால் அவன் வந்து நிற்பான். ஒரு கணம் பெற்றோர்களே தவறை உணராமல் மேலே பேசும்போது அதை எங்கள் தனிவெற்றியாக உணர்வோம்.

இந்த அடிப்படை உருவ ஒற்றுமை எங்களுள் ஆரம்பத்திலிருந்தே ஒரு ஆழ்ந்த ஒருமை புணர்வையும் அதிசய நெருக்கத்தையும் விதைத்து வளர்த்துவிட்டது. ஆடையிலும் ஆகாரத்திலும் நாங்கள் ஒன்றையே அடைந்தோம். ஒரே ஆட்டங்கள் விளையாடினோம். பெற்றோர்கள் எங்களை எதிலும் ஒன்றாகவே நடத்தினார்கள். இன்பத்திலும் துன்பத்திலும் நாங்கள் ஒருவருக்கொருவர் அந்தரங்கம். இருவரும் எதிலுமே ஒன்று என்ற எண்ணம் எங்களுடைய இரட்டைப் பிறப்பு நிகழ்ந்த கணமே உருவாகிவிட்டது. ஒரு சமயம்—பத்து வயதில்—இருவரும் வீட்டில் ஒரு கணக்கைப் போட முயன்று கொண்டிருந்தோம். சரியாய் வரவில்லை. மறுநாள் வகுப்பின் கணிதப் பரீட்சையில் அதேமாதிரி கணக்கு தரப்பட்டது. திடீரென்று எனக்கு விடையும் புலப்பட்டது. ஆயினும் என் இரட்டைச் சகோதரன் போடாத கணக்கை நானும் போட விருப்பமின்றி அதை விட்டு விட்டு வந்துவிட்டேன். பிறகு ரவியும் அவ்வாறே என்னை நினைத்துச் செய்துவிட்டு வந்திருந்தானென்று தெரிந்தபோது நாங்கள் இருவரும் வருந்தவில்லை. எங்கள் ஒருமையை நினைத்துக் குதூகலித்தோம்.

பக்கத்து வீட்டுப் பிருந்தா எங்கள் குழந்தைப் பருவத்துத் தோழி. எங்கள் முதல் வித்தியாசத்தின் காரணமானவளும் அவளே.

"ரகு! நமக்குள் ஒரு வேற்றுமையை நான் கவனித்து வருகிறேன்" என்று சங்கோசத்தோடு சந்தோஷமும் போட்டியிடச் சொன்னான் ரவி ஒருநாள். நாங்கள் இப்போது வாலிபர்கள்.

"இரட்டைப் பிறப்பின் ஒருமை என்ற மகத்தான பொருள் ஒரு சிறிய பெண்ணின் சிரிப்பினால் தாக்கப்பட்டிருப்பதும் சாத்தியமா!" என்றேன் நான்.

"போடா நம் வேற்றுமை..."

"பிருந்தாவின் புன்சிரிப்பை நாம் பார்க்கும் விதங்களில் ஏற்பட்டிருக்கிறது. ஆமாம்! எப்போது கல்யாண விருந்து? நான் மாப்பிள்ளைத் தோழனாய்..!"

"நீ ஒருநாளும் மாப்பிள்ளைத் தோழன் ஆகமாட்டாய். நான் மாப்பிள்ளையாகும்போது நீயும் மாப்பிள்ளையாக வேண்டும்."

"ஆனால் பெண் சிரிப்பு எதுவும் என்னைப் பித்தனாக்கவில்லையே?"

"எல்லாம் ஆகும்!"

"ஒருவேளை இல்லையென்றால்?..."

"சரிதான் போடா, பெரிய துறவிதான் தெரியாதா எனக்கு?"

"புது வாழ்வு?"

"ஒன்றாய்த் தொடங்க வேண்டும்."

"காத்திருக்கப் போகிறாயா?"

"கட்டாயம். சரி, ரகு! எந்த நிமிஷம் உன் வீர ஆண் உள்ளம் ஒரு கடைக்கண் வீச்சினால் இடம் பெயர்ந்து விழுகிறதோ, எனக்குச்

சொல், உடனே இருவருக்காகவும் சேர்த்துக் கல்யாண விருந்து வைத்து விடலாம்.''

இத்தகைய அன்புதான் இந்தச் சகோதரனை, சகோதரனைவிட அதிகமானவனை, என்னோடு இணைத்திருந்தது. வயது வந்த வாலிபப் பருவத்திலும் எங்கள் நெருக்கம் மாறவில்லை. சீக்கிரத்திலேயே நான் வேலை மாற்றம் ஆகி இங்கே சேலத்துக்கு வந்தேன். தொழிலிலும் இருவருக்கும் சமவெற்றி. எங்கள் சமத்துவ உணர்வு நாளுக்கு நாள் விருத்தியாகி வந்தது.

இதே சமத்துவ உணர்விலேதான் இன்று இந்த அருமைச் சகோதரனின் இன்பத்தை எண்ணி நான் பெருமை கொண்டிருக்கிறேன்!

இங்கு வந்தபின் வாணி என் வாழ்வில் வந்தாள். இந்தக் கட்டத்தோடு என் இரட்டைச் சகோதரனுடன் எனக்குள்ள சமத்துவம் பூரணமடைந்தது. அவனுக்குப் பிருந்தா, எனக்கு வாணி. ரகுக்கு எல்லா விஷயங்களையும் விவரித்துக் கடிதங்கள் எழுதியவாறிருந்தேன். அவன் உள்ளன்போடு குதூகலித்தான். பெரிய தொழில் அதிபரான வாணியின் தகப்பனார் சங்கரன் செல்வத்தில் மிதப்பவர்.



வாணியும் நானும் ஒருவரை யொருவர் விரும்புவதை ஆமோதிப்பவராயினும், செல்வத்துக்குப் பழக்கப்பட்ட தம் மகள் சிரமப்படாதிருக்கும் பொருட்டு, விவாகத்துக்குப் பின் நானே அவர் வீட்டுக்குச் சென்று வசிக்க வேண்டுமென்று எதிர்பார்த்தார். இது எனக்கு விருப்பமில்லை. வாணியை இழந்து விடவும் நான் தயாராயில்லை. இவ் விஷயத்தில் வாணியின் பக்கபலம் எனக்குப் பூரணமாய் இருந்தது.

வாணியின் மற்ற முக்கிய பந்துக்களின் துணையினாலும் அவள் தகப்பனாரை ஒருவாறு என் அபிப்பிராயத்துக்கு இசைய வைத்தேன். என் சகோதரனுக்கும் எனக்கும் ஒருங்கே தை மாதத்தில் சென்னையில் விவாகம் நடப்பதாக நிச்சயமாயிற்று. நாங்கள் இரட்டையராதலால் எங்கள் விருப்பத்துக்காக இரு பெண் வீட்டாரும் ஒன்று கூடி மணம் நடத்துவதற்கு ஒப்புக் கொண்டனர்.

கார்த்திகை மாதத்தில் நான் இரண்டு மாத லீவில் சென்னை போவதாய் இருந்தேன். நான் கிளம்ப வேண்டியதற்குப் பத்து தினங்களுக்கு முன்தான் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

பூரண எழிலுடன் பொழுது விடிந்தது. இப்போதெல்லாம் ஒவ்வொரு நாளையும் எண்ணிக் கொண்டுதான் நான் எழுந்திருப்பது. வாணியும் நானும் தம்பதிகளாக உருவாக இருந்த நாட்களில் இன்னும் ஒரு நாள் குறைந்தது!

மெய்மறந்து பாடிக்கொண்டு குளிக்கும் அறைக்குள் சென்று கொண்டிருந்தேன். வேதனை ததும்ப வாணி உள்ளே வந்தாள்.

அவளைக் கண்டதும் எழுந்த புன்னகை அவள் வாட்டத்தைக் கண்டு மறைய, நான் மிகுந்த கவலையுடன், "என்ன விஷயம், வாணி?" என்று கேட்டேன்.

"எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை, ரகு! மறுபடியும் அப்பா, தம் விருப்பம்போல் நீங்கள் அங்கு வந்து வசிக்க ஒப்பாவிட்டால் கல்யாணத்துக்குச் சம்மதம் தரமாட்டேன் என்கிறார்!" பதற்றமும் துன்பமும் நிறைந்த பார்வையை ஆறுதலின் பொருட்டு என்மேல் பதித்து அவள் அண்ணாந்து பார்த்தாள். அன்பினாலும் கருணையாலும் என் மனம் நெகிழ்ந்தது.

"கவலைப்படாதே, வாணி! நான் இப்போதே உன்னுடன் வருகிறேன். உன் அப்பாவோடு மன்றாடுகிறேன்; வாதாடுகிறேன். நம் விவாகத்தை எதிர்த்தால் நம் இன்பமே குலைந்து விடுமென்று உணரச் செய்கிறேன். எங்கே, கொஞ்சம் சிரி, பார்க்கலாம்!"

நெஞ்சில் நம்பிக்கை இருந்தது. ஆனாலும் உடலில் பதற்றம். நண்பனின் மோட்டார் ஒன்றைக் கேட்டு வாங்கி, வாணியைப் பக்கத்தில் அமர்த்திக் கொண்டு வேகமாய் அவள் வீட்டை நோக்கி ஓட்டலானேன். என் கலவரத்தை அவளும் கவனித்தாள்.

பழக்கடைத் தெரு. நெரிசல் தாங்கவில்லை. வண்டியை ஓட்டுவது பிரயாசையாயிருந்தது. பிறகு ஒரு கணம்தான். "அதோ பாருங்கள், அப்பா நிற்கிறார்!" என்று வாணி கூக்குரலிட்டது ஏதோ அர்த்தமற்ற ஒலியாய்த்தான் கேட்டது. வண்டிக்கு நேர் எதிராக ஓடி வந்து கொண்டிருந்த குழந்தையைத்தான் நான் பார்த்து விபத்தைத் தடுக்கக் கைச்சக்கரத்தைப் பக்கவாட்டில் முழுவிசையுடன் ஒடித்தேன். அதே விநாடி வாணியின் ஓலமும் இன்னொரு பயங்கரக் கூக்குரலும் ஒன்றும் இணைந்தன. கூட்டம் கூடிவிட்டது.

இறங்கிச் சென்று நான் பார்த்தபோது சங்கரன் மோட்டாருக்குக் கீழ் பிரக்ஞையற்று விழுந்து கிடந்தார். ரத்தக் குளத்தில் அவர் கால்கள் புதைந்திருந்தன.

தந்தையருகில் மண்டியிட்டு அரற்றிக் கொண்டிருந்த வாணி என்னை நிமிர்ந்து பார்த்தாள். சிவந்து கிடந்த அவள் கண்களில் விவரிக்க முடியாத சீற்றத்தையும் வெறுப்பையும் நான் கண்டேன்.

என் இன்பத்துக்கும் ஆசைக்கும் அதுவே முடிவாயிற்று. சங்கரன் ஆஸ்பத்திரிக்குச் சென்றார். போலீஸ் விசாரணை முடிந்தது. வாணிதான் விஷத்தைக் கொட்டினாள்.

"குழந்தை எதிரே வந்தால் வண்டியை நிறுத்தியிருக்கலாமே? அப்பா நிற்கிறார் என்று நான் கூவியிருந்தும் அவர் பக்கமாய்த்தான் மோட்டாரைத் திருப்ப வேண்டுமா? அவரைப் பார்த்ததும் உங்களுக்கு யோசனை உதித்து விட்டது. அப்படித்தானே? அவர் எதிர்ப்புகளுக்கு நல்ல நிவாரணம்தான் யோசித்தீர்கள். ஆனால் தந்தையைக் கொல்வது மகளை மயக்கும் வழியா என்பதைச்

செத்திருப்பீர்களா? நல்ல வேளையாக அப்பாவின் கால்கள் மட்டும் அகப்பட்டுக் கொண்டன. இல்லையானால் இல்லையானால்...''

முகத்தை மூடிக்கொண்டு அவள் விம்மினாள். நான் எவ்வளவோ கெஞ்சினேன். நிரபராதி என்று மன்றாடினேன். ஆனால் ..

'' முன்பு உங்களை விரும்பினேனல்லவா? இப்போது வெறுக்கிறேன். உங்களை மனமார வெறுக்கிறேன்.''

அவள் மரணத் தீர்ப்பை விதித்து விட்டாள். நான் மௌனியானேன். இன்றையக் கண்ணீர்த் துளிகளுக்கிடையே நேற்றைய இன்பங்களின் சடலங்களைப் பொறுக்கும் பிச்சைக்காரனானேன்.

அப்போதுதான் என் எண்ணம் ரவியிடம் பாய்ந்தது. என் கைநழுவிப் போன சந்திராவுக்கு அவன் இன்னும் உரிமைக்காரனாயிருந்தான். நாங்கள் இதுவரை எல்லாவற்றிலும் சமமாயிருந்தோம். காதலிலும் சமமாயிருந்தோம்; ஆனால் அவனுடையது நிலைத்துப் பிரகாசிக்கும் ஒளி நட்சத்திரமாயிற்று. என்னுடையதோ விண்ணை முன்னிலும் கரிய தாக்கி ஓடும் எரி நட்சத்திரமாக விழுந்தது.

ஏன் இந்தப் பட்சபாதம்? நாங்கள் எல்லாவற்றிலும் ஒன்றாய் நடத்தப்பட வேண்டும். ஒன்றாகவே உலகத்தில் தோன்றினோம். நாங்கள் ஒன்றேதான். இரண்டல்ல. அப்படித் தெய்வமே பார்த்து எங்களைப் படைத்திருந்தது. இதுவரை பிறப்பு, வளர்ப்பு, பள்ளி, உத்தியோகம் எல்லாவற்றிலும் சம அந்தஸ்தைப் பெற்று வாழ்ந்தோம். அது நியாயம். இப்போது மனிதனின் மிக முக்கியமான துறையில்—அன்பு இன்பம் என்ற மகத்தான துறையில்—எங்களுக்குள் வித்தியாசம் ஏற்படுவதா? இது நீதியா? தெய்வம் பார்த்துக் கொண்டிருக்குமா?

வியர்வை ஓட, கைகளை ஒன்றன்மேல் ஒன்று குத்திக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாகப் பைத்தியக்காரன்போல் நடந்தேன். பிருந்தாவோடு ரவி ஆனந்தமாய் உரையாடுவதை என் கற்பனையில் கண்டேன். மனக்கசப்பு என்னைப் பிடுங்கியது. அருமைச் சகோதரனைக் குறித்து உள்ளத்தில் இந்தப் புரட்சி: அவன் மட்டும் ஏன் சந்தோஷமாயிருக்க வேண்டும்?

எந்தப் பிரத்தியேகமான ஒருமை பாவம் எங்களுக்குள் உடலில் உயிர்போல் இழைபோடியிருந்ததோ அதுவே இப்போது இந்த வேற்றுமையைக் கண்டு நான் கொதித்து எழக் காரணமாயிற்று.

சென்னைக்குச் சென்று ரவியின் முகத்தில் விழிக்க எனக்கு விருப்பமில்லை. 'வரவில்லை' என்ற சமாசாரத்தை அம்மாவுக்கு எழுத நாலு நாட்களாய் நினைக்கிறேன். உணர்ச்சிக் கொந்தளிப்பிலும் அதைக் குறித்த நினைவே இல்லாமற் போய் விட்டது.

இப்போது ஒருவாறு என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு கடிதம் எழுத உட்கார்ந்தேன். நான் கல்யாணம் செய்து கொள்வதாயில்லை என்பதை முதலில் எழுதினேன். பிறகு ''நான் பட்டணம் வரவில்லை. அருமைப் பிருந்தாவின் அருமை மணாளனாகப் போகும் என் சகோதரனுக்கு இந்தப் பிரம்மச்சாரியின் வாழ்த்துக்களைச் சொல். நம் வீட்டில் ஒருநாள் நாங்கள் இருவரும் பெண் சிரிப்பைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததை அவன் மணமகனாய் மணையில் அமர்ந்திருக்கும்போது நினைத்துப் பார்க்கச் சொல் ...''

'' ரகு!''

இதயத்தில் ஓங்கி அடித்தாற் போலிருந்தது. திரும்பினேன். முகத்திலும் உடலிலும் புழுதி படிந்து வாணி நின்று கொண்டிருந்தாள்.

நான் முதலில் திடுக்கிட்டேன். பிறகு சங்கடப் பாவிட்டய கதவைப் பார்த்துக்கொண்டு, ''வா!'' என்றேன். என் குரல் உணர்ச்சியற்றிருந்தது. ஆனால் எத்தகைய உணர்ச்சியை அடக்கிக்கொண்டு அதை அப்படிச் சொன்னேனென்பதை அவள் அறிவாளா?

அவள் மெதுவாக ஒரு நாற்காலியில் அமர்ந்தாள். என் உள்ளம் வேகமாய் ஓடியது. அவள் உடனே பேசவில்லை. ஓரக்கண்ணால் ஒருதரம் அவளை நோக்கிய நான் அவள் தேகம் துடித்துக் கொண்டிருந்ததைக் கண்டேன். என் மனம் வலியால் முனகியது.

கடைசியாக அவள் குரல் தயக்கத்துடன் வந்தது. ''ரகு! உங்களுக்கு என்மேல் கோபம். இல்லையா?... நியாயம்தான். ஒருவேளை... என்னை வெறுத்தாலும் வெறுக்கலாம்.''

நான் கண்களைத் திருப்பவில்லை. அந்த மெல்லிய குரல் உணர்ச்சியில் உடைந்து வெளிப்பட்டது ''என்னை மன்னித்து விடுங்கள். இப்போதுதான் உண்மை தெரிந்தது. எங்கள் உறவினர்களை எல்லாரையும்விட அன்போடு, கவலையோடு நீங்கள் தினம் ஆஸ்பத்திரிக்கு வந்து பிள்ளையில்லாத என் அப்பாவுக்குச் சேவை செய்தீர்களாம். டாக்டர் சொன்னார். நான் சந்தேகித்தது அக்கிரமம். நான் இல்லாத சமயங்களில் எனக்குத் தெரியாமல், இவ்வளவு உதவி செய்திருக்கிறீர்கள்.





# செல்லம் அழுதது ஏன்?

பிற்பகல் வேளை; பித்தான்கள் உடைந்து காலரிலும் கைகளிலும் இழிந்திருந்த என் கணவரின் சட்டைகளை நான் தைத்துக்கொண்டிருந்தேன். அதே சமயம் பக்கத்து வீட்டுப் பப்பியுடன் விளையாடிக் கொண்டிருந்த என் குழந்தை செல்லம் திடீரென வீரிட்டு அழுதாள்; அந்த அதிர்ச்சியில் தையல் ஊசியே என் கையில் ஏறிவிட்டது. கோபத்துடன் திண்ணைக்கு ஓடிவந்தேன். அதே சமயம், பப்பியின் தாயார் கண்ணம்மாவும் அங்கு ஓடிவந்து செல்லத்தை வாரியெடுத்து சமாதானம் செய்ய முயன்றாள்: "ஆரு அடிச்சாம்மா என் செல்லக் குழந்தையை?"

"மாமி, ப...ப...பப்பி என் பொம்மயோட கவுனை அழுக்காக்கிட்டா, மாமி!" என்று விசித்து விசித்துக் கூறினாள் செல்லம்.

"அவ்வளவுதானே. பப்பியை ராம்ப நல்லா அடிச்சுட்டு, உன் பொம்மைக்கு புதுசா ஒரு கவுன் வாங்கிப் போட்டுடலாம், வா!" என்று தேற்றி விட்டு, இரு குழந்தைகளையும் தன்னோடு அழைத்துச் சென்றாள் கண்ணம்மா. கண்ணம்மாவிடம் காணப்படும் தங்கமான குணங்களில் ஒன்று, தன் குழந்தைகளைப் போலவே பிறர் குழந்தைகளையும் அரவணைத்துக்கொள்ளும் தன்மை. தன் தந்தை பணக்காரர் என்ற கர்வம் எள்ளளவும் அவளிடம் கிடையாது.-இவ்வாறு எண்ணமிட்ட வண்ணம் அப்படியே கண்ணயர்ந்து விட்டேன். அப்புறம் செல்லம் வந்து என்னை எழுப்பினாள். கண்விழித்துப் பார்த்ததும், செல்லத்தின் கையிலிருந்த பொம்மைக்குப் புதுக்கவுன் போட்டிருந்தது தென்பட்டது—முன்பிருந்ததைப் போலவே இருந்தது இந்தக் கவுனும். இந்த ஏற்பாடு எனக்குப் பிடிக்கவில்லை. இதை ஆட்சேபிக்க கண்ணம்மாவின் வீட்டுக்கே சென்றேன்.

கண்ணம்மாவோ "புதிதாகக் கவுன் ஏதும் வாங்கவில்லையே. சில துணிகளை நான் துவைக்க வேண்டியிருந்தது. கையோடு கையாக அந்தக் கவுனையும் அலசினேன்" என்றாள். அழகாயிருக்கிறதே பேச்சு! வீட்டில் துணிகளைத் துவைத்துக் கொள்ளும் வழக்கம் எங்களுக்கே கிடையாது; சலவை செய்ய வெளியே அனுப்புகிறோம். அப்படியிருக்க, மோதிரக் கையினால் துணி துவைப்பதாகக் கூறினால், நம்புகிறவள் நானா? "அதெப்படியம்மா துவைத்தீர்கள், அடித்துத் துவைக்கும் சத்தங்கூடக் கேட்காமல்?" என்றேன்.

S. 256A-50 TM

என் பேச்சில் நம்பிக்கை இல்லாவிட்டால் இதோ இந்தத் துணிகளைப் பாருங்கள். இப்போது தான் இஸ்திரிபோட்டு முடித்தேன். ஆனால் அடித்துத் துவைக்கும் சத்தம் கேட்காத காரணம்........."



ஆனால் என் கவனமோ அவள் பேச்சில் லயிக்கவில்லை. வெகு பளிச்சென்று சுத்தமாக விளங்கிய அந்தத் துணிகள் மீது என் பார்வையைப் பறிகொடுத்துவிட்டேன். எனினும், அதே சமயம் என் மனதை உறுத்திய விஷயம் வேறொன்று: தன் செய்கையைப்பற்றி நாலுபேர் என்ன நினைப்பார்கள் என்பதை யோசித்துப் பார்த்தாளா இவள்? இதையே நான் இவளிடம் கேட்டதும், அவள் சிரித்துவிட்டு "நல்ல கேள்வி கேட்டாய். என் வேலையை செய்வதற்கு நான் ஏன் கூச்சப்படவேண்டும். தாம் தூம் விவகாரமே எனக்குப் பிடிப்பதில்லை. என் கையாலேயே நான் துணிகளைத் துவைத்துக்கொள்வதில் எவ்வளவோ சிக்கனமிருக்கிறது. அன்றாடம் உடுத்திக்கொள்ள சுத்தமான துணிகள் கிடைப்பதோடு அவை நீடித்து நிற்கவும் செய்கின்றன" என்றாள்.

"நீடித்து உழைக்கிறதாவது; அதென்னமாக? எங்கள் வீட்டுத்துணிகள் விறுவிறுவென்று கிழிந்துவிடுவதும் வாங்கின சுருக்கோடு விட்டுப்போய் விடுவதும் சர்வ சாதாரணமாகிவிட்டன: வருஷத்துக்குப் பலதடவை புதுத்துணிகள் வாங்கி மாளவில்லை!"



"அடித்துத் துவைப்பதால்தான் அவை கிழிந்துவிடுகின்றன. ஆனால் நாங்களோ அடித்துத் துவைக்காமல் ஸன்லைட் சோப்பினால் சலவை செய்கிறோம்"

பரிசுத்தமுள்ள சிறந்த சோப்பான ஸன்லைட் ஏராளமான நுரை கொழிக்கிறது என்றும், கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலுமுள்ள எல்லா அழுக்குகளையும் நொடிப்பொழுதில் அகற்றிவிடும் நுரை அதனுடையதுதான் என்றும் விளக்கிக்கூறினாள் கண்ணம்மா.

இப்போதெல்லாம் நாலுபேர் நினைப்பதைப்பற்றி நானும் அக்கறைப்படுவதில்லை. துணிகளை வீட்டிலேயே ஸன்லைட் சோப்பினால் சலவை செய்துவிடுகிறேன். அது சிக்கனமான சோப் என்றும், சிறிதும் பெரிதுமாக சுமார் நாற்பதைம்பது உருப்படிகளை சுத்தமாகவும் பளிச்சென்றும் வெளுப்பதற்கு ஒரே ஒரு வில்லை ஸன்லைட்டே போதுமானது என்றும் கண்டு கொண்டேன். இப்போதெல்லாம் அன்றாடம் உடுத்துவதற்குத் தூய்மையான துணிகள் எங்களெல்லோருக்கும் கிடைத்துவருகின்றன: கிழிசல்கள் தைக்கப்பட்ட ஆடைகளை அணிந்து கொள்ளும் நிலைமையும் காலர்களையும், கைகளையும் கோட்டுக்குள் மறைத்துக்கொள்ளும் அவசியமும் இனி என் கணவருக்குக் கிடையாது. சிக்கனம் என்றால் எல்லா விதத்திலும் சிக்கனம். ஒரு-குடும்பப் பெண்மணிக்கு இதைவிட வேறென்ன வேண்டும்?



என்றைக்காவது ஒரு நாள் என்னை நீங்கள் மன்னிக்க முடியுமா?'' என்றாள் வாணி.

அடுத்த கணம் நான் அவள் அருகில் இருந்தேன்; அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு. அன்பையும் ஆறுதலையும் அளித்துக் கொண்டு எந்த லோகத்தில் இருக்கிறோமென்பது புரியவில்லை. எல்லாம் கனவு போல் இருந்தது.

''அப்பா இப்போதெல்லாம் உங்கள் குணத்தைப் புகழ்கிறார். உங்கள் பேச்சுக்கு இனி தடை ஏதும் இருக்காது!''

மாறுதல் மிகவும் திடீரென்று வந்துவிட்டது. நரகத்திலிருந்து சுவர்க்கத்தின் சிகரத்துக்குக் கண் இமைக்கும் நேரத்துக்குள் வந்து நின்றதால் கண்கள் கூசின. வாணி என்னிடம் மறுபடியும் வந்து விட்டாள் தன் அன்பை ஏந்திக்கொண்டு. முன்பு சந்தோஷமாக இருந்த மனிதனை விட நான் அதிக



சந்தோஷமான மனிதன். ஏனென்றால் இடையில் துன்பம் வந்து இன்பத்துக்கு விளக்கேற்றிப் போயிருந்தது.

''நம் கஷ்டமெல்லாம் தீர்ந்தது, வாணி!... உம், உன் அப்பா எப்படி இருக்கிறார்?'' இன்னும் தெளியவில்லை - இன்பபோதைதான்.

''சந்தோஷமா யிருக்கிறார். இன்னும் இரண்டு மாதங்களில் கால் சரியாகிவிடுமாம். அப்போது அவரே முன் நின்று நம் கல்யாணத்தை நடத்தி விடுவாராம்.''

அவள் முகத்தில் நாணம். என் நெஞ்சில் பேச்சை மீறிய பெரும் இன்ப நிறைவு.

சிரித்துக் கொண்டு திரும்பினேன். என் கண்கள், நான் பாதி எழுதியிருந்த கடிதத்தின் மேல் விழுந்தன. பார்வையை அகற்றாமல் பிரமையுடன் சென்று அதன் கடைசி வரிகளைப் படித்தேன். அவமானத்தால் என் உயிர் வெளியே சிதற விடும் போலிருந்தது. என் சகோதரனைப் பற்றி இவ்வளவு கேவலமான எண்ணங்களையா கொண்டிருந்தேன்? என் சுயநலத்தால் என் சொந்த நஷ்ட உணர்வினால், அவனது இன்ப வாழ்வை நினைத்து வயிறு எரிந்தேனா? விதி எங்களை ஒன்றாகத்தான் நடத்தியிருக்கிறது. நாங்கள் இருவரும் ஒன்றுதான். நான் தான் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டேன்.

அன்றிரவே நான் சென்னைக்குக் கிளம்பி விட்டேன், என் சகோதரனைக் காண.

ரயில் நிலையத்தில் ரவியைக் கண்டதுமே என் உள்ளம் துள்ளி எழுந்தது. பொங்கும் அன்புடன் பேச்சின்றி நாங்கள் ஒருவர் கரத்தை மற்றொருவர் பற்றிக்கொண்டோம். என் சகோதரனை எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் போதுமென்றே தோன்றவில்லை. அந்தப் பழைய பரிச்சயமான பேரன்பு அவன் விழிகளில் பரவியிருந்தது. அவனைப் பார்க்கும்போதே பெரிய ஐசுவரியத்தை அடைந்து விட்டாற்போலிருந்தது எனக்கு.

''ரகு! நான் தினம் உன்னைப் பற்றித்தானடா நினைத்துக் கொண்டிருந்தேன்.'' பழைய நாட்களைவிட அதிக அன்புடன் அவன் என்னை நோக்கினான். ''உன்னைப் பார்த்து எனக்கு எவ்வளவு சந்தோஷம், தெரியுமா? உன் சமாசாரம் எல்லாம் சொல்லு.''

''சமாசாரம் என்ன? அதுதான் கடிதங்கள் எழுதிக்கொண்டே இருந்தேனே!''

''இருக்கட்டுமே. உன் வாயாலேயே உன்னைப்பற்றியும் உன் வாணியைப் பற்றியும் உங்கள் வருங்கால யோசனைகளைப் பற்றியும் ஒன்று விடாமல் சொல்.''

அவன் என்னைப் பரிகாசம் செய்வதாக முதலில் நினைத்தேன். ஆனால் அவன் குரலில் உண்மை ஒலித்தது. மறுமுறை என் நீச எண்ணங்களுக்காக உள்ளூற வெட்கியவனாய் என்னைப் பற்றிய எல்லா விஷயங்களையும் சொன்னேன். பிற ஒலிகளுக்கெல்லாம் செவிடாகி அவன் என் குரலைச் செவியுற்றான். என் ஒவ்வொரு வார்த்தையையும் ஆவலுடன் பருகினான். வாணி என்னிடம் மனஸ்தாபம் கொண்டாள் என்றபோது அவன் முகம் துன்பமுற்றது. மறுபடியும் நாங்கள் ஒன்று சேர்ந்ததை உரைத்தபோது அவன் முகம் மலர்ச்சியுற்றது. நேற்று நான் என் இன்பத்தைத் திரும்பவும் பெற்றேன் என்ற உண்மை அவனுக்கு ஒரு விசேஷ மகிழ்ச்சியைக் கொடுத்தாற்போல் தோன்றியது.

வீடு சேர்ந்து நான் பெற்றோருடன் உரையாடினேன். அக்கம் பக்கமிருந்த நண்பர்கள் பார்க்க வந்தார்கள். என் மனம் அவர்களை நாடவில்லை. தலைவலி என்று சாக்குச் சொல்லி ரவியை அழைத்துக் கொண்டு தனியாக எங்கள் பழைய அறைக்கு வந்து விட்டேன். அன்பும் மதிப்பும் மனத்தில் தேங்கவில்லை. பார்வையில் வழிந்து சொல்லிலும் உடைப்பெடுக்கத் துடித்தது.

''உன்னோடு பேசிக்கொண்டே யிருக்க வேண்டும் போல் இருக்கிறது, ரவி!'' என்றுதான் என்னால் கூற முடிந்தது.

அவன் எங்கோ பார்த்தவாறு இருந்தான். முதன் முதலாக அவன் கண்களில் அது என்ன? வாட்டமா? வேதனையா?

''என்ன ரவி?'' என்றேன் மெதுவாக.

என் குரலால் எழுப்பப்பட்டவன் போல் அவன் திடுக்கிட்டு, ''ஒன்றுமில்லையே.. உன் விஷயங்களையெல்லாம் கேட்டு எனக்குப் பரம சந்தோஷமாயிருக்கிறது'' என்றான். ஒரு நிமிஷம் நிசப்தம். பிறகு திடீரென்று அவனிடமிருந்து பேச்சு வந்தது.

''ரகு! நாம் இருவரும் ஒருவர்போன்றவர்கள். இரட்டைப் பிறப்பு. அதனாலேயே ஒருவரிடம் இல்லாததை இன்னொருவரிடம் கண்டு பூரணமடைய முடியுமென்று நான் நினைக்கிறேன். நம் இரண்டு வாழ்க்கைகளும் ஒரு ஐக்கியமான, தொடர்ச்சியான பொருள். உனக்கு அப்படித் தோன்றவில்லையா?'' என்றான். அவன் கருத்து என்னை வியப்பில் ஆழ்த்தியது.

''நமது இரட்டைப் பிறப்பினால் நாம் எப்போதும் ஒரே விதமான சுகங்களை அனுபவிக்க வேண்டுமென்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ரவி! இப்போது உன்னைப்பற்றியெல்லாம் சொல்லு. நம் இருவர் வருங்காலமும் ஒரே வகையானதுதான் என்பதை நான் அறிந்து சந்தோஷப்படுகிறேன்!''

''நான் எப்போதும்போல் சௌக்கியமாய் இருக்கிறேன்'' என்று கூறினான். ஆனால் அவனுடைய வார்த்தைகளில் சோகம் கலந்திருந்தது.

''நான் கேட்பது அதையல்ல. உன் இதய நிலையைப்பற்றி, உன்னைப் பித்தனாக்கும் பெண் சிரிப்புக்களைப் பற்றி.''

அவன் மௌனமாயிருந்தான்.

அவன் முகத்திலே கவலையின் அறிகுறி தோன்றியது. அது அவன் உள்ளத்து வேதனையைத் தெளிவாக எடுத்துரைத்தது. 'அவனுக்கும் பெரும் சோதனையா?'

எனக்குத் திடீரென்று கலவரம் ஏற்பட்டது. ''என்ன விஷயம் ரவி?'' என்றேன் நிமிர்ந்து உட்கார்ந்தவாறு.

அவன் என்னைப் பார்த்தான். பார்வையில் அமைதி. குரலில் நிதானம். ஆனால் அவன் கண்களில் இப்போது துன்பவெள்ளம் குறைவில்லாது பிரவாகமாகப் பொங்கி வழிவதைக் கண்டேன். அவன் புன்னகை தன் வெறுமையில் பரிதாபமாய்க்காட்சியளித்தது.

''ரகு!'' குழந்தையைப்போல் அவன் என் கைகளைப் பற்றிக் கொண்டான். என் விரல்கள் மேல் அவன் விரல்கள் நடுங்கின. அடுத்த கணம் ரவி தன் உள்ளத் துயரம் அனைத்தையும் கொட்டி விட்டான்.

''அவள் போய் விட்டாள். பிருந்தா இறந்து விட்டாள். மணமகன் இங்கு காத்திருக்க, மணமகள் சுவர்க்கம் புகுந்து விட்டாள். ஒரு மோட்டார் விபத்தில் மாண்டாள் என் பிருந்தா. நேற்று நாங்கள் இருவரும் கடற்கரைக்குப் போய்த் திரும்பி வந்து கொண்டிருந்தோம். அவள் பேசிக் கொண்டிருந்தாள். திடீரென்று ஏதோ ஒரு பொருள்—பெரிதாய், கறுப்பாய்—என் பக்கத்தில் பாய்ந்து சென்றது. அவள் நடந்து கொண்டிருந்த பக்கத்தில், என்ன ஆயிற்றென்று நான் உணருவதற்கு முன்பே எல்லாம் ஆகி முடிந்து விட்டது. அந்தக் காட்சி என் நெஞ்சிலிருந்து என்றும் மறையாது. தெருவில்—ஒரு மோட்டாரின் கீழே—என் பிருந்தா கிடந்தாள். அசைவின்றி, பயங்கரமாய்ப் படுத்துக் கிடந்தாள். உயிரில்லாத அவளுடைய தேகம் பெரிய ரத்தக் குளத்தில் புதைந்துகொண்டிருந்தது...''

# பொன் மணல்

"முன்ஷி"



"ஆகா!" என்று அதிசயத்துடன் கத்தி, தம் வியப்பைக் காட்டிக் கொண்டு வேணு குனிந்து வெல்ல அச்சு அளவில் ஒரு கல்லைக் கையில் எடுத்தார். அது பழுப்பும் கறுப்பும் கலந்த நிறமாயிருந்தது. அதைத் தட்டி உடைத்ததும் உட்புறத்தில் சில மஞ்சள் நிறமான புள்ளிகளும் கோடுகளும் தென் பட்டன. அவற்றைப் பார்த்ததும் வேணுவுக்குப் பட்டும் படாமலும் ஏதோ பழைய நினைவு தோன்றியது.

"இது என்ன பொருளாயிருக்கலாம்?" என்று சிந்தித்துக் கொண்டே அவர் அந்த மஞ்சள் புள்ளிகளைப் பேனாக் கத்தியால் கீறினார். மஞ்சள் நிறக் கண்ணாடித் தகடுபோல் பிரகாசித்துக் கொண்டு சில சிறு துகள்கள் உதிர்ந்தன. "கந்தகமா?....அபிரகமா...?" என்று யோசித்து, "கந்தகமாயிராது....அபிரகமாகவும் இராது ..ஆனால் சோதிக்காமல் ஒன்றும் சொல்வதற்கு இல்லை" என்ற அரை குறைத் தீர்மானத்துக்கு அவர் வந்தார்.

உலோக-கந்தகக் கலப்புள்ள 'ஸல்பைட்' 'பைரைட்ஸ்' வகைக் கட்டிகள் ஓடை மணலில் சிற்சில இடங்களில் கிடைப்பது அவருக்குத் தெரிந்த விஷயம். ஆனால் சுத்த-கலப்பற்ற-கந்தகத் துகள் தரை மட்டத்தில் கிடைக்கும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. எதுவாக இருந்தாலும், சோதனைக்கு உரிய விஷயம் அது. ஆகவே அது போன்ற பல கற்களை எடுத்துச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு ஓரளவு பரபரப்புடன் அவர் வீட்டுப் பக்கம் திரும்பினார்.

* * *

வேணுகோபாலன் பிறவி சுபாவத்தாலும் கற்ற கல்வியினாலும் ஒரு சிறந்த விஞ்ஞானி. அவருக்கு எப்பொழுதுமே எவ் விஷயத்தையும் கவனித்து ஆராய்ந்து சிந்திக்கும் குணம் உண்டு. அவருடைய உபாத்தியாயர்கள் சிலர் அளித்த ஆதரவும் அவர் இயல்புக்கு ஒத்தே இருந்தது. தாவர சாஸ்திரத்தில் எம். எஸ்ஸி. பட்டம் பெற்றதும் அவர் வட இந்தியாவில் ஒரு சர்வகலாசாலையில் ஆசிரியராக அமர்ந்தார். அங்கிருக்கும் போது அவர் உயர்தர ரசாயனம், பௌதிகம், பிராணி நூல், பூ-கர்ப்ப சாஸ்திரம் போன்ற மற்ற சாஸ்திரங்களைப் புது நோக்குடன் ஆழ்ந்து படித்தார்; புத்தம் புதிய நூல்களையும் பத்திரிகைகளையும் 'கரைத்துக் குடித்து'த் தக்கவருடன் சர்ச்சை செய்து அவர் தம் அறிவை வளர்த்துப் பக்குவப் படுத்திக் கொண்டார். ஜெர்மனி, பிரான்ஸ் முதலான ஐரோப்பிய நாடுகளில் விஞ்ஞான ஆராய்ச்சி தீவிரமாக முன்னேறு வதால் அவர் விஞ்ஞானக் கட்டுரைகள் புரிந்து கொள்ளும் அளவுக்கு ஜெர்மன், பிரான்ஸ் இத்தாலிய பாஷைகளில் பரிச்சயம் பெற்றார். இப்பேர்ப்பட்ட விசாலமான ஞானத்தாலும் அமைதியும் அன்புமுள்ள சுபாவத்தாலும் அவர் தம் மாணவர்களுக்கு ஒரு ஆதர்சமாக விளங்கி வந்தார்.

ஆனால் வருஷங்கள் கழியக் கழிய உபாத்திமைத் தொழிலில் அவருக்கு ஆர்வம் குறைய ஆரம்பித்தது. தம்முடைய மாணவர்கள் செல்வத்தையும் உழைப்பையும் பலியிட்டுக் கற்கும் கல்விக்கும் பிற்காலத்தில் அவர்கள் செய்யும் தொழிலுக்கும் சம்பந்தம் இல்லாமல் இருப்பது அவர் மனத்தை மிகவும் உறுத்தியது. எம்.ஏ.,யும். எம்.எஸ்ஸி.,யும் படித்து விட்டுப் பலர் சிறு குமாஸ்தாக்களாகத்தான் அமர முடிந்தது. அவர்கள் தினசரி செய்யும் வேலைக்குச் சொற்பப்படிப்பே போதுமானது என்று நினைக்க இடம் இருந்தது. நன்றாகப் பாடக் கற்ற பெண் விவாகத்துக்குப் பின் பாட முடியாத நிலையில் இருப்பதுபோல் அம்மாணவர்களின் ஆழ்ந்ததும் விஸ்தாரமுமான கணித விஞ்ஞான அறிவு சமூகத்துக்கும் நாட்டுக்கும் பயன்படவில்லையே, ஏராளமான பண நஷ்டமும் ஏமாற்றமும் அனுபவித்த குமாஸ்தாக்கள் மலிந்து கிடக்கிறார்களே என்று நினைத்து நினைத்து அவர் வருந்தினார். போலோ ஆட்டத்துக்காகத் தேர்ந்தெடுத்துப் பயிற்சியளிக்கப்பட்ட உயரிய குதிரையை ஜட்கா வண்டியில் பூட்டுவது போல் இருந்தது நாட்டின் நிலைமை.

அதுமாத்திரமல்ல, அதைவிடப் பெரிய தீங்கொன்றும் இருந்தது. அந்த உத்தேசமற்ற பெருமைப் படிப்பினால் அவர்களுடைய உடல் இளைத்தும், சேமித்த அறிவுக்கும் சக்திக்கும் செலவின்மையால் மூளைத்தேக்கம் ஏற்பட்டும், ஏழைமையால் உற்சாகம் குன்றியும் போய், அவர்கள் பொறுப்பற்ற 'புல்லுருவி' வாழ்க்கைக்கே தகுதி பெற்றிருந்தார்கள்; தம் சொந்த முயற்சியாலும் உழைப்பாலும் சுதந்திர வாழ்க்கை நடத்தவோ, இயற்கையான எளிய ஜீவனம் நடத்தவோ இயலாதவர்கள் ஆனார்கள். வியாபாரத்திலும் தொழில் துறையிலும் முன்னேறிய பல அயல் நாடுகளில் இக்குறை அவ்வளவாக இல்லை. இதெல்லாம் உத்தேசித்து, தாம் நடத்துவது பயனற்ற தொழிலோ, பாபத் தொழிலோ, தாமும் ஒரு 'புல்லுருவித்

தோட்டக்காரனோ' என்ற சந்தேகம் அவர் மனத்தை வருத்தியது. அமுலில் இருக்கும் திட்டத்தைத் தனிப்பட்ட முறையில் அவரால் மாற்ற முடியாது. பிரசங்கங்கள் மூலமாகவும் பத்திரிகை வாயிலாகவும் ஓரளவு தம் நோக்கங்களைப் பரப்பலாம். பலன் கிடைக்குமா? எத்தனை வருஷங்களில் கிடைக்கும்—என்பவை நிச்சயமற்ற விஷயங்கள். ஆகையால் அமைதியைக் கலைக்கும் அவ்வேலையிலிருந்து ஒதுங்கிக் கொள்வதே தான் அப்போதைக்குச் செய்யக்கூடிய காரியம் என்று அவர் தீர்மானித்தார்.

அதன் பிறகு சில வருஷங்கள் அவர் அரசாங்கத் தொழிற்சாலைகளிலும் வர்த்தகத் தொழிற்சாலைகளிலும் ஆக்க வேலைகளில் அமர்ந்திருந்தார். புதுக் காரியத் திட்டம் அவர் மனப்போக்குக்கு ஒத்திருந்தது. ஆகவே முழு மனத்தையும் செலுத்தி உழைத்து அவர் அநேக புதிய செய்முறைகளையும், உண்மைகளையும் கண்டெடுத்தார். பல நாட்டு அறிஞர்கள் அவருடைய சாதனைகளையும் கட்டுரைகளையும் மனப்பூர்வமாகப் பாராட்டினார்கள். அவருக்கு 'ஸர்' பட்டம் கிடைக்க இருப்பதாகக் கூடப் பிரஸ்தாபம் உலவியது. நல்ல சம்பளம்; உயரிய மரியாதை; மன அமைதி.

இப்படி இருக்கும்போது ஒருமுறை அவர் ரஜா வாங்கிக்கொண்டு தம் கிராமத்துக்குச் சென்றார். அவர் பல வருஷங்கள் வட இந்தியாவிலேயே, அதிலும் நகரங்களின் சிறந்த பகுதிகளிலேயே இருந்து விட்டதால் இப்பொழுது சட்டென்று கிராமத்துக்கு வந்ததும் அது அவருக்கு ஒரு புது உலகமாகவே தோன்றியது. மேலோட்டமாகப் பார்த்தால் கிராமத்தில் மனத்தைக் கவரக்கூடியதாக ஒன்றுமில்லை. வெய்யில் பொசுக்கிக் கொண்டிருந்தது. மின்சார விசிறிகளோ கிடையா; பொழுது போக்குக்கு வசதிகளும் கிடையா. பார்வை ஓடும் தூரத்துக்குக் குடியானவர்கள் அருவியாக வியர்வை வழிய, ஒட்டிய வயிற்றுடன், பாடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் சில வயல்கள்தான் கருகருவென்று செழிப்பாய் இருந்தன; பெரும்பாலானவை கானல் பறக்கும் பொட்டலாயும் சரளைக் காடாயும் இருந்தன. பாவம், குடியானவர்களோ பலன் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் பட்டம் தவறாமல் உழைத்து வந்தார்கள்.

வேணுகோபாலனுக்கு அந்தக் குடியானவர்களிடம் மனப்பூர்வமான அன்பு உண்டாயிற்று. அவர்கள்தான் மழையிலும் வெய்யிலிலும், நிறைவிலும் குறைவிலும் பாடுபட்டு அவருக்கு, மறைமுகமாக, ஊணும் உடையும் வசிக்கப் பங்களாவும் சவாரிக்கு மோட்டார் வண்டியும் கொடுத்து வந்தார்கள். அவரோ அவர்களுக்காக ஒன்றும் செய்ததாகத் தெரியவில்லை. வருவதையெல்லாம் பெற்றுக் கொண்டு பதிலுக்கு ஒன்றும் கொடுக்காத பாவத்தைச்செய்தவன் என்று அவர் தம்மைத் தாமே கண்டித்துக் கொண்டார்.

அவர் உத்தியோகத்தை முறைப்படி ராஜிநாமா செய்துவிட்டுத் தம் புஸ்தகங்களையும் விஞ்ஞானக் கருவிகளையும் வைத்துக்கொண்டு கிராமத்திலேயே வசிக்க ஆரம்பித்தார். அதன் பயனாக, தம் பழைய சுக போக காலத்தில் அவர் அறிந்திராத ஒரு பூரிப்பு அவருக்குக் கிடைத்தது.

அக்கம் பக்கத்து கிராமத்தாருக்கு அவர் பலவிதத்திலும் உபகாரம் செய்ய முடிந்தது. அவர்களுடைய நிலங்களை 'சர்வே' செய்து அவர் பயனளிக்கக் கூடிய யோசனைகள் கூறினார்; கிணற்று நீரைச் சோதித்து அவற்றின் குணதோஷங்களை விளக்கி, இது புகையிலைக்கு நல்லது அல்லது வாழைக்கு நல்லது என்பது போன்ற யோசனைகள் கூறினார்: மண் சோதனையும் செய்து பயிருக்கேற்ற தகுந்த எருக்





*சமீபத்தில் கமலா, சாந்தி இருவரது நாட்டிய அரங்கேற்றம் சென்னை மயிலாப்பூர் ரஸிகரஞ்சனி சபை மண்டபத்தில் வெகு விமரிசையாக நடந்தேறியது. இவ் வைபவத்துக்குத் திரு சாம்பமூர்த்தி தலைமை வகித்து, நடனமாடிய சிறுமிகளைப் பாராட்டினார்.*

---

களை அறிவித்தார்; அதிகச் செலவின்றிச் சுகாதார சாதனங்களை அமைத்துக் கொள்ள வழிகாட்டினார். பூச்சி, புழு, தாவர நோய்க் கிருமிகள், கால்நடை நோய்கள் முதலியவற்றைப் போக்க மருந்துகள் தயாரித்து மலிவாக விற்றார்; உள்ளூர்க் கருமான், தச்சன், சக்கிலியனுடைய உதவியாலேயே நீர் யந்திரங்களும் காற்று யந்திரங்களும் நிறுவுதல் சாத்தியமாயிற்று; கூட்டுறவு முறையில் விற்பனைச் சங்கங்களும், பாங்கிகளும் நிர்மாணிக்க உதவினார்; தம் வீட்டில் ஒரு சிறு ஆஸ்பத்திரி நடத்தினார்; தேசபக்தி, சுயமரியாதை, தன்னம்பிக்கை முதலியவற்றைத் தூண்டி வளர்க்கக் கூடிய பிரசங்கங்கள் நிகழ்த்தினார்; சண்டை சச்சரவுகளை ஊர்க்கூட்டத்தில் சமரசமாகத் தீர்த்து வைத்து, கிராமத்தார் கோர்ட்டுக்குப் போகும் வழக்கத்தைக் கூடிய வரையில் தடுத்து நிறுத்தினார்.

*   *

ஓடையில் கிடைத்த கனிப்பொருள்களை எடுத்துக் கொண்டு சற்றுப் பரபரப்புடன் வேணு தம் வீடு போய்ச் சேர்ந்து சில கட்டிகளைத் தூளாக்கித் துருத்தி அனலில் வைத்துக் காய்ச்சியும், பல அமிலங்களைத் தொழிற்படச் செய்தும் கார்பன்-டை-ஸல்பைட், பாதரசம், சாராயத்தின் சாரம் போன்ற கரைபொருள்களைப் பிரயோகித்தும் ஆராய்ந்து பார்த்தார். அக்கலப்புப் பொருளில் கந்தகம் இருப்பது தெரிந்தது. அனால் கனிசமாக இல்லை. "ஓடையில் நடந்து போனால் சுவாரஸ்யமாக இன்னும் ஏதாவது தெரிய வரும். ஆனால் நானென்ன வியாபாரத்துக்காகக் கந்தகம் உற்பத்தி செய்யப்போகிறேனா? இல்லை" என்று முடிவு கட்டி அவர் சாமான்களை ஒதுக்கி வைத்தார். பிறகு அவருடைய அறிவாற்றல் மறுபடியும் தூண்ட 'இதில் வேறென்ன தாதுக்கள் கலந்திருக்கின்றன? அதையும் பார்ப்போம். இதுவோ கோடி கோடி ஆண்டுகளுக்கு முன் எரிமலைப் பிரதேசமாக இருந்தது" என்று சொல்லிக் கொண்டு தம்முடைய ஒளி-நிற மானியை எடுத்து நுட்பமான சோதனைகள் துவக்கினார். அந்தப் பொடியில் ஜாடையாகத் தாமிரம், இரும்பு, வெள்ளி, தங்கம் முதலியவை இருப்பது தெரிந்தது. "அடே, தங்கம் கூடவா? ஜோர்தான். நான் பணக்காரன் ஆகிவிடுவேன்" என்று அவர் விளையாட்டாகச் சொல்லிக் கொண்டே அந்த மணலைப் பல முறைகள் தண்ணீரில் அலசினார். கடைசியில் கிடைத்த வண்டலை அணுதரிசனி மூலம் கவனித்ததில் தங்க ரேக்குகள் தென்பட்டன.

உண்மையில் அவர் கண்டறிந்த விஷயம் முற்றிலும் எதிர்பாராததல்ல. அப் பிரதேசத்துக் கற்களில் பல உலோகங்களையும் அவற்றுள் தங்கத்தையும் எதிர்பார்க்க வேண்டியதே. எவ்வளவு கல்லுக்கு எவ்வளவு பொன் கிடைக்கும் என்பதுதான் பிரச்னை. கடல் நீரிலும் பொன் கிடைக்கிறது- பத்து டன் கடல் நீரில் ஒன்றிரண்டு தானிய எடைப் பொன்! அதை லாபகரமாக எப்படித் தனிப்படுத்துவது என்பதுதான் கேள்வி.

வேணு ஓடையிலிருந்து 10, 12 வீசைக் கற்கள் பொறுக்கியெடுத்து வேலையாட்களிடம் கொடுத்துத் தூளாக இடிக்கச் சொன்னார். அவர் அத்தூளை நிறுத்து, முறைப்படி அலசி, பாதரசம், பொடாஸியம் ஸயனைட் முதலியன பிரயோகித்துப் பொன்னைப் பிரித்தெடுத்து எடையிட்டு விகிதாம்சக் கணக்கு போட்டுப் பார்த்தார். முடிவு அவர் எதிர்பார்த்ததை விடத் திருப்திகரமாகவே இருந்தது.

அதன் பிறகு அவர் கடப்பாரை, குந்தாலம், மண்வெட்டி வகையறாக்களும், சிறு கூடாரமும் அதற்கேற்ற உபகரணங்களும், நான்கு ஐந்து நாட்களுக்கு வேண்டிய ஆகாராதிகளும் பாத்திரங்களும் இதர சில்லறைச் சாமான்களும் எடுத்துக் கொண்டு இரண்டு உரமான ஆட்களுடன் ஓடையின் உற்பத்தி ஸ்தானத்தை நோக்கி நடந்தார். வழியில் பல 'ஓணான் கரடுகள்' இருந்தன.

அவற்றின்மேல் செடிகொடிகள் அதிகமாக இல்லை. மண்ணெல்லாம் பல்லாண்டுகளாகக் காற்றிலும் மழையிலும் அநேகமாய்க் கரைந்து போய் விட்டபடியால் தனிப் பாறைகள்தான் குண்டு குண்டாக நின்றன. இடைவெளியுடன் நிற்கும் மேல் வரிசைக் கற்களைத் தொலையிலிருந்து பார்த்தால் ஓரளவு ஓணான் முதுகுபோல் இருக்கும்.

அக்குன்றுகளில் இருக்கும் கற்களையும் எஞ்சி நிற்கும் சிறிதளவு மண்ணையும் வேணு நன்கு பரிசீலனை செய்தார். சந்தேகமின்றி அது கொழுத்த உலோகக் கனிப் பிரதேசம் என்றே அவருக்குத் தோன்றியது.

மாதிரி சரக்குகளும் குறிப்புக்களும் எடுத்துக் கொண்டு அவர் ரயில் வண்டியேறிச் சென்னைக்குப் புறப்பட்டார். தம்முடைய சகபாடியான ஸர் ஜே. ஓய். ராமராவ் இவ் விஷயத்தில் சிரத்தை எடுத்துக் கொள்வார் என்று வேணுவுக்குத் தெரியும்.

ரயில் எஞ்ஜினைக் காட்டிலும் வேகமாய் வேணுவின் கற்பனா சக்தி வேலை செய்தது.

கவர்னகிரிக்கு அருகாமையில் —அதுதான் பெரிய காட்டுக்கு அவர் கொடுத்த பெயர்—பூமி மலிவாகக் கிடைக்கும். பணத்தைச் சற்று வீசி எறிந்தால் வேண்டிய அளவு நிலம் வாங்கி விடலாம். குடியானவர்களும் வேறு ஊர்களுக்குப் போய் முன்னிலும் சிறந்த நிலம் வாங்கிக் கொள்ளலாம் — நிச்சயமாகப் பயன் அளிக்கும் நஞ்செய்பூமி. வெள்ளை வேட்டியுடுத்தி ஓய்வு வாழ்க்கை. சரளைக்காடு ஒரு தொழில் நகரமாகி விடும். நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் தொழிலாளர்களுக்குப் புதுப் பிழைப்பு மார்க்கம் ஏற்படும். வியாபாரம் பெருகும். பல மடங்கு அதிகப் பணம் புரளும். லக்ஷ்மி தாண்டவமாடுவாள். அவர் மனம் பூரித்தது. அவருடைய எளிய வாழ்க்கை ஒரு பெரும் நன்மைக்காகவே! எல்லாம் ஈசனுடைய லீலை! ...ஆனால் உடனேயே எங்கிருந்தோ கிளம்பிய ஒரு நடுக்கமும் சிலிர்ப்பும் முட்டுக்கட்டை போட்டன.



கோவைக்கு விஜயம் செய்துள்ள சிருங்கேரி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளுக்குக் கோவை நகரசபை வரவேற்பளித்துக் கௌரவித்தது. கோவை நகரசபைத் தலைவர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளிப்பதையும் சிருங்கேரி சுவாமிகள் அமர்ந்திருப்பதையும் படத்தில் காணலாம்.

''...இந்தத் தயக்கம் ஏன்? இந்தக் காரியத் திட்டத்தில் என்ன ஆபத்து இருக்கிறது? மறுபடியும் பார்ப்போம்:

''அதோ, அவை சுரங்கங்கள்—தரை மட்டத்தில் பல, தரையைக் குடைந்து ஆழமாக ஒன்றிரண்டு கடல் மட்டத்துக்குப் பத்தாயிரம் அடி கீழே இருப்பதைப் பல நாட்டார் அதிசயித்துப் பார்க்கிறார்கள். கெட்ட காற்றை வெளியேற்றவும் நல்ல காற்றை உட்செலுத்தவும் பெருகி வரும் ஊற்றுக்களை இறைக்கவும் சாமான்களையும் மனிதர்களையும் ஏற்றி இறக்கவும் சக்தி வாய்ந்த விசைகள் இருக்கின்றன... அவை — மின்சார உற்பத்தி யந்திரங்களின் புகைக் கூண்டுகள்...அந்தச் சாலையில் ராக்ஷச சம்மட்டிகளும், உருளைகளும் கற்களை இடித்து அரைத்துத் தூளாக்கிக் கொண்டிருக்கின்றன... அதற்கடுத்த சாலையில் தண்ணீரால் அலசப்பட்ட மணல் — தண்ணீர்த் தொட்டி தான் எவ்வளவு பெரியது! படிப்படியாக இறங்குகிறது. பாதரசமும், திராவகங்களும், குளோரின் வாயுவும், மின்சாரமும், பொட்டாசியம் சயனைடும் தங்கத்தைத் தனிப்படுத்துகின்றன. எங்கு பார்த்தாலும் சிலந்தி வலை போல் மின்சாரக் கம்பிகளும் டெலிபோன் கம்பிகளும்...

மேலதிகாரிகளுக்கு அழகான பங்களாக்களும் சிறு சிப்பந்திகளுக்கு வரிசை வரிசையாகத் துப்புரவான வீடுகளும் இருக்கின்றன. அதோ, சுத்தமானதொரு மார்க்கெட். அதோ தபாலாபீஸ் ஆஸ்பத்திரி, சினிமா, கிளப், பள்ளிக்கூடம். சுக வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளெல்லாம் இருக்கின்றன. கம்பெனியின் வசம் மைல் கணக்கில் நிலம். கவர்னகிரி இவையெல்லாவற்றுக்கும் அரசனாக விளங்குகிறது. அதன் உச்சியிலிருக்கும் செம்மலை சுண்ணாம்புப் படைகள் கொண்ட கோவில் மனத்தைக் கவருகிறது. இரவில் தீப வரிசைகளுடன் குன்றின் அழகு பன்மடங்கு அதிகரிக்கிறது...

''இவ் வெல்லைக்கு அப்பால், முள் கம்பி வேலிக்கு வெளியே கிராமத்து வயல்கள் இருக்கின்றன. கிணற்றுக் கவலைகள் முகாரி ஆலாபனம் செய்கின்றன. குடியானவர்கள் வயலில் உழைக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஏன் ஊக்கமாயில்லை? ஏன் தளர்ந்திருக்கிறார்கள்? அருகே சென்று பார்ப்போம்...

''அடாடா! எவ்வளவு மெலிந்திருக்கிறார்கள்? ஒரே எலும்புக் கூடு. ஏன்? இந்த வட்டாரத்தில் இவ்வளவு பணப் புழக்கம் இருக்கும் போது...என்ன, அதுதான் ஆபத்தோ? பணப் புழக்கம்—பண வீக்கம்—? இந்தச் சுரங்கந்தான் அவர்களை நாசமாக்கி விட்டதோ?...அவர்கள் காலடியில், சாதாரணப் பள்ளமல்ல, பொருளாதாரப் பள்ளமே பறித்து விட்டதோ? விவசாயக் கூலியாட்களைச் சுரங்கக் கம்பெனி அதிக சம்பளத்தில் இழுத்துக் கொண்டு விடுகிறது. அதனால் கம்பெனியார் கொடுக்கும் விகிதப்படி குடியானவர்களும் கூலி கொடுத்துக் களையெடுக்கவும் அறுவடை செய்யவும் வேண்டியிருக்கிறது. சொற்ப நிலமுள்ளவர்களுக்கு விவசாயம் கட்டி வருவதில்லை என்பதை முன்பே கவனித்திருக்கிறேன்; இப்பொழுது வேளாண்மைத் தொழில் முன்னிலும் மோசமாகி வருகிறது. பெரிய தொழிற்சாலைகளின் அருகாமையில் பண நடமாட்டம் ஏற்றத் தாழ்வு இன்னும் அதிகமாகிறது. என் நண்பர்களுக்கு விவசாயம் கூலி கட்டாத தொழிலாகி விட்டது. ஆனால் அவர்கள் புராதனத் தொழிலை விட இஷ்டமில்லாமலும், சேவகம் செய்து ஆத்ம கௌரவத்தை இழக்க மனமில்லாமலும் குடும்ப நிர்ப்பந்தங்களால் வேறிடம் செல்ல இயலாதவர்களாக ஊர் இடத்தை விட்டு நகராமல் இருக்கிறார்கள். என்னால் அவர்களுடைய துன்பம் அதிகமாகி விட்டது. உண்மையிலே, அவர்களுடைய ஜீவனியத்தையும் சுகத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த வேண்டுமென்பதுதான் என் விருப்பம். என் சுரங்கத்தால் இவ் வெளியவர்களின் வாழ்க்கையே தாழ்ந்து சகந்து போய் விட்டது. என் தேவை

அதிகரித்து இவர்கள் நிலத்தையும் வாங்கிக் கொண்டால் குறிப்பிட்ட இவர்களின் துக்கம் நீங்கலாம்; ஆனால் அவ்வெல்லைக்கு அப்பால்? எல்லாருமே குளிர்ந்த மனத்துடன் இடம் பெயரவும் மாட்டார்கள். பலரைப் பாசம் வதைக்கும். சதுரங்க ஆட்டத்தில் நகர்த்தப் படும் காய்களா பாசமற்று இடம் மாற?...

"கம்பெனியின் அபரிமிதமான லாபத்திலிருந்து ஒரு பங்கு இவர்களுக்குத் தர்மமாகக் கொடுக்கலாம்...சே! அதனால் இவர்களுடைய கௌரவத்துக்குப் பங்கமும், நாளடைவில் நிரந்தரமான தீங்குந்தான் ஏற்படும்.

"நினைத்துப் பார்த்தால், இவர்கள் அல்லவோ பல்லாயிர வருஷங்களாகச் சமூகத்துக்குத் தீங்கில்லாத முறையில் பூமியிலிருந்து பொன்மணிகள் விளைவித்து நன்மை அளித்திருக்கிறார்கள்! நான் செல்வம் எடுப்பதைக் காட்டிலும் இவர்கள் எடுக்கும் முறைதான் நாட்டுக்கு சாசுவதமான க்ஷேமத்தைத் தரக்கூடியது. கடைசியில், நான் செய்தது தான் என்ன? ஒரு மோட்டார்கார் வைத்து ஓட்டிய நகர வியாபாரிக்கு மூன்று மோட்டார்கார் வாங்க உதவியிருக்கிறேன்; மூன்று கவளங்கள் சாப்பிட்டு வந்த குடியானவனுக்கு ஒரு கவளம் ஆக்கிவிட்டேன். தற்கால நிலையில் சமூகத்தைப் பாழ் படுத்தும் இந்தச் சரங்கத்தை...... அப்பப்பா, இதென்ன அதிர்ச்சி? பூகம்பமா?... ஐயையோ, எல்லாம் நொறுங்கித் தூளாய் விட்டதா? — இல்லை, இது நன்மைக்குத்தான்..."

அவர் சடாரென்று தம் அரைக் கனவிலிருந்து விழித்தெழுந்தார். பூகம்பம் ஒன்றுமில்லை. ரயில் பாலம் செய்த ஆர்ப்பாட்டம் தான். சிறிது நேரத்துக்கெல்லாம் செங்கல்பட்டு ஸ்டேஷன் வந்து சேர்ந்தது. "உலகம் என் பொன் கட்டிகள் இல்லாமல் எப்படியாவது சமாளித்துக் கொள்ளும்; என் நண்பர்கள் சிருஷ்டிக்கும் பொன்மணிகள் இல்லாமல் அதனால் தன்னைச் சமாளித்துக்கொள்ள முடியாது." என்ற தீர்மானத்தை அவர் மகிழ்ச்சியுடன் அடைந்து வண்டியிலிருந்து இறங்கினார். எதிரே தெற்கே போகும் வண்டியொன்று அசைபோடும் மாடுபோல் நின்று கொண்டிருந்தது. டிக்கட் பரிசோதகரிடம் தம் உத்தேசத்தை அறிவித்துவிட்டு, வேணு அவ்வண்டியில் ஏறிக் கொண்டார்.

வண்டி வேகமாய்ப் போகும்போது அவர் தம் குறிப்புக்களை யெல்லாம் தூள் தூளாகக் கிழித்துக் காற்றில் பறக்கவிட்டார். பாலாறு தாண்டும்போது தம் பெட்டியிலிருக்கும் நமூனக் கற்களை முகமலர்ச்சியுடன் அவர் வெள்ளத்தில் கவிழ்த்தார். ஒரு கொப்புளம் ஜலமட்டத்துக்கு வந்து பக்கென்று உடைந்தது. ஆனால் வேணு அதைப் பார்க்கவில்லை!

# தமிழ்கூறும் நல்லுலகம்

இரங்கூனில் கவிஞர் ராய. சொக்கலிங்கனாரின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழா மார்வாடி மண்டபத்தில் சிறப்பாக நடந்தது.

அகில பர்மா தமிழர் சங்கத் தலைவர் திரு எஸ். லட்சுமணன் விழாவுக்குத் தலைமை வகித்தார்.

இந்தியத் தூதுவராலய முதற் காரியதரிசி திரு முருகேசனார், அவர்கள் கவிஞர் ராய. சொக்கலிங்கம் அவர்களின் திருவுருவப்படத்தைத் திறந்து வைத்தார்.

சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின் தலைவர் திரு பழ. ஷண்முகம், செம்பொனி ஆசிரியர் திரு வேங்கைமார்பன், திரு காந்தி அண்ணாமலை முதலியவர்கள் ராய. சொக்கலிங்கத்தின் பெருமைகளை எடுத்துரைத்தனர்.

★

பம்பாய் தென்னிந்திய ஆதித்திராவிட மகாசன சங்கத்தின் சார்பில் நவம்பர் 1-ந் தேதி இரவு 8 மணிக்குச் சங்கத் தலைவர் திரு எஸ். பி. பால்ராஜ் அவர்கள் தலைமையில் சங்கக் கூட்டம் நடைபெற்றது.

திரு ஆர். எஸ். செல்லையா வரவேற்புரை நிகழ்த்தினார். கூட்டத்தைத் தொடக்கி வைத்த சங்கப் பொதுச் செயலாளர் திரு பி. எஸ். கோவிந்தசாமி, ஆரம்பிக்கப்படும் இரவுப் பள்ளியில் இதுவரை சேர்க்கப்பட்டுள்ள மாணவ, மாணவிகள் நூறு என்றும் இன்னும் அதிகப்படியாய்ச் சேர்க்க வேண்டியிருப்பதாயும், நான்கு ஆசிரியர்கள் இப்போது நியமிக்கப்பட்டிருப்பதையும் விளக்கிக் கூறிக் கூட்டத்தைத் தொடங்கி வைத்தார்: பிறகு, பம்பாய் மாநில மராமத்து இலாகா அமைச்சர் திரு பாலாசாஹேப் அவர்கள் ஆங்கிலத்தில் நிகழ்த்திய சொற்பொழிவைத் திரு ஆர். குமாரசாமி தமிழில் மொழிபெயர்த்தார். அமைச்சர் அவர்கள் பள்ளியின் அவசியம் பற்றியும் அதன் வளர்ச்சிக்கும் சர்க்கார் அங்கீகாரம் பெறுவதற்கும் தாம் முழு ஒத்துழைப்பு தருவதாகவும் வாக்களித்தார்.

அதன் பிறகு 1957-ம் ஆண்டு நிர்வாகிகளுக்கும் நிர்வாகக் குழு உறுப்பினர்களுக்கும் மாலை அணிவித்துப் பாராட்டப் பெற்றது.

பொதுச் செயலாளர் நன்றி நவிலக் கூட்டம் இனிது முடிவுற்றது.

★

ஆமதாபாத் ஸ்ரீ பாரதி தமிழ் வாசகசாலையின் பதினோராவது ஆண்டுவிழாவும் ஸ்ரீ சுப்பிரமணியபாரதியாரின் நினைவுநாளும், திரு வி. ராமன் பி.ஏ., அவர்கள் தலைமையில் ஜமால்பூரில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. விழாவுக்கு வந்திருந்தவர்கள் அனைவரையும் வரவேற்று, திரு கே. கோபால் அவர்கள் பேசினார். விழாவில் பாரதியின் படத்தைத் திறந்து வைத்துத் திரு இரா. தணிகாசலம் அவர்கள் விரிவாகப் பேசினார்.

விழாவை யொட்டி, கலைவாணர் நாடக மன்றத்தார் 'மனச்சான்று' என்ற நாடகத்தைச் சிறப்பாக நடித்தனர்.

# அழகின் அபிவிருத்தி

நீங்கள் "'ஹாஸலீன்' ஸ்னோ" உபயோகித்
தீர்களானால், வெய்யிலின் வெப்பமோ, காற்றோ,
மழையோ உங்களுடைய தோற்றத்திற்கு
யாதொரு கெடுதியும் விளைவிக்காது. கெடுதியற்ற
தன்மையுள்ள "'ஹாஸலீன்' ஸ்னோ"
உங்களுடைய சருமத்தை மிருதுவாகவும்
அழகாகவும் விளங்கச் செய்கிறது.
மற்றும் அது ஏமாற்றம் செய்ய
முடியாத பாக்கிங்கில் கிடைக்கிறது.




**"'HAZELINE' SNOW"** TRADE MARK

"'ஹாஸலீன்' ஸ்னோ"

டிரேட் மார்க்



ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு

BWY-4

# உராங் உடாங்

மனிதக் குரங்கு வகைகளில் மூன்றுவது தான் இந்த உராங் உடாங். இவைகளின் ஜீவ பூமி ஆப்பிரிக்கக் காடுகள் இல்லே. சுமத்ரா, போர்னியோ, மலேயா ஆகிய தீவு களில்தான் இவை காணப்படுகின்றன.

'உராங்' பார்ப்பதற்கு அவலட்சணமாகத் தான் இருக்கும். அதாவது விகாரமான ஒரு கிழவனைப்போல. முகத்திலே சுறுசுறுப்பு இருக்காது. தூங்கி வழிவது போலவே காணப் படும். உறுதியான தோல் உடலில் ஒட்டாமல் தொள தொள வென்றிருக்கும். உஷ்ணப் பிரதேசக் காடுகளில் பெரு மழை 'கொட்டுக் கொட்'டென்று கொட்டும். முக்கியமாக 'உராங்' வசிக்கும் போர்னியோவில் மழை அதிகம். இவைகளுக்கு ரோமமடர்ந்த உடல் இருப்பதால் எத்தனே மழை பெய்தாலும் மழை நீர் தோலில் படாமல் வழிந்து ஓடி விடும். உடலின் சீதோஷ்ண நிலேயும் சீராக இருக்கும். தவிர இந்தக் காடுகளில் கொசுக் கள் ஏராளம். கொசு முதலிய கடிக்கும் பூச்சிகளின் தொல்லேயிலிருந்து தப்பிக்கவும் 'உராங் உடாங்'குக்கு இத்தகைய ரோம மடர்ந்த தோல் பயனுடையதாக இருக்கிறது.

நன்ருக வளர்ந்த உராங் நாலடி நாலு அங்குலத்துக்கு மேல் இருப்பதில்லே. ஆனல் இந்த உயரத்துக்கு இதன் உடல் பெரியது. மற்ற மனிதக் குரங்குகளேவிட இதன் மண்டை—யோடு உயரமானது. கால்களோ குட்டை யானவை. வளைந்தவை. இதற்கு ஈடு செய் வது போல் இதன் கைகள் ரொம்ப நீள மானவை. அதாவது கொரில்லா, சிம்பான்ஸி இவைகளின் கைகளே விட உராங் உடாங்கின் கைகள் நீளமானவை. நிற்கும்போது இதன் கைகள் தரையைத் தொட்டுக்கொண்டிருக் கும். நடக்கும்போது இத்தனே நீளமான கையைக் கோத்தபடி தலேக்கு மேல் தூக்கிக் கொள்ளும். இப்படித் தூக்கிக் கொண்டால் தான் இதனல் நடக்க முடியும்.

'உராங்' அனேகமாகத் தரையில் இறங்கு வதே இல்லே. மரங்களிலேயேதான் வசிக்கும். இதன் நீளமான கைகள் பூமியில் இறங்காமல் மரங்களின் மீதே வசிப்பதற்கு ஏற்ற வகை யில் அமைந்திருக்கின்றன. கிளேகளேப் பற்றிக் கொண்டு இது ஊசலாடியபடி கிளேக்குக் கிளே தாவுவது ஆச்சரியமான காட்சியாக இருக் கும். இவ்விதமாக இது ஒரு மணியில் ஆறு மைல் தூரத்தை அலட்சியமாகக் கடக்கும்.

மரக் கிளேகளே வளேத்து மடக்கி ஒன்று சேர்த்து மேடைபோல் ஆக்கி அதன்மீது ஏராளமான இலேகளேப் பரப்பி மெத்தென்ற படுக்கையைத் தயார் செய்து கொள்ளும். உராங் இரவு முழுதும், பகலில் பெரும் பகுதியையும் பூமி மட்டத்திலிருந்து இருபத் தைந்து அடி உயரத்தில் அமைத்துள்ள இந்தப் படுக்கையிலேயே சுகமாக உட்கார்ந்து கொண்டும் தூங்கியபடியும் கழிக்கும். இந்தப் பெரிய மனிதக் குரங்கு மகா சோம்பேறி.

ஆண் உராங் உடாங் குட்டிகளின் தொண தொணப்பையோ அவை உருண்டு புரண்டு விளேயாடித் தன்னேத் தொந்தரவு செய்வ தையோ விரும்புவதில்லே. ஆகவே குழந்தை களேத் தாய் உராங்கின் பொறுப்பில் விட்டு விட்டு, இது தனியாகப் போய் விடும். குட்டி உராங்குகள் தாயாருக்கு அதிக தொல்லே கொடுப்பதில்லே. விரைவிலேயே பழங்களே யும், காய்களேயும் தேடிச் சாப்பிடக் கற்றுக் கொண்டு விடுகின்றன. ஆனல் குட்டிகள் செய்யும் அட்டகாசம் சகிக்க முடியாததாக இருக்கும். இவை ஒரு பழத்தைத் தின்ப தற்குள் ஒன்பது பழங்களே வீணுக்கும்.

உராங் உடாங் குடும்பங் குடும்பமாக வாழும் குணமுடையது. மனிதர்களேத் தாக்கு வதை விட அவர்களிடமிருந்து விலகிச் செல் லவே இவை விரும்பும். ஆனல் தன்னேப் பாது காத்துக் கொள்ள வேண்டி நேரும்போது மூர்க் கத்துடன் எதிர்த்துப் போராடும். —மூர்த்தி



## 16. கிட்டுவின் குழப்பம்

புலித்தேவன் தோப்புக்கு வரும்போது மணியைப் போலவே தானும் ஏதாவது தீரச் செயல்கள் புரிய வேண்டும் என்ற துடிப் போடுதான் வந்தான் கிட்டு. ஆனால் இப் போது காலடியில் அலங்கோலமாக விழுந்து கிடந்த போலீஸ்காரரைக் கண்ட தும் அவன் உடல் நடுங்க ஆரம்பித்தது. தன் இருதயத் துடிப்பு நின்று விட்டதோ என்ற சந்தேகம் ஏற்படவே மார்பிலே கையை வைத்து அழுத்திப் பார்த்துக் கொண்டான். நெஞ்சு வேக வேகமாக அடித்துக் கொள்ளுவதை உணர்ந்ததும் அவனுக்கே வெட்கமாகப் போய் விட்டது.

ஓடி ஒளியப் பார்த்த தைரியத்தைத் தேடிப் பிடித்து இழுத்து நிறுத்தியதும் தான் கிட்டுவுக்குக் கொஞ்சம் நிதானப் பட்டது. கையிலிருந்த பாட்டரி விளக்கின்



# மூன்று நண்பர்கள்

ஒளியைச் சுற்று முற்றும் பரவ விட்டான். அவன் கைநடுக்கத்தை அந்த ஒளி மிகைப் படுத்திக் காட்டியது. விழுந்து கிடந்த போலீஸ் ஜவானுக்குச் சற்றுத் தூரத்திலே தரையில் காரைக் கட்டியால் ஏதோ எழுதப்பட்டிருந்தது. கிட்டுவின் இருதயத் துடிப்பு தாங்க முடியாத அளவுக்கு அதிக மாயிற்று. குனிந்து விளக்கின் உதவியால் அதை ஆராய்ந்தான் நினைவிழப்பதற்கு முன் அதை அந்தப் போலீஸ்காரர்தான் எழுதி யிருக்க வேண்டும். அந்த ஜவானின் விரல்களில் காரையைப் பற்றி இருந்த சுண்ணாம்பு அடையாளம் வெண்மையாகத் தெரிந்தது. சகிக்க முடியாத வேதனையிலே ஏதோ செய்தியைச் சொல்ல வேண்டும் என்ற கடமை உணர்வோடு எழுதப்பட் டிருந்தது அது. கிறுக்கலாக இருந்தாலும் கிட்டு அந்த எழுத்தை நன்றாகப் புரிந்து கொண்டு விட்டான்.

'' அங்கே—அந்தக் கூடத்திலே-- அவர் கை சிக்கிக் கொண்டிருக்...'' முடியவில்லை. அதற்குள் மூர்ச்சையாகி இருக்க வேண் டும். கிட்டுவின் வாய் முணுமுணுத்தது. 'எங்கே, எந்தக் கூடத்திலே, யாருடைய கை சிக்கிக் கொண்டிருக்கிறது?' ஒன்றும் புரியாத நிலையிலும் யாரோ எங்கோ ஏதோ ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக் கிறார்கள் என்பதை மட்டும் உணர்ந்து விரைந்து செல்லப் பறந்தது அவன் உடல். இங்கும் அங்கும் பாட்டரி விளக்கின் ஒளியைப் பாய்ச்சியபடி பரபரப்புடன் தேடினான். யாரைக் காப்பாற்ற வேண்டி, யாருடைய அபாயகரமான நிலையைத் தெரிவிப்பதற்காக அந்தச் செய்தி எழுதப் பட்டிருந்ததோ அவரை, அங்கு எங்கும் காண வில்லை. 'ஒரு வேளை, மணி சொன்ன செய்தியிலிருந்து அவன் மாமா சேகர்தான் இங்கு வந்து ஏதாவது ஆபத் தில் இப்படிச் சிக்கிக் கொண் டிருப்பாரோ?' என்று ஒரு கணம் நினைத்தது அவன் மனம். உடனே, 'சே! சேகர் அப்படி யெல்லாம் சிக்கிக் கொள்ளக் கூடியவர் இல்லை' என்று தானே சமாதானமும் செய்து கொண்டு விட்டான்.

எங்கு தேடியும் அந்த நிலவறைக்குள் யாரையும் காணாது எவ்விதப் பலனுமில் லாது போகவே சட்டென்று போலீஸ்கார ரின் நினைவு வந்தது அவனுக்கு. 'மடை யன்! நான் ஒரு முட்டாள்!' என்று தலை யில் குட்டிக் கொண்டான். 'விழுந்து கிடந்த போலீஸ்காரர் உயிருடன் இருக் கிறாரா, அவருக்கு ஏதாவது உதவி தேவையா என்பதைக் கவனிக்காமல் கண்ணுக்குத் தெரியாத யாரையோ தேடிக் கொண்டிருக்கிறேனே என்ன மடத்தனம்? போலீஸ்காரரின் மூர்ச்சை யைத் தெளிவித்தால் அவரிடமிருந்தே விஷயத்தைக் கிரகிக்கலாமே' என்று மறு படியும் முன் கூடத்துக்கு ஓடி வந்தான்.

கிட்டு எப்போதுமே கொஞ்சம் அவசரக் குடுக்கை. மணியின், திறமையோ தைரி யமோ, நிதானமோ கிடையாது. போலீஸ் காரரின் மூக்கிலே புறங்கையை வைத்துப்

பார்த்தான். இலேசாக மூச்சு வருவது போலிருந்தது. இல்லை போலவும் தோன்றியது. குப்புறக் கிடந்த அவரைப் புரட்டிக் கிடத்தினான். அவர் மார்புப் பக்கத்துப் பொத்தான்களைக் கழற்றிக் காக்கிச் சட்டைக்குள் கையை விட்டு இதயத்துடிப்பை ஆராய்ந்தான். இலேசாகத் துடிப்பிருந்தது. 'நல்லவேளை! உயிர் இருக்கிறது. உடனே இவருக்கு உதவியளிக்கவேண்டும். ஆனால் எப்படி?' என்ற பிரச்னையைக் கிளப்பிக் கொண்டு குழம்பினான் கிட்டு. உடனே 'ஏன்? போலீஸ் ஸ்டேஷனுக்குப்போய் விஷயத்தைத் தெரிவித்தால் போகிறது.' என்ற எண்ணம் பளிச்சிட்டதும், 'அது தான் சரி' என்று நிலவறையை விட்டு ஒரே தாவலில் வெளியே வந்தான் கிட்டு.



"ம்...ஆனால்?" நாலுகால் பாய்ச்சலில் செல்லும் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து நிறுத்துவதுபோல் கிட்டுவின் வேகத்தைக் கட்டுப்படுத்தி நிறுத்தியது அடுத்துத் தோன்றிய ஒரு எண்ணம். 'நானே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் இந்த விஷயத்தைச் சொல்லலாமா? சொன்னால் அதில் பல தொல்லைகள் இருக்கின்றன. அவர்களுடன் இங்கு மறுபடியும் வரவேண்டும். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லியாகவேண்டும். 'நிலவறைக்கு நீ எதற்கு வந்தாய்?' என்று கேட்டால் என்ன சொல்வது? மணி, சேகர் இவர்களின் ரகசியங்கள் பலவற்றை வெளியிட வேண்டி இருக்கும். தொல்லை... ஆகவே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகக் கூடாது. அப்படியானால் ஆபத்தான நிலையிலுள்ள இந்தப் போலீஸ்காரருக்கு எப்படி உதவுவது? 'கோரா' என்ற வார்த்தையின் மர்மத்தை வேறு அறிந்தாக வேண்டும். அம்மாவிடம் நான் சரித்திர ஆசிரியர் வீட்டுக்குப் போவதாகச் சொல்லி விட்டு வந்தேன். அங்கு போனால் இந்தக் 'கோரா'வுக்கு விளக்கம் கிடைத்தாலும் கிடைக்கும். ஆனால் மயக்கமடைந்து ஆபத்தான நிலையிலுள்ள ஒரு மனிதனை இப்படியே விட்டுச் செல்வதும் முறையல்ல. 'ம்... போலீஸ் ஸ்டேஷனுக்குச் செல்லாமல் போலீஸாருக்கு இதை அறிவிக்க முடியாதா?' இப்படிப் பலவித எண்ணச் சுழலில் செய்வதறியாது தவித்தான் கிட்டு.

'எப்படி...? எப்படி...?'

திடீரென்று தன் நெற்றியில் ஓங்கிக் குத்திக்கொண்டான் கிட்டு. 'இந்த யோசனைகள் எல்லாம் ஏன் எனக்கு உடனே தோன்றவில்லை?' என்று எண்ணியபடியே வீதியில் வேகமாக ஓடலானான். சற்றுத் தொலைவிலிருந்த சிவப்புப் பெட்டியை நோக்கித்தான் அவன் அப்படித் தலைதெறிக்க ஓடினான். அந்தப் பெட்டி என்ன தெரியுமா? அதுவும் 'பப்ளிக் டெலிபோன் பூத்.' போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் மூலம் அந்த ஜவானின் நிலையை விளக்கவே அவன் அப்படி ஓடிக் கொண்டிருந்தான். ஓடும்போதே, 'பொதுஜன டெலிபோனில்' பேசுவதற்குத் தன்னிடம் சில்லறை ஏதாவது இருக்கிறதாவென்று டிராயர் பையை ஆராய்ந்தான். கால் ரூபாய்தான் இருந்தது. 'இரண்டணா நிக்கலல்லவா தேவை? இந்த அதிகாலையில்

எங்கு போய் மாற்றுவது ?யாரைப்போய்ச் சில்லறை கேட்பது?'

டெலிபோன் பெட்டியை! அடைந்த போது அதனுள்ளிருந்து ஒரு மனிதர் கடுத்த முகத்துடன் வெளியில் வந்தார். ஒரு வேளை அவரிடம் சில்லறை இருக்கலாம் என்று எண்ணி, "சார்! இரண்டு நிக்கல் இரண்டணாவுக்கு ஒரு கால் ரூபாய்- இல்லே, இல்லே ஒரு கால் ரூபாய்க்கு இரண்டு இரண்டணா இருக்குமா, சார்!" என்று உளறிக்கொட்டினான், அவசரக் குடுக்கை கிட்டு. அந்த மனிதர் அவனை முறைத்துப் பார்த்தார்.

"ம்... டெலிபோனிலே பேசப் போகிறாயோ! இந்த மாதிரி பொடிப் பயங்களெல்லாம் வந்து தான் 'பப்ளிக் டெலிபோன்' பாழாய்ப் போவுது. இரு. இரு. போலீசுக்குப் போன் பண்ணி—" என்று அவர் மிரட்டல்வார்த்தை முடிவதற்குள் கிட்டுகுறுக்கிட்டான்'

"அந்தச் சிரமம் உங்களுககு வேணடாம் சார். இப்போ நானே போலீஸ் ஸ்டேஷனுக்குத்தான் டெலிபோன் செய்யப் போகிறேன். ரொம்ப அவசரமான விஷயம். இதுக்குச் சில்லறை தரீங்களா?" என்று கால்ரூபாயை எடுத்து அவர் முன் நீட்டினான் கிட்டு. கிட்டுவின் வார்த்தை அந்த மனிதரின் முக பாவத்தை மாற்றி விட்டது. "தம்பி! உன்னைத் தவறாக நினைச்சுட்டேன். இந்தா இரண்டணா. உன் நாலணாவை நீயே வைச்சுக்க. ஆனால் இந்த டெலிபோன் பெட்டியிலிருந்து பேச முடியாது. இதை யாரோ 'சில்லுண்டிப்' பயலுங்க உடைச்சு ரிப்பேராக்கி விட்டாங்க" என்று கூறினார்.

"எனக்கு 'ஒண்ணு' நீங்க தருமம் செய்ய வேணும் சார். இந்தாங்க கால் ரூபாய். தவிர இந்த டெலிபோன் பெட்டி ரிப்பேராக இருப்பதற்குப் பையன்கள்தான் காரணம் என்று சொல்ல உங்களிடம் எவ்வித ஆதாரமும் இல்லே" என்று நாலணாவை அவர்கையில் கொடுத்தான்.

"தம்பி, தம்பி! அதுக்குள்ளாற கோவிச்சுக்கிட்டயே. ஒரு பேச்சுக்குச் சொன்னே! போலீசுக்குப் போன் பண்ணனும் அவசரமான விசயம்னு சொன்னியே. ஏதாவது உதவி வேணும்னா நான் செய்யறேன்" என்றார் அந்த மனிதர்.

"ரொம்ப வந்தனம், சார்!" என்று சொல்லி விட்டு வேறொரு டெலிபோனைத் தேடி வேகமாக ஓடினான் கிட்டு.

கிட்டு டெலிபோனில் போலீசுக்கு விஷயத்தைத் தெரிவித்தான். நிலவறையிலுள்ள கான்ஸ்டபிளின் நிலையை விளக்கி உடனே உதவிக்கு விரையும்படி துரிதப் படுத்தினான். அவர்கள் இவன் பெயரையும் எங்கிருந்து பேசுகிறாய் என்றும் கேட்டார்கள். நாங்கள் வரும்வரை அங்கேயே இருக்கும்படி உத்தரவிட்டார்கள். ஆனால் கிட்டு அவர்களுக்குப் பதில் சொல்லாமல் ரிஸீவரை அதில் மாட்டி விட்டு வேகமாகச் சரித்திர ஆசிரியர் சந்தானத்தின் வீட்டை நோக்கி நடக்கலானான். (தொடரும்)

## கண்டுபிடி!

இங்குள்ள படத்தில் உங்களுக்குப் பழக்கமான சில பொருள்கள் தரப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை வழக்கமாக நீங்கள் காணும் முறையிலில்லாமல் வேறு கோணங்களில் காட்சியளிக்கின்றன. இவை என்னென்ன என்று சொல்ல முடியுமா?




[illegible]

டிசம்பர் 5-ந் தேதி கொடி தினம்

இந் நன்னாளில் மாஜி ராணுவத்தினருக்கும் அவர்களது குடும்பத்தினருக்கும் தாராளமாக உதவி புரியுங்கள்.

தண்ணீர் சப்ளை விஷயமாக உங்கள் தேவை எதுவானாலும் சரி.

## அதற்கென்றே டெமிங் பம்புகள் உள்ளன..



டெமிங் மார்வெல்
வீடுகளுக்கு



டெமிங் ஆமில்ரைட்
தொழிற்சாலைகளுக்கு



டெமிங் டூப்ளே
கிராம தண்ணீர் சப்ளைக்கு

- வீடு, தொழிற்சாலை, ஹோட்டல், ஆஸ்பத்திரி அல்லது கிராம தண்ணீர் தேவைகளுக்கு நம்பகரமான உழைப்புடன் நயமான விலையில் பம்பு செட்டுகள் உள்ளன.
- கைவசம் உள்ள ஸ்டாக்கிலிருந்தும், வந்துகொண்டிருக்கும் ஸ்டாக்கிலிருந்தும் எந்த மாடல்களையும் விரைவில் சப்ளை செய்யமுடியும்.
- ஸ்பேர் சாமான்களுக்கு நீங்கள் கவலைப்படவேண்டியதே இல்லை. அவை எப்பொழுதும் கிடைக்கும்.
- எங்கள் பொறுப்பு, சப்ளை செய்த பம்புகளை பொருத்துவதுடன் நின்றுவிடுவதில்லை. உள்ளூரானாலும் சரி, வெளியூரானாலும் சரி, பம்புகளை அவ்வப்போது சரிபார்த்து ஓடச்செய்வதும் எங்கள் பொறுப்பே. இதற்குவேண்டிய எல்லா வசதிகளும் எங்களிடம் உண்டு.
- ஒரு முறை எங்கள் கம்பெனிக்கு விஜயம் செய்து நேரில் எல்லா பம்பு செட்டுகளையும் பார்க்கவும். டெமிங் பம்புகளைப்பற்றிய ஆலோசனை எப்பொழுதும் எங்களிடம் எளிதில் கிடைக்கும்.

*தண்ணீர் சப்ளை விஷயங்களை சுலபமாக தீர்த்துவைக்கக்கூடிய நிபுணர்கள்*




## ஈஸன் என்ஜினியரிங் கம்பெனி லிமிடெட்.

5-7 செகண்ட் லைன் பீச், மதராஸ்.

மற்றும்

## தி பயனீர் சைக்கிள் ஹவுஸ்

மேலக் கோபுர வீதி, மதுரை

# பொங்கிவரும்

## எட்டாம் அத்தியாயம்

## அத்தானுக்காக அலங்காரம்

நடராஜனை அடித்துவிட்ட பின்னர் தான் மணி தன்னுடைய வலது கை நடுங்கித் துடித்துக் கொண்டிருப்பதைக் கவனித்தான். அந்த நடுக்கத்தை நிறுத்த எவ்வளவோ முயன்று பார்த்தான்; முடியவில்லை. இடது கையால் வலது கையைக் கெட்டியாகப்பிடித்துக்கொண்டால் உதறல் நிற்கும் என்று எண்ணினான். அப்போதும் இரண்டு கைகளுமாகச் சேர்ந்து நடுங்கினவே யன்றி நிற்கவில்லை.

நடராஜனுக்குச் சிரிப்பே வந்து விடும் போலிருந்தது. "மணி! என்னை அடித்து விட்டு நீ ஏன் இப்படி நடுங்கிச் சாகிறாய்? உன்னை ஒன்றும் செய்து விடமாட்டேன். கவலைப்படாதே" என்றான்.

இரண்டு கைகளிலும் முகத்தைப் புதைத்துக் கொண்டான் மணி. தவறு என்று அவனுக்குப் பட்டால் யாராக இருந்தாலும் அதை எடுத்துக் காட்ட அவன் எப்போதுமே தயங்கிய தில்லை. ஆனால் கைநீட்டி அடித்துவிட்டது மன்னிக்க முடியாத குற்றமாகவே அவனுக்குத் தோன்றியது. நடராஜன் கோபப் படாமல் சர்வ சாதாரணமாக அந்த அறைகளை வாங்கிக் கொண்டது அவனை மேலும் சங்கடத்துக்குள்ளாக்கியது.

"மணி! நீ எதற்கு என்னை அடித்தாய் என்பது எனக்குத் தெரியும். விமலாவையும் அவள் தாயாரையும் வீட்டை விட்டுத் துரத்தி விட்டது தவறுதான். அதற்கான தண்டனையை அனுபவித்து விட்டது போல் மனம் இப்போது சற்று நிம்மதி அடைந்திருக்கிறது."

மணிசேகரன் நிமிர்ந்து உட்கார்ந்தான். "தவறு என்று தெரிந்துமா அந்தக் காரியத்தைச் செய்தாய்?"

"வேறு என்ன செய்யமுடியும், மணி? என்னுடைய நிலையில் இருந்திருந்தால் நீயும் அப்படித்தான் செய்திருப்பாய்."

"உன்னுடைய நிலையில் நான் இருந்திருந்தால் விமலாவைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பேன்!" — பளிச் சென்று பதில் சொன்னான் மணிசேகரன்.

கையைப் பிசைந்துகொண்டு பதில் பேசத் தெரியாமல் அறையை வலம்வந்த நடராஜனைப் பார்த்து, "போனது போகட்டும், நடராஜா! வீட்டை விட்டுத்தான் அனுப்பி விட்டாய். அவர்களை அலட்சியம் செய்யாமலாவது இரு. இனறும் விமலாவைப் போய்ப் பார்த்து விட்டுவா. இல்லையானால் ஏக்கத்திலேயே அந்தப் பெண் செத்துப் போனாலும் போய் விடுவாள்" என்று சொல்லி அவர்கள்



# பெருநிலவு

ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு விழிப்பதைக் கண்டான்.

விலாசத்தையும் எழுதிக் கொடுத்து விட்டுப் போனான் மணிசேகரன்.

* * *

**வி**மலாவைப் பார்க்க நடராஜனுக்கு ரொம்பத் தயக்கமாகவே இருந்தது. தன்னைப் பார்த்ததும் அவள் என்ன செய்வாள்? 'என்னை அனுப்பிவிட உங்களுக்கு எப்படி மனம் வந்தது?' என்று கேட்டு அழுவாளா? 'நேற்று துரத்தியடித்து விட்டு இன்று உறவு கொண்டாட வந்து விட்டீர்களோ?' என்று கோபிப்பாளா? அல்லது 'யார் அது? எங்கே வந்தீர்கள்?' என்று அலட்சியம் செய்து விடுவாளா?

அவன் சற்றும் எதிர்பாராத விதமாக விமலா, "அம்மா! அம்மா! இங்கே வந்து பாரேன்! அத்தான் வந்திருக்கிறார், அம்மா!" என்று குதூகலத்துடன் கூக்குரலிட்டுக் கொண்டே துள்ளிக் குதித்துக் கொண்டு உள்ளே ஓடினாள்.

அத்தானுடன் பேச அம்மாவை முதுகைப் பிடித்துத் தள்ளிக் கொண்டுபோய் வாசல் அறையில் நிறுத்திவிட்டு அத்தான் கண்ணில் படாதவாறு மறுபடியும் உள்ளே போனாள். நிலைக்கண்ணாடியில் தன்னை ஒருமுறை பார்த்துக் கொண்டாள். சற்றுக் கலைந்திருந்த தலையை வாரிவிட்டுக் கொண்டாள். கசங்கியிருந்த புடவையை மாற்றிக் கொண்டு அவள் வந்தபோது அம்மாவும் அத்தானும் இருவருக்குமே என்ன பேசுவது, எப்படி ஆரம்பிப்பது என்று தெரியவில்லை. ஒருவரிடம் ஒருவர் பயப்பட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

'இந்த அம்மாவுக்கு ஒன்றுமே தெரியாது! கலகலப்பாக ஏதாவது இரண்டு வார்த்தைகள் பேசக் கூடாதோ?' என்று நினைத்த விமலா தானாவது ஏதாவது பேசலாம் என்று எண்ணினாள். அத்தானிடம் எதைப்பற்றிப் பேசுவது என்று அவளுக்கும் தெரியவில்லை.

"இங்கே எல்லாம் சௌகரியமாக இருக்கிறதல்லவா?" என்று தொண்டையைக் கனைத்துக் கொண்டு மெல்லப் பேச்செடுத்தான் நடராஜன்.

"ஓ! ரொம்பச் சௌகரியமாக இருக்கிறதே! ஒரு குறையும் இல்லை. நீங்கள் கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டாம்" என்றாள் விமலா.

பேச்சு மறுபடியும் நின்று விட்டது. கூரையைப் பார்த்தார்கள்; தரையைப் பார்த்தார்கள்; ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். நடராஜனால் அந்த நிலைமையை அதற்குமேல் பொறுக்கவே முடியவில்லை. "நான் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு எழுந்தான். வாசல் வரைக்கும் பின்னோடு சென்று அவனை வழியனுப்பி வைத்தாள் விமலா.

"விமலா! உன்னை ஒன்று கேட்கவேண்டும் என்று நினைத்தேன்" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான் நடராஜன்.

'கடவுளே! அவர் அந்தச் சம்பவத்தைப் பற்றிப் பேசாமல் இருக்க வேண்டுமே?' என்று பிரார்த்தித்தாள் விமலா. அதை அடியோடு மறந்து விடவே அவள் விரும்பினாள். அப்படி ஒரு நிகழ்ச்சி தன் வாழ்வில் நடந்



கி. ராஜேந்திரன்

ததாக ஒப்புக்கொள்ளவே அவள் தயாராக இல்லை.

நல்ல வேளையாக நடராஜன் அதைப் பற்றிப் பேசவில்லை. ''நாளை வேடந்தாங்கலுக்குப் போகலாம் என்று எண்ணியிருக்கிறேன். நீயும்...''

''கண்டிப்பாகவருகிறேன், அத்தான்!''—அவன் கேட்டு முடிப்பதற்கு முன்பாகவே பதிலளித்தாள் விமலா, கரை புரண்டோடும் உற்சாகத்தோடு.

மறுநாள் அதிகாலையிலேயே எழுந்து அத்தானுக்கும் தனக்கும் பலகாரங்கள் தயாரித்துக் கொண்டாள் விமலா. அத்தானுக்குப் பிடித்த மாதிரியாக இட்டிலிகளில் மிளகாய்ப் பொடியைத் தடவி நெய்யையும் வார்த்து வைத்துப் பொட்டலமாகக் கட்டிக்கொண்டாள். கொஞ்சம் புளியோதரையும் செய்த பிறகு கூஜாவில் குளிர்ந்த நீரையும் நிரப்பித் தயாராக வைத்தாள்.

வழக்கமாக அலங்காரத்தில் அவ்வளவு அக்கறை காட்டாத அவள் இன்று நிலைக் கண்ணாடியின் முன் நிற்க ஒரு மணி நேரத்தை ஒதுக்கிக் கொண்டாள். மல்கோவா மாம்பழத்தின் நிறத்துடன் தளதளக்கும் அந்த உடலுக்கு ஏற்ற நிறத்திலே பிடிப்பான ரவிக்கையும் எடுப்பான புடவையும் அணிந்தாள். கண்ணுக்கு மை தீட்டி நெற்றியிலே பெரியதாக ஒரு பொட்டும் அதற்குக் கீழே மிகச் சிறியதாக ஒரு சாந்துப் பொட்டுமாக மிகுந்த பிரயாசைப்பட்டு இட்டுக் கொண்டாள். காதுகளில் ஜிமிக்கியும் மாட்டலும் போட்டு அழகு பார்த்தாள். பிறகு மாட்டலை மட்டும் கழற்றிவிட்டுப் பார்த்தாள். அது இல்லாமலிருந்தாலே நன்றாக இருப்பதாகத் தோன்றியது அவளுக்கு. முழங்காலளவு நீண்ட கூந்தலை இழைய வாரிப் பின்னிப் பட்டுக் குஞ்சலத்தை வைத்துக் கட்டினாள். நெற்றியிலே இரண்டு கேசச் சுருள்களைப் புரளவிட்ட பின், கைநிறையக் கதம்பத்தை விரல்களிலே சுற்றி யெடுத்துத் தலையிலே சூட்டிக் கொண்டாள்.

எட்டு மணிக்கே வந்து விடுவதாகச் சொன்ன அத்தான் ஒன்பது மணியாகியும் வரவில்லை. 'இதோ வந்து விடுவார்' என்று சமாதானப் படுத்திக் கொண்டு குட்டிபோட்ட பூனைபோல் வாசலுக்கும் உள்ளுக்கும் அலைந்தாள் அவள். நிமிஷத்துக் கொருமுறை கண்ணாடியின்முன் நின்றுஅலங்காரம் கலையாது இருக்கிறதா என்று நிச்சயப்படுத்திக் கொண்டாள்.

நேரமாக ஆக அத்தான் இங்கு வருவதாகச் சொன்னதை மறந்தேவிட்டாரோ என்ற சந்தேகம் எழ ஆரம்பித்தது.

ஜன்னலில் இருந்த கடிகாரத்தின் 'டிக் டிக்' கென்ற ஒலி அவள் காதுகளில் நாராசமாக விழத் தொடங்கியது. அழுகை அழுகையாக வந்தது. 'கண்ணீர் விட்டால் அழகு அலங்கோலமாகிவிடும், அந்தச் சமயத்தில் அத்தானும் வந்துவிட்டால்?' என்ற பயம் கண்ணீர் பெருக்கெடுக்காமல் தடுத்தது.

பத்துமணிவரை பொறுத்துப்பொறுத்துப் பார்த்த அவள் ஆதரவுக்கு மரகதம் மாமியைக் கட்டிக் கொண்டு அவள் தோளிலே முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அதே சமயம் நடராஜன் காரில்

வந்து நிற்கும் ஓசை கேட்கவே, "அசடே! நான்தான் நிச்சயமாக வந்து விடுவார் என்று சொன்னேனே கேட்டாயா ?" என்றாள் மரகதம்மாள்.

"நான் இன்னும் அழ ஆரம்பிக்க வில்லையம்மா" என்று சொன்ன விமலா சந்தோஷத்தில் அண்ணாந்து பார்த்துக் 'களீ'ரென்று சிரித்தாள். அம்மாவை மூச்சுத் திணறும்படியாகக் கட்டிக் கொண்டு கன்னத்திலே முத்தமிட்டாள்.

"போய் வருகிறேன்" என்று சொல்லி மானைப்போலத் துள்ளி ஓடி இறைக்க இறைக்கக் காரில் ஏறிக்கொண்டாள். கார் கிளம்பியதும் "ஐயய்யோ! சற்று இருங்கள், அத்தான்!" என்று கத்தினாள் விமலா. அவசரம் அவசரமாக உள்ளே



ஓடிச் சென்று அத்தான் வந்துவிட்ட குதூகலத்தில் தான் மறந்துபோன இட்டிலி, புளியோதரைப் பொட்டலங்களையும் கூஜாவையும் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு ஒளிவீசும் பற்கள் தெரியச் சிரித்துக் கொண்டே மறுபடியும் காரில் வந்து ஏறிக்கொண்டாள்.

கண்ணுக்குத் தெரியும் வரை அவர் களை வழியனுப்பி விட்டு உள்ளே வந்த மரகதம்மாள் கண்ணனுடைய திரு உருவத்துக்கு முன் விழுந்து வணங்கினாள். கண்களிலே ஆனந்தக் கண்ணீர் படர உள்ளம் உருகி ஒரே மகளின் வாழ்வு தழைக்கப் பிரார்த்தித்தாள்.

* * *

"அத்தான்!"

"என்ன விமலா?"

"வந்து ஒன்றுமில்லை, அத்தான்!"

"ஒன்றுமில்லை என்றால் விடமாட்டேன். என்னிடம் மறைக்காதே! சொல்ல வந்ததைச் சொல்லி விடு."

"மாட்டேன்!"

"நிஜமாகச் சொல்ல மாட்டாயா?"

"முடியாது! என்ன செய்வீர்களாம்?"

"கேட்கிறபடி கேட்டால் பதில் சொல்லுகிறாய்."

"அப்படியென்றால்..."

"காதைப் பிடித்துத் திருகி..."

"ஹூக்கும், அவ்வளவு தைரியம் இருக்கிறதாக்கும் உங்களுக்கு?"

நடராஜன் ஒரு கையால் காரை ஓட்டியபடியே மற்றொரு கையால் விமலாவின் காதைப் பிடித்துத் திருக ஆரம்பித்தான். அறுபது மைல் வேகத்தில் செங்கல்பட்டைத் தாண்டிக் கார் சென்று கொண்டிருந்தது. விமலாவின் இருதயம் அதைவிட வேகமாக அடித்துக் கொண்டது. அத்தானின் விரல் தீண்டிய இடத்தில் இன்பக் குறுகுறுப்பு உண்டாகி உடல் முழுதும் பரவியது. காதைத் திருகத் திருக ஒரு இன்ப வேதனை உடலில் அலை அலையாகப் பாய்ந்தது. உடம்பின் ஒவ்வொரு அணுவும் ஆட்டங் கண்டு தனித்தனியே மூலைக் கொன்றாகப் பிய்த்துக் கொண்டுபோய் ஆனந்தக் கூத்தாடி இன்பத் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தது.

'இன்னும் கொஞ்சம் அழுத்தித்திருகக் கூடாதோ?' என்று நினைத்தபடியே, "ஐயோ! காது, காது!" என்று கூச்சலிட்டாள் விமலா.

"அப்படி வா வழிக்கு! இப்போது பார்! நீ சொல்லவே வேண்டாம். நீ சொல்ல வந்ததை நானே கண்டு பிடித்து விட்டேன்" என்றான் நடராஜன்.

"சொல்லுங்களேன், பார்க்கலாம்."

"'ஏன் இவ்வளவு நேரம் கழித்து வந்தீர்கள்? உங்களுக்காகக் காத்திருந்து காத்திருந்து அலுத்து விட்டது' என்று சொல்ல வந்தாய். அப்புறம் 'அத்தானுடன் என்றோ ஒரு நாள் சேர்ந்து போகிறோம். இந்தச் சமயத்தில் ஆரம்பத்திலேயே குறை கூறியதாக இருக்க வேண்டாம்' என்று நினைத்துக் கொண்டாய். 'ஒன்றுமில்லை அத்தான்' என்று சொல்லி விட்டாய். அப்படித்தானே?"

"என்ன இருந்தாலும் உங்களுடைய திறமை யாருக்கு வரும்?"

"ஏழரை மணிக்கே கிளம்பி விட்டேன், விமலா! காரில் ஏறப் போன சமயம் நர்ஸ் பவானி வந்தாள். நோயாளி ஒருவனுக்கு ஜுரம் அதிகமாக இருப்பதாகவும், நான் உடனே கவனிப்பது நல்லது என்றும் சொன்னாள். அவனுக்கு அபாயமில்லை என்று தீர்மானித்துக் கொண்ட பிறகுதான் என்னால் கிளம்ப முடிந்தது. இந்தத் தொழிலே அப்படித்தான், விமலா! டாக்டருக்கு நேரம் பொழுது

என்றெல்லாம் கிடையாது. இஷ்டப் பட்ட போது கடமை அவனை அழைக்கும். அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டு தான் ஆகவேண்டும்; மறுக்க முடியாது. டாக்டரைக் கல்யாணம் செய்து கொள் பவர்களின் பாடு திண்டாட்டம்தான்!'' என்றான் நடராஜன்.

விமலாவின் முகம் 'குப்'பென்று சிவந்து விட்டது. கொதிக்கும் நீரை மேலே விட்டது போல் உடல் முழுவதும் சூடு பரவியது. அத்தானைப் பார்க்க முடியாமல் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். காரின் வேகத்திலே வீசிய காற்று சற்று உஷ்ணத்தைத் தணித்தது. 'திண்டாட்டமென்ன திண்டாட்டம்! ஒவ்வொரு நாளும் ஒரு மணி நேரம் பேசினால் போதாதா? அதுவும் முடியாதென்றால் அரை மணி நேரம் குலவினால் போதுமே? கடமை அதைக்கூட அனுமதிக்கவில்லையென்றால் ஐந்து நிமிஷங்கள்...வேண்டாம்....செல்லமாக ஒரு முறை கன்னத்தைக் கிள்ளினாலே போதுமே! மனைவி என்ற ஸ்தானம் கிடைத்தால் மற்றக் குறைகளைப் பற்றி எண்ணிப் பார்க்கக்கூட முடியுமா என்ன?' என்றெல்லாம் முகத்தில் வீசிக் கண்களைத் திறக்க வொட்டாமல் செய்த காற்றிடம் மனம் விட்டு மானசீகமாகப் பேசினாள் விமலா. உரக்க அத்தானிடம் இப்படிப் பேச அவளுக்குத் துணிவேது?

## ஒன்பதாம் அத்தியாயம்

# காதல் பறவைகள்

சென்னையிலிருந்து ஐம்பதாவது மைலில் இருக்கிறது மதுராந்தகம்.

"கோதண்டராமனுக்கு உச்சி காலப் பூஜை நடக்கும், விமலா! தரிசித்து விட்டுப் போவோமா?'' என்று கேட்டுக் கொண்டே கோவிலுக்கு முன்னால் மோட்டாரை நிறுத்தினான் நடராஜன்.

கோதண்டராமன் சீதாபிராட்டியுடனும் இளைய பெருமாளுடனும் திவ்யமாகக் காட்சிதந்தார். அர்ச்சனை நடந்து கொண்டிருந்த போது உட்பிராகார வாயில் சுவரில் மாட்டியிருந்த பாவை விளக்கைக் கண் கொட்டாமல் சிறிது நேரம் பார்த்தாள் விமலா. அந்தப் பாவையின் கையில் இருந்த தீபத்தில் மின்சார விளக்கை ஏற்றி வைத்திருந்தார்கள். விமலாவுடைய உள்ளத்தில் விநோதமான ஒரு எண்ணம் அப்போது ஏற்பட்டது. அந்த மின்சார விளக்கை அங்கே வைத்தவனைச் சபிக்கத் தோன்றியது. இரண்டு கைகளாலும் அந்த விளக்கைப் பிடித்து ஆவேசம் வந்தவனைப் போல் அழுத்தி உடைத்துத் தூள் தூளாக்க வேண்டும் என்று தோன்றியது. அதன் பிறகு அந்தப் பாவை பக்தி சிரத்தையுடன் அன்பும் அருளும் நிறைந்து, தெய்விகக் காதலுடன் கருமமே கண்ணாக இரவும் பகலும் இடைவிடாது ஏந்தி நிற்கும் அந்த அகல் விளக்கில் அன்பு என்னும் எண்ணெயை ஊற்றி, ஆசைத் திரியைப் போட்டு, பிறகு அத்தான் தன் கண்களிலே ஏற்றி வைத்துள்ள அணையாத தீபத்தைக் கொண்டு அந்த விளக்கை ஏற்ற வேண்டும்; காதல் சுடர் விட்டு எரியச் செய்ய வேண்டும் என்று தோன்றியது.

பெருமாளுக்குத் தீபாராதனை நடந்தது. விமலா எண்ணத்தொடர் அறுபட்டவளாய், கற்பூரம் எரிந்து பரப்பும் ஒளியிலே ராமபிரானைப் பார்த்தாள். அந்தக் கண்களிலே அருள் நிறைந்திருந்தது. சீதா பிராட்டியின் வதனத்திலே இதழ்க் கோடியில் ஒரு மந்தகாசம் தவழ்ந்தது. விமலாவின் மனத்திலே இதுவரையில் இருந்திராத ஒரு பேரமைதியும் நிம்மதியும் நிறைந்தன.

உற்சவ மூர்த்திக்கும் தீபாராதனை ஆன பிறகு கண்களிலே ஒற்றிக் கொண்டார்கள். தீர்த்தம் அருந்திப் பிராகாரத்தை விட்டு வெளியே வந்தார்கள்.

"ஒரு சமயம் பலத்த மழையில் ஏரி நிரம்பி உடைப்பெடுத்துக் கொள்ளும் என்று பயந்தபோது கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த கலெக்டர் துரை ஒருவர் ஊர் காப்பாற்றப்பட்டால் ஜனகவல்லித் தாயாருக்குத் தனியே மண்டபம் கட்டுவதாக வேண்டிக் கொண்டார். அதன்படியே கட்டுவித்தும் இருக்கிறார்'' என்று ஸ்தல புராணத்தை விவரித்தார் பட்டர்.

தாயாரைத் தரிசித்த பிறகு பிராகாரத்தை வலம் வந்து ஆண்டாள் சன்னிதியை அடைந்தார்கள். சூடிக் கொடுத்த சுடர்க் கொடிக்கு அங்கே அர்ச்சனை நடந்தபோது விமலாவுடைய கண்களிலிருந்து அவளையும் அறியாமல் தாரைதாரையாகக் கண்ணீர் பெருகிக் கன்னங்களில் வழிந்தோடியது.

இப்பால் வந்த பிறகுதான் அதைக் கவனித்தான் நடராஜன். அவளை ஒன்றும் கேட்கவில்லை அவன். கேட்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை.

அருகேயே இருந்த மதுராந்தகம் ஏரியைப் பார்த்தார்கள். கண்ணுக்கெட்டிய தூரம்வரை ஒரே நீர்ப் பரப்பாக விளங்கிய அதைப் படித்துறையிலே உட்கார்ந்து நீண்ட நேரம் பார்த்தாள் விமலா. சின்னஞ் சிறிய அலைகள் புரண்டு புரண்டு வந்து, தாயைத் தனது பிஞ்சுக் கரங்களால் கட்டிக் கொள்ளும்குழந்தை போல, அவள் கால்களைத் தழுவின.

"போகலாம் விமலா! பசிக்கிறது" என்றான் நடராஜன். வேடந்தாங்கல் போன பிறகுதான் மூட்டை அவிழ்ப்பது என்று ஏற்பாடு. வந்த வழியாகவே சுமார் ஐந்து மைல் திரும்பிய பிறகு இடப் புறத்தில் ஒரு கப்பி ரோட்டில் வண்டியைத் திருப்பினான் நடராஜன். சற்று மோசமான சாலையானதால் நிதானமாக ஓட்டினான்.

சுமார் ஏழு மைல் சென்றபிறகு ஆழமான கால்வாய் ஒன்று எதிர்ப்பட்டது. "அத்தான்! ஜாக்கிரதை!" என்று எச்சரித்தாள் விமலா. ஆனால் அந்தக் கால்வாய் பார்க்கத்தான் பயமாக இருந்ததேயொழிய, கார் அனாயாசமாக அதைத் தாண்டி முன்னேறியது.

ஒரு நிமிஷத்துக்குப் பிறகு காரை நிறுத்தி, "வந்து விட்டோம்" என்று கூறினான் நடராஜன்.

விமலா சுற்றுமுற்றும் பார்த்தாள். அவளுக்குக் கொஞ்சம் ஏமாற்றமாகவே இருந்தது. சற்றுத் தூரத்தில் ஒரு பெண் கல் உடைந்து விடுமோ என்று சொல்லும்படி துணியை ஓங்கி ஓங்கி அறைந்து துவைத்துக் கொண்டிருந்தாள். ஒரு எருமைக் கடா சேற்றிலே புரண்டு மகிழ்ந்தது. இன்னொரு பக்கம் இரண்டு சிறுவர்கள் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு கட்டிப் புரண்டார்கள். ஒரு கோழி அந்தக் கலவரத்தில் பயந்து போய் அலறி அடித்துக் கொண்டு வேகமாக ஓடியது.

"இதுதானா அத்தான் வேடந்தாங்கல்?" என்று கேட்டாள் விமலா.

அவள் குரலிலே தொனித்த ஏமாற்றத்தைப் புரிந்து கொண்ட நடராஜன் சிரித்தான். "அதோ ஒரு ஒற்றையடிப் பாதை தெரிகிறது பார்! அது வழியாகச் சிறிது தூரம் நடந்து செல்ல வேண்டும். அப்புறம் பாரேன் சொக்கிப் போய் விடுவாய்!" என்றான். அவன் எவ்வளவு சொல்லியும் கேளாமல் தானே உணவுப் பொட்டலங்களையும் கூஜாவையும் தூக்கிக் கொண்டு நடந்தாள் விமலா.

ஒற்றையடிப்பாதை என்று நடராஜன் குறிப்பிட்டது உண்மையில் உயர்ந்து நிற்கும் ஏரிக்கரை என்பது போகப்போக விளங்கியது. குறுகிய பாதையின் இருபுறமும் நிலம் சரிவாக இருந்தது. அந்தச் சரிவிலே ஏராளமான மரங்கள் தழைத்து வளர்ந்து நிழல் பரப்பின. தாழ்ந்து வளர்ந்திருந்த கிளைகளில் இலைகள் காற்றிலே அசைந்தாடி, ஏரியின் நீரைத் தொட்டுத் தொட்டுக் கொஞ்சி விளையாடின. ஏரியின் நீர்ப்பரப்பின் மீது தவழ்ந்து வந்ததால் குளிர்ச்சியடைந்த காற்று மரங்களின் இடையே புகுந்து அவை விரிக்கும் நிழலிலே மேலும் தண்மை பெற்று விமலாவைச் சூழ்ந்தது. சிலு சிலுப்பான காற்றிலே ஆடை உடலோடு ஒட்டிக்கொள்ள உடல் சிலிர்த்தாள் அவள். அந்தச் சிலிர்ப்புக்கிடையே ஒரு அற்புதமான காட்சியைக்கண்டாள்.

குறுகிய அந்தப் பாதையில் நடக்கும் போது திடீரென்று கண்ட அற்புதக் காட்சியில் ஏற்பட்ட வியப்பில் காலைத் தவறிப் போய் நிலச் சரிவில் வைத்துவிட்டாள் விமலா. கால் தடுமாறிச் சறுக்கி விழப்போன அவளை அணைத்துத் தாங்கினான் நடராஜன். அத்தானின் மார்பிலே சாய்ந்து பார்த்தபோது கண்ணைக் கவரும் அந்த அற்புதக் காட்சி மேலும் பொலிவும் அழகும் வனப்பும் பெற்றுத் தோன்றியது விமலாவுக்கு.

ஏரியின் தெளிந்த நீர்ப்பரப்புக்கு மேலே நூற்றுக் கணக்கான பறவைகள் ஒரே சமயத்தில் கும்பலாகச் சிறகடித்துப் பறந்தன. வேகமாகப் பறந்து சென்ற அவை சொல்லி வைத்தாற் போல் ஒரே சமயத்தில் இறக்கைகளை அடித்துக் கொள்வதை நிறுத்தி விட்டன. ஒரே வேகத்தோடு நீர்ப்பரப்பை நோக்கி அலகுகள் நீள, ஒய்யாரமாக இறங்கின. தண்ணீரை நெருங்கியதும் சட்டென்று உடலைச் சமனப்படுத்திக் கொண்டு வந்த வேகத்திலேயே சிறிது தூரம் நீரில் தத்தித் தத்திச் சென்றன. அதன்பிறகு அமைதியாக முன்னேறின.

"போரிலே நவீன விமானங்கள் குண்டு போட ஆகாயத்திலிருந்து வேகமாகக் கீழே இறங்குவது போல் இருக்கிறதல்லவா?" என்று கேட்டான் நடராஜன்.

"ஐயோ! போதுமே! சூதுவாது தெரியாத இந்தச் சாதுப் பறவைகளைப் போர் விமானங்களுக்கா ஒப்பிடுவார்கள்?" என்று கேட்டுச் சிரித்தாள் விமலா. நடராஜனும் கரங்கள் இறுகச் சேர்ந்து சிரித்தான். ஏகாந்தமான அந்த இடத்தில் அவர்களுடைய சிரிப்பொலி பெரிதாகக் கேட்டது. அதைக் கேட்டுப் பயந்ததால்தானோ என்னவோ, ஏரியின் நடுவே குடைகள் விரித்தாற்போல் நின்ற மரக்கூட்டத்தில் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்துக் கொண்டிருந்த ஆயிரக் கணக்கான பறவைகளில் ஒரு பகுதி மறுபடியும் 'ஜிவ்'வென்று கிளம்பி வான

---

வெளியிலே நீண்ட இறகுகளை நளினமாக அசைத்துப் பறக்க ஆரம்பித்தன. அவற்றின் கண்டங்களிலிருந்து விதம் விதமான ஒலிகள் கிளம்பின.

நிலச்சரிவிலே கால்களைத் தொங்கப் போட்டு ஏரிக்கரையில் உட்கார்ந்தார்கள். விமலா உணவுப் பொட்டலங்களைப் பிரித்தாள். இட்டிலி ஒன்றை நடராஜன் எடுக்கப் போனதும் சடாரென்று அதைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள். "நான் கொடுக்கிறேன், சாப்பிடுங்கள்" என்று கூறிவிட்டுச் சிறு சிறு துண்டமாக விண்டு விண்டு நடராஜன் கையில் வைத்தாள். இட்டிலியில் மிளகாய்ப் பொடி தடவியிருந்தும் கரும்பாக இனித்தது நடராஜனுக்கு.

"ஏரியின் நடுவேயிருக்கும் மரங்களின் தண்டுப்பாகம் நீரிலே மறைந்து போயிருக்கிறது, விமலா! இலைகள் நிறைந்த மேல் பாகத்தை மட்டும்தான் பார்க்கிறோம். அவைதான் பசுமையான திட்டுக்களாகத் தோன்றுகின்றன. அங்கேதான் உலகின் பல பாகங்களிலிருந்தும் பறவைகள் வந்து தங்குகின்றன. என்ன அதிசயம் பார்த்தாயா? ருஷ்யாவிலிருந்தும், ஆஸ்திரேலியாவிலிருந்தும், இங்கிலாந்திலிருந்தும் கூட விதம் விதமான பறவைகள் இங்கே வருகின்றனவாம். ஆனால் இதுவரையில் இங்கே வந்திராத பறவைகள் இரண்டு புதிதாக வந்திருக்கின்றன, விமலா! அவை என்னவென்று தெரியுமா?"

"என்ன அத்தான்?"

"காதல் பறவைகள், விமலா!"

சின்னஞ் சிறிய சிட்டின் சிறகுகளைப் போல விமலாவின் கண் இமைகள் படபடத்தன. கன்னங்களிலே குழி விழ, தேன் மணம் பரப்பும் மாதுளம் மொட்டு விரிந்தாற்போல அதரங்களில் புன்னகை தவழ விமலா நாணித் தலைகுனிந்து கொண்டாள். தனக்கும் அத்தானுக்கும் உண்மையிலேயே சிறகு முளைத்து விட்டது போலவும் எல்லையற்ற நிர்மலமான நீல வானிலே முடிவில்லாமல் காதல் புரிந்து கொண்டே பறந்து செல்வதுபோலவும் அவளுக்கு ஒரு பிரமை!

"எனக்குப் போதும், விமலா! நீ சாப்பிடு" என்று சொன்னபோது இரண்டே இரண்டு இட்டிலிகள் மட்டுந்தான் பாக்கியிருப்பதைக் கவனித்தான் நடராஜன். அத்தனை புளியோதரையையும் இட்டிலிகளையும் தானே விழுங்கி விட்டது கண்டு விமலாவைக் கோபித்தான். "நீ கொடுத்துக் கொண்டேயிருந்தால் நான் சாப்பிட்டுக்கொண்டேயிருக்கிறேன். எனக்கு எப்படித் தெரியும்? பாவம்! உனக்குப் பசிக்குமே? சீக்கிரம் வீட்டுக்குத் திரும்பிப் போய் விடலாம்" என்றான்.

"வேண்டாம் அத்தான்! வேண்டவே வேண்டாம்! எனக்குத்தான் இரண்டு இட்டிலிகள் இருக்கின்றனவே? இதுவே அதிகம், அத்தான்! எனக்காகச் சீக்கிரம் கிளம்பி விடாதீர்கள்" என்று கெஞ்சினாள் விமலா. அந்த மனோரம்யமான சூழ்நிலையை விட்டுப் பிரிய அவள் மனம் கொஞ்சமும் ஒப்பவில்லை. அங்கே தான் எத்தனை விதமான பறவைகள்? சிவந்த மூக்குடன் ஒரு பறவை; வெண்மையும் கறுப்பும் கொண்ட ஒரு நாரை; முழுவதும் வெண்மையான கொக்கு; கன்னங்கரிய சிட்டு. இன்னும் எத்தனை எத்தனையோ!

விமலாவின் முதுகிலே கருநாகத்தைப் போல் நெளிந்த நீண்ட பின்னலைக் கையில் எடுத்தான் நடராஜன். "விமலா! உன்னுடைய பின்னலை ஒரு



பக்கம், உன் காலடியில் புரளும் சேலையின் நுனியை ஒரு பக்கம் என்று இரண்டு நாரைகள் அலகில் கொத்திக் கொண்டு ஆகாயத்தில் பறந்து போய் விடும், விமலா! அவ்வளவு இலேசாக இருக்கிறாய் நீ!" என்று சொன்னபடியே பின்னலின் நுனியில் கட்டியிருந்த பட்டுக் குஞ்சலத்தைத் தன் கன்னத்தில் தடவிக் கொண்டான் நடராஜன்.

"ஐயய்யோ! எங்கேயாவது கண் காணாத இடத்துக்கு அவை என்னைத் தூக்கிச் சென்று விட்டால் நான் என்ன செய்வேன்? உங்களை விட்டுப் பிரிந்து எப்படி இருப்பேன்?"

"உன்னைத் தாங்கிக் கொள்ளத் தயாராக நீண்டு நிற்கும் என் கரங்களில் போட்டு விட்டு, குறும்புத் தனமாகக் கத்திக் கொண்டே நாரைகள் போய் விடும் விமலா! என் கரங்களில் சிக்குண்ட நீ பயத்தினால் மூடியிருந்த கண்களைத் திறந்து பார்ப்பாய். அப்போது

தான் அந்த நாரைகளை நானே ஏவி விட்டேன் என்பது உனக்குப் புரியும்.''

இப்படி இளம் காதலர்களுக்கே உள்ள தனிப் பாணியில் ஏதேதோ அர்த்தமில்லாமல் பேசிக் கொண்டே போனார்கள் அவர்கள். நேரம் போவதே தெரியாமல் அவர்கள் பேசப் பேச, புதுப் புது எண்ணங்கள் விதம் விதமான கருத்துக்கள், விநோதமான யோசனைகள் உள்ளத்தில் எழுந்தன.

அவர்களைச் சுற்றிலும் இருள் கவிய ஆரம்பித்தது. இங்கொன்றும் அங்கொன்றுமாக நட்சத்திரங்கள் புலப்படத் தொடங்கின. பறவைகளின் ஒலிகள் அடங்கி விட்டன. பேரமைதியிலும் இருளிலும் தனித்திருந்த காதலர்களுக்குப் பூரண சந்திரன் துணையாக வந்து சேர்ந்தான். அவனிடமிருந்து தாரை தாரையாக வழிந்த நிலவைத் தாகம் தீர அருந்தினார்கள். ஏரியிலே, தண்ணீருடன் நிலாக் கற்றைகள் சரஸமாடித் தழுவுவதையும் அதிலே மகிழ்ச்சியுற்ற நீரலைகள் 'களுக், களுக்'கென்ற சிரிப்பொலியுடன் துள்ளுவதையும் ஆசை தீரப் பார்த்தார்கள்.

அருகருகே அமர்ந்திருந்த அந்தக் காதலர்களுடைய கரங்கள் தயங்கித் தயங்கி, சிறிது சிறிதாக நகர்ந்து ஒன்றையொன்று நெருங்கின. விரலோடு விரல் தீண்டியதும் இரு உடல்களிலும் புளகாங்கிதம் உண்டாயிற்று. ஒருவாறு அது அடங்கியதும் அந்தப் பொல்லாத விரல்கள் இன்னும் நெருங்கி வந்து ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து கொண்டன. இதயங்களிலே நிரம்பிய பிரேமை அந்தக் கரங்கள் வழியாகப் பரிமாறப்பட்டு இடம் மாறின.

''அத்தான்! சொர்க்கலோகம் என்று சொல்கிறார்களே? அது இந்த இடத்தை விட அழகாக இருக்குமா, அத்தான்?'' என்று கேட்டாள் விமலா.

''எனக்கு எப்படித் தெரியும் விமலா? நான் சொர்க்கலோகத்தை இதுவரையில் பார்த்ததில்லையே?''

''நானும் பார்த்ததில்லைதான். ஆனால் எங்கோ கண்ணுக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டிருக்கும் அந்தச் சொர்க்கத்தைப் பற்றி ஏன் பிரமாதமாக நினைக்க வேண்டும்? இதோ நம் கண்ணுக்கு முன்னால் தோற்றமளிக்கும் இந்த மனமோகனமான இடத்தை விடச் சொர்க்கலோகம் எந்த விதத்தில் உயர்ந்துவிடப் போகிறது? என்னை யாராவது, 'சொர்க்கலோகத்துக்குப் போகிறாயா? அல்லது அத்தானுடன் வேடந்தாங்கலுக்குப் போகிறாயா?' என்று கேட்டால் இங்கே வருவதாகத்தான் சொல்வேன்!'' என்று கூறிய விமலா 'அத்தானுடன்' என்ற வார்த்தைக்குக் கொஞ்சம் அதிகமாகவே அழுத்தத்தைக் கொடுத்தாள்.

அவளுடைய மார்பு இன்று குதூகலத்தால் விம்மிப் பூரித்திருந்தது. அளவு கடந்த சந்தோஷத்தால் அவள் இருதயம் வெடித்தே விடும் போலத் தோன்றியது. அப்படி வெடித்து விட்டாலும் நல்லதுதான். அத்தானுடைய கரங்களைப் பற்றி மார்புறத் தழுவியபடியே, அவருடைய மடியிலே விழுந்து இறந்துவிடும் வாய்ப்பு வேறு எங்கே எப்போது கிடைக்கப் போகிறது? விமலா ஏங்கினாள். அந்த இனிய முடிவு தனக்கு இப்போதே இந்தக் கணமே கிட்டாதா என்று பரிதவித்தாள்.

மங்கைப் பருவத்தை அடைந்த நாள் முதல், காதல் உணர்ச்சி முதன் முதலாக அந்த மங்கையின் உள்ளத்தில் பரிணமித்த நேரம் முதல், அந்த உள்ளத்திலே அத்தானுடைய திரு உருவத்தை ஏற்றி வைத்த விநாடி முதல் இந்நாள் வரையில் அவள் எந்தச் சூழ்நிலைக்கு ஏங்கினாளோ அது அவள் முன்னால் பரந்து விரிந்து கிடந்தது. அந்தச் சூழ்நிலையிலே அவள் யாரைத் தன் அருகிலே இருக்க வேண்டும் என்று நினைத்தாளோ அதே அத்தான் அவளுக்கு மிக அருகிலே கரங்களைப் பற்றிக் கொண்டு அமர்ந்திருந்தார். அவரிடமிருந்து அவள் எதை எதிர்பார்த்தாளோ அது கிடைத்து விட்டது. அத்தானின் காதல் மொழிகள், இன்சொற்கள் தங்குதடையின்றி அவள் காதுகளிலே தேனாகப் பாய்ந்து கொண்டேயிருந்தன. 'வேறு என்ன வேண்டும்? எதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறாய்? இந்த அளவு கடந்த சந்தோஷத்திலேயே, இருதயமே நீ துடிப்பதை நிறுத்திவிடு!' என்று கேட்டுக் கொண்டாள் விமலா. 'மறு பிறப்பில் உன் அத்தானைத் திருமணம் புரிந்து கொண்டு இல்லறம் நடத்தும் வாய்ப்புகிடைக்கும். நெஞ்சே! நீ பிளந்துபோ!' என்று ஆசை காட்டினாள். 'இந்தத் தருணத்தைக் கைவிட்டாயானால் உனக்கு இதைப்போன்ற இன்ப சாகரத்தில் திக்குமுக்காடும் சந்தர்ப்பம் கிடைக்கவே கிடைக்காது, மூச்சே! நீ தயவுசெய்து நின்றுவிடு' என்று கெஞ்சினாள், அதட்டினாள், கோபித்தாள். ஒன்றுமே பலிக்கவில்லை.

அத்தானுடைய மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு, ''நான் சாகவில்லையே அத்தான்! என்னால் இறந்துபோக முடியவில்லையே அத்தான்!'' என்று கதறிக் கதறி அழுதாள். (தொடரும்)




## 82. அதிஸ்தௌல்யம்

‘மழை பெய்து ஏரி நிரம்ப வேணும். பனி பெய்து ஏரி நிரம்புமா?’ இந்தப் பழமொழிகளைக் கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போய் விட்டதல்லவா? சரி, ஒரு புது மொழி சொல்கிறேன்.

உறிஞ்சிகள் ஒத்துழைத்தால் உடல் வளரும். ஊசிகள் போட்டால் ,வளருமா? இதுதான் புது மொழி, எப்படி?

உறிஞ்சிகள் கிரகிக்கும் சத்துப்பொருள் தான் ரஸதாது, ரத்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்தி (எலும்பு), மஜ்ஜை, சுக்லம் என்னும் தாதுக்களாய்ப் பரிணமமாகின்றன, அல்லது 'சமைக்கப்படுகின்றன. ஏரி ஜலம் வாய்க்கால் வழியோடி வயலை நிரப்பிய பின் கீழ் மடைவாயிலாக அடுத்தடுத்த வயல்களுக்கும் பாய்வது போல் இந்தத் தாது பரிணமம் நடைபெறுகிறது. இவ் வயல்களுக்கு வடிகாலும் உண்டு. நாமாகப் பார்த்து, வயல் நிரம்பியதும் அடுத்த வயலுக்குப் பாய்ச்சக் கீழ்மடையைத் திறந்து ஜலத்தை விடுவது கிரமமான முறை. இதற்கு மாறாக ஜலம் நிரப்பப்பட்ட வயலிலிருக்கும் ஒரு நண்டு வளை வழியாக ஒரு 'மோழை' ஏற்பட்டு நாம் நிரப்பிய ஜலமெல்லாம் வேண்டாத இடங்களில் பாய்ந்து பெரு வெள்ளம் ஏற்படுமானால்...? அது கிரமத்துக்கு முரணான போக்கு.

இப்படி உறுஞ்சிகள் கிரகிக்கும் ஊட்டப் பொருளை அந்தந்த (மேற்சொன்ன ரஸம் ரத்தம் முதலான) தாதுக்களாகச் சமைத்திட அந்தந்த (ஒவ்வொரு) தாதுவிலும் ஒரு வகையில் அக்னியின் அம்சம் இருந்தாக வேணுமல்லவா? இரைப்பையிலுள்ள தீயானது ஆகாரத்தைக் கைல் என்னும் அன்ன ரஸமாகச் சமைக்கிறது. குடலிலுள்ள தீ இக் கைலை உறிஞ்சிகள் பயன்படுத்திக் கொள்ளும் நிலைக்குச் சமைக்கிறது. பிறகு உறிஞ்சிகள் கிரகித்த சத்துப் பொருளை ஒவ்வொரு தாதுவிலும் உள்ள தாதுத் தீ அந்தந்தத் தாதுவாகச் சமைக்கிறது. அங்கு தனக்கு வேண்டியதைத் தான் நிறுத்திக் கொண்டு பிற உபரி பாகத்தை அடுத்த தாதுவுக்கு அனுப்புகிறது. வயல் நிரம்பியதும் கீழ் மடையைத் திறந்து அடுத்த வயலுக்கும் நீர் பாய்ச்சுவதைப் போல. மலையிலும் காட்டிலும் வெளியிலும் பெய்யும் மழை ஓடைகளாகவும் நதியாகவும் ஓடி, ஏரியிலோ வேறு நீர்த் தேக்கத்திலோ நின்று வாய்க்கால் வழியோடி வயல்களுக்குப் பாயும் கிரமத்துக்கும், நாம் உண்ணும் ஆகாரம் சரீரத் தாதுக்களாகச் சமைத்துக் கிடைப்பதற்கும் உள்ள ஒற்றுமையை எண்ணி, "தாதுப் பரிணமம் கேதார கௌல்ய நியமம் போல" என்று நமது சாஸ்திரங்கள் தெரிவிக்கின்றன. என்ன அழகான பொருத்தம், பாருங்கள்!

இப்படியுள்ள கேதார கௌல்யத்தில் 'மோழை' மூலம் வேண்டாத இடங்களில் தண்ணீர் ஒழுகித் தேங்கிப் பயிரெல்லாம் அழுகிவிடவும் ஓர் வெள்ளக் காடு நாற்றமெடுத்துக் கொசுப்பண்ணையாய்த் திருமானால்...?

அப்படியேதான் தாதுப்பரிணமத்தில் ஏதோ ஒரு தாத்வக்னிக்குப் பலக் குறைவு ஏற்படவும், அங்கு பரிணமமில்லாமல் போகிறது. அதற்கு முந்தின தாதுவில்...? அது வரையில் பரிணமத்தால் வந்து கிடைத்தவை யெல்லாம் தேங்கி நிற்க நேரிடுகிறது. அப்படித்தான் மாமிசம் மேதஸ் என்னும் தாதுக்கள் அதிகம் நிற்பதும். அதனாலேயே "காற்றடித்த பலூனுக்குக் காலும் கையும் வைத்தாற் போல் ஊளைச் சதை போடு"வதும் ஏற்படுகிறது.

இப்படிப்பட்ட நிலை எநதத் தாதுவில் வேணுமானாலும் ஏற்படலாமே! ரஸ தாதுவே ரத்த தாதுவாக மாறாமல் நின்று விடலாம். அப்போது ரஸதாதுவில் அதிக தேக்கமும், ரத்த தாதுவில் வறட்சி அல்லது ரத்தத்தின் குறைவு என்னும் நிலை ஏற்படலாமே! ரத்தம் மாமிசமாக மாறாமல் ரத்தமாகவே தேங்கி நிற்கவும்—மாமிச தாதுவில் குறைவும் ஏற்படலாமே!

ஆமாம்! ஒவ்வொரு தாதுவிலும் இவ்விதமாகத் தாது விருத்தியும் தாதுவின் க்ஷயமும் ஏற்படலாம். ரத்த தாதுவின் குறைவு ஏற்படுகிறதென்று வைத்துக் கொள்வோம். இது ரஸ தாது பரிணமமாகாமல் தேக்கம் பெற்று நிற்பதாலும் ஏற்படலாம். அல்லது ரத்த தாது தன் அளவைச் சரிக்கட்ட ஊட்டப் பொருளைச் சமைத்து, தான் நிறுத்திக் கொள்ளும் திறமை குறைவுபட்டதால் ஏற்படலாம். அல்லது மாமிச தாது தனது பேராசையினால் ரத்த தாதுவை அடியோடு படுமோசமான அளவுக்குச் சுரண்டி எடுத்துக் கொள்



"என்ன, ஐயா! நீங்களே தூங்கிக் கொண்டிருக்கீங்க. உங்களுக்கு ஒரு அஸிஸ்டெண்டு வேணும் என்கிறீரே!"

"ஆமாம்! நான் தூங்கும் நேரத்தில் என் வேலையைச் செய்யத்தான், சார்!"

ளும் இயல்பு பெற்றதினாலும்'' ஏற்படலாம். இப்படிப் பல காரணங்களால் ரத்தக்குறைவு ஏற்படும். இதற்கெல்லாம் காரணங்களை அறிந்து சிகிச்சை செய்ய வேணுமல்லவா? குடலில்! ஆகாரத்தின் சத்துப் பொருளை உறிஞ்சிகள் கிரகிப்பது போல், தாதுக்களின் பரிணாமத்திலும் ஒரு தாது சமைத்ததினின்றும் சத்துப் பொருளைக் கிரகிக்க, அதற்கு அடுத்த தாதுவுக்கான உறிஞ்சிகளும் இருக்கத்தானேவேண்டும்? இப்படியுள்ள உறிஞ்சிகளெல்லாம் திறமையுடன் — ஏற்றமோ குறைவோயின்றி-சம அளவில் செயல் புரியும் நிலையை ஏற்படுத்தவும்—அவை யாவும் ஒன்றோடொன்று தக்க முறையில் ஒத்துழைக்கவும் ஆவன செய்ய முயல்வதுதான் கிரமமான சிகிச்சை முறையாகும். குறைந்த தாதுவையோ—வேறு சத்துப் பொருளையோ உடனடியாகவும்—நேரிடவும் [ஊசிகளின் மூலம் செலுத்திச் சரிக்கட்டி விட முயல்வது...? கட்டிக் கொடுத்த சோறும், குத்திச் செலுத்திய ஊட்டமும் எத்தனை காலம் நிற்கும்? ஆகவேதான் உறிஞ்சிகள் ஒத்துழைத்தால் [பரிணாம சக்தி சரியானபடி இயங்கினால்] உடல் வளரும் என்ற புதுமொழி பிறக்கலாயிற்று. அப்படியில்லாவிட்டால்...? தாதுக்களின் ஏற்றக் குறைவு ஏற்படுவது ஓயாத விளையாட்டாகத் தீரும். ஊசி போட்டதும் ரத்தம் ஊறும். நிறுத்திய சில நாட்களுக்கெல்லாம்....? பழைய குருடிதான். மறுபடியும் ஊசிதான். இந்த ஓயாத (ஊசி) விளையாட்டுப் போக்குள்ள (பிள்ளைகளை) வளர் என்னென்பது? குறைவான ரத்தத்தைச் சரிக்கட்ட உடனடியாகச் செய்ய வேண்டிய (ஊசி) விளையாட்டோடு நிற்காமல், அக் குறைவுக்குக் காரணத்தைப் போக்கவும், முயற்சி செய்து உறிஞ்சிகளையும் சீர்ப்படுத்த (பரிணாம சக்தியைப் பெருக்க) முயற்சி செய்வது தான் முறை.

'ஆமாம், ஐயா! ஒவ்வொரு தாதுவும் விருத்தியுமாகலாம், க்ஷீணமுமாகலாம் என்றீர்களே! அப்படியானால், ரஸம் முதலான ஏழு தாதுக்களும் விருத்தி க்ஷய நிலைகளில் ஒவ்வொன்றும் என்னென்ன குறிகளைத் தோற்றுவிக்கும் என்பதைத் தெரிவியுங்கள். ஒவ்வொன்றுக்கும் என்ன சிகிச்சை செய்யவேணும்' என்றும் கேட்கிறீர்களா?

அதை வேறு விஷயமாக ஏற்கலாம். இப்போதைக்கு மாம்ஸம், மேதஸ் என்னும் தாதுக்கள் குறைவுபட்டால் மனிதன் உடல் மெலிந்து புல்தடுக்கியாகிறான். அவை அதிகரித்தால் உடல் பருத்துக் காற்றடைத்த பலூனாகிறான்.

மாம்ஸதாது அதிகமாகப் பெருகுமானால் காய்டர் என்றும் அபசீ என்றும் களகண்டம் என்றும் சொல்லும் வியாதி ஏற்படலாம். கழுத்திலுள்ள கிரந்திகள் அழற்சியுற்றுப் பருமனாகும் இந்நோயில். அற்புதம் என்னும் புற்று நோய் உண்டாகலாம்; அங்கங்கும் சரீரத்திலுள்ள கிரந்திகள் அழற்சியுறலும் பருமனாவதும் ஏற்படலாம். கழுத்தைச் சுற்றிலுமுள்ள பிரதேசத்திலும், துடைகள், வயிறு முதலிய இடங்களிலும் அசங்கியமான பருமன் ஆகிய குறிகள் ஏற்படும்.

மேதஸ் என்னும் கொழுப்பு அதிகமானாலும் மேற்சொன்ன குறிகள் ஏற்படும். மேலும் சகிக்க முடியாத பயங்கரமான ஒரு அயர்வு, ஓய்ச்சல் இவையும் உண்டாகும். சிறிது இப்படியப்படி நடந்து செல்லல் போன்ற சேஷ்டைகள் செய்தாலும் பெருமூச்சு வாங்கத் தொடங்கும். இடுப்பு, பிருஷ்டபாகம், மார்பு, வயிற்றுப் பிரதேசங்கள் மிகவும் பருத்துத் 'தொள தொள' வென்று தொங்கலாடும் நிலைமை ஆகியவை உண்டாகும்.

ரொம்ப சரி. இதற்குச் சிகிச்சை...?

"உடல் பருமனாவதை விட மெலிந்திருப்பதே விரும்பத் தக்கது. பருமனைக் குறைக்க வைத்தியம் செய்வது எளிதல்ல" என்பது சாஸ்திரம். ஆயினும் நாம் சில சிகிச்சைகளைச்செய்யலாம். அதனால் ஓரளவு உடல் பருமனைக் குறைக்கலாம். அல்லது அளவு மீறிப் பருமனாகாமல் இருக்கச் செய்யலாம். (தொடரும்)




## ரேடியோ களைப்பா?

இப்படி ஒருவித களைப்பு இருக்கிறது! அடிக்கடி ரேடியோவில் 'கிரீச்' 'கிரீச்' என்ற ஒலம் கேட்கிறது என்று சலிப்படைந்தால்....அபஸ்வரமும் அன்னிய குரலும் கேட்டால்....'கர்' 'கர்' என்ற அடித் தொண்டைச் சத்தம் காதைத் துளைத்தால்.......பொதுவாகவே இரட்டைக் குரலோசை ஒலித்தால் — உங்களுக்கு ரேடியோ களைப்பு ஏற்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

அது ரேடியோவிலுள்ள ஒலிபெருக்கிக் கருவிகளின் குறைபாடு. ஹை-பீ (ஹைபெடிலிடி) இயற்கைக் குரலை அப்படியே வெளிக் கொணர்ந்து ஒலிபரப்பும் நுட்பமான நவீன முறையில், குரல் வகைகளையும் இன்னிசைகளையும், தாரஸ்தாயி மந்தரஸ்தாயி பிரஸ்தாபங்களையும் உங்களுக்குப் பிடித்தமாதிரி, இரண்டு ஒலிபெருக்கிகளை இசைவாகப் பொருத்தி வைப்பதன் மூலம் வழங்கப்படுகிறது.

இந்த நவீன நுட்பத்தைக் கையாண்டு உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது நோவாக் ஹை-பீ என்ற பிரசித்தி பெற்ற பெல்ஜிய நாட்டு ரேடியோ. உன்னதமான முறையில் நாதத்தின் இனிமையை அளிக்கவல்லது.

உங்களுக்கு அருகாமையிலுள்ள நோவாக் வியாபாரியிடம் சென்று இந்த ரேடியோவை வைக்கச் சொல்லிக் கேட்டுப் பாருங்கள்.



# நோவாக் ரேடியோ

**மாடல் 684T Hi-Fi**

**ரு. 550/-**

வரிகள் தனி

# NOVAK

**the famous Belgian Radio**

சக்திவாய்ந்த 8 கும்பிரோட் வால்வுகள் ★ 13.4 முதல் 572 மீட்டர் வரை 4 பாண்டுகளில் ★ தானாகவே இயங்கும் 'பிளாஜோ'க் முறை ★ தாரஸ்தாயி மந்தரஸ்தாயில் மாற்றி வழங்கும் Hi-Fi ஏற்பாடு ★ வைரேஷனைக் ஸ்பீக்கர்கள் 9½" ஸ்பீக்கர்கள் 3½" ட்வீட்டர் ★ மத்திய அலைகளைப் பிடிக்கும் ஏரியல் ★ சிற்றலைகளுக்கான மறைக்கப்பட்ட ஏரியல் பார்வைப் ட்யூனிங் இண்டிகேட்டர் EM 80 ★ பியானோ ட்யூனிங் ★ சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது. ★ அதிகப்படி ஸ்பீக்கர்களும் பிக்கப்பும் வைத்துக்கொள்ள வசதிகள். ★ 205, 225, 250 வால்டேஜுக்கான அட்ஜஸ்ட்மென்டுகள். ★ ஏ.ஸி. அல்லது ஏ.ஸி./டி.ஸி. ★ ரம்மியமான 'வினீர்' மரத்தில் செய்யப்பட்ட 22"×14"×9½" காபினெட்

**உற்பத்தியாளர்கள்: டெலிராட் பிரைவேட் லிட்., பம்பாய்-10**

தென்னிந்தியாவுக்கு விநியோகஸ்தர்கள்

## ஓபுல் ரெட்டி (மதராஸ்) பிரைவேட் லிமிடெட்

31, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, சென்னை-2

சென்னை ராஜ்ய ஜில்லா விற்பனையாளர்கள்: டி. எஸ். என். சுந்தரராஜ பாகவதர் அண்டு ஸன்ஸ் பாண்டிச்சேரி - ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட், கோயமுத்தூர் ஏ. சப்பன் அண்டு கம்பெனி, வேலூர் - ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிமிடெட், உதகமண்டலம் நேஷனல் ரேடியோ ஸானிக்ஸ், கும்பகோணம் - பீபிள்ஸ் ரேடியோ கம்பெனி, காஞ்சீபுரம் ஸ்ரீ நடராஜா ரேடியோ ஹௌஸ், சிதம்பரம் - ஜெர்மன் ரேடியோ ஹவுஸ், திருச்சி பாலு ரேடியோ சர்வீஸ், மதுரை - ஆர். சுந்தரேசன் அண்டு கம்பெனி, சேலம்

## கார்த்திகைத் தீபாஞ்சலி!

நெய்விளக் கேற்றிடுவோம் :- கார்த்திகை
நெய்விளக் கேற்றிடுவோம்!
பொய் வழக் கின்றிப்
புதுமையாய் நெஞ்சினும்
நெய்விளக் கேற்றிடுவோம்!

வெண்ணெய் மெழுகிடுவோம் :- தரையெலாம்
வெண்ணெய் மெழுகிடுவோம்!
எண்ணம் நவம்நவம்
என்றிட வாழ்விலும்
வண்ணம் மெழுகிடுவோம்!

கோலம் புனைந்திடுவோம் :- அரிசிமாக்
கோலம் புனைந்திடுவோம்!
கோலவிந் தைகள் புதியாய்ச் செயலினும்
மேலும் புனைந்திடுவோம்!

தோரணம் தூக்கிடுவோம் :- மாமலர்த்
தோரணம் தூக்கிடுவோம்!
ஆரணம் 'ஓம்' என்றறிவினும் மெய்ஞ்ஞானப்
பூரணம் தூக்கிடுவோம்!

இன்பம் நிறைந்திடுவோம் :- பேரருள்
இன்பம் நிறைந்திடுவோம்!
அன்புக் கடலான
ஆண்டவன் பூம்பதத்
தெம்பில் நிறைந்திடுவோம்!

ஒளியை வணங்கிடுவோம் :- வாழ்விக்கும்
ஒளியை வணங்கிடுவோம்!
தெளிவும் மெய்ஞ் ஞானமும்
தெய்வமும் கார்த்திகைத்
தீபமாய்க் கும்பிடுவோம்!

—தமிழழகன்



## தீப விழா

தம்பி சீனிவாசன்

கார்த்திகை ஒரு தீப விழா
கண் நிறைந்த காட்சியம்மா

கோயிலெல்லாம் தீப ஒளி
கோபுரத்தில், குளக்கரையில்,
வாயில்தோறும், வீட்டிலெல்லாம்
வண்ண ஒளி வீசுதம்மா

'அருள் பெரிது, ஆண்டவனின்
அன்புருவும் பெரிய' தென
இருள் நீக்கும் பெருஞ் சோதி
ஈசன் புகழ் பேசுதம்மா.

அறியாமை, அகந்தையெனும்
அழுக்கையெலாம் எரித்திடு
வோம்

அறிவொளியாம் சுடர்விளக்கை
அழகழகாய் ஏற்றிடுவோம்.

கார்த்திகை ஓர் தீப விழா
கண் நிறைந்த காட்சியம்மா!

## கார்த்திகை வாராள்!

தென்றல்

கார்மழை கொட்டுது கங்குல் சிரிக்குது
கார்த்திகைப் பெண்ணோ குலுங்கியுடல்
நேர்த்தியின் பூப்பாத மெட்டி குலுங்கிட
நாணிச் சிரித்து நடந்து வாராள்!

பொன்னொளி வீசிடும் தீபச் சுடரிலே
பூமணத் தென்றலோ வீசும்போது
மென்னுடல் தன்னிலே மின்னொளி வீசிட
மஞ்சள் முகத்தை மினுக்கி வாராள்!

கண்ணைப் பறித்திடும் கட்டுடல் கன்னிகள்
கைவிரல் தூவிடும் கோலப் பொடி
மண்ணில் விழுந்ததும் மத்தியிற் பூசணி
மலரின் சிரிப்பிலே கொஞ்சி வாராள்!

எங்கள் முருகனும் ஈசனின் புத்திரன்
இருக்கு மிடந்தனைக் காணவென்றே
தங்கச் சிலையவள் தானந் தவறாமல்
தாண்டவமாடித் துணிந்து வாராள்!



புதுதில்லி மத்திய சர்க்கார் வெளி நாட்டு விவகார இலாகாவைச் சேர்ந்த திரு எஸ். நாராயணனுக்கும், செள. அஹல்யாபாய்க்கும் விவாகம் நடந்தது.



திரு கே. என். பொன்னம்பலம் குமாரர் திரு காந்தி சுந்தரத்துக்கும், செள. கஸ்தூரிபாய்க்கும் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

# வாழ்க



சென்னை சிலர்ஸ் பாங்கியைச் சேர்ந்த திரு கே. வி. ரமணராவ் அவர்களுக்கும், செள. விஜயலக்ஷ்மிக்கும் கும்பகோணத்தில் திருமணம் நடந்தது.



தினமணி கதிர் காரியாலயத்தைச் சேர்ந்த திரு நீலமணிக்கும், செள. ஞானஇக்கும் பழனியில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது.



ஸ்ரீரங்கம் நகர காங்கிரஸ் கமிட்டி தலைவர் திரு எஸ். சீனிவாசாச்சாரியாரின் புதல்வி செள. ராஜலக்ஷ்மிக்கும், திரு பத்மநாபனுக்கும் திருமணம் நடைபெற்றது.



எழுத்தாளர் புனர்வசுவின் சகோதரர் ஸ்ரீ ராதாகிருஷ்ணனுக்கும், செள. மீனாக்ஷிக்கும் விரிஞ்சிபுரத்தில் விவாகம் சிறப்பாக நடைபெற்றது.







பெஸ்ட் அண்ட் கம்பெனியைச் சேர்ந்த திரு ஸ்ரீதரன் பி. எஸ்ஸி.க்கும், செள. விமலா தேவிக்கும் விவாகம் சமீபத்தில் விமரிசையாக நடைபெற்றது.

தலால் கம்பெனி சீனியர் பார்ட்னர் திரு வி. நடராஜன் அவர்களின் புதல்வர் திரு சுப்பிரமணியத்துக்கும், செள. இந்திராவுக்கும் திருப்பதியில் திருமணம் நடந்தது.

# மணமக்கள்







திரு ரங்கசாமி செட்டியார் புதல்வர் திரு ஆர். சிந்தையன் பி. ஏ.க்கும், செள. கஸ்தூரிபாய்க்கும் சீரங்கபாளையத்தில் திருமணம் நடைபெற்றது.

விமானப் படையைச் சேர்ந்த திரு ஸ்ரீராமுலுராஜுவுக்கும், செள. கோகிலாம்பாளுக்கும் கிருஷ்ணகிரியில் திருமணம் சிறப்பாக நடந்தது.







இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர் எஸ். தொண்டைமான் மருமகள் செள. பார்வதி சிதம்மாவுக்கும், திரு ராஜமார்த்தாண்டனுக்கும் திருமணம் நடந்தது.

பம்பாய் கிருஷ்ணமூர்த்தி ஐயரின் குமாரி செள. வனஜாவுக்கும், திரு ராம கிருஷ்ணனுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

# லட்சதீபம்



ஆர். எஸ். ஞானம்பாள் —

விஜயத்துக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. நெஞ்சு நிறைய வெறுப்பையும், விரோதத்தையும் வைத்துக்கொண்டு செய்யும் இந்தப் பிரார்த்தனையைத் தெய்வம் ஏற்குமா என்று அவளுக்குச் சந்தேகம்தான். எது எப்படி யிருந்தாலும் வீட்டில் பிறந்த பெண்ணை, உள்ளூரில், ஒதுக்கி வைத்து விட்டுப் பூஜையும் பிரார்த்தனையும் செய்யவில்லை என்று யார் அழுதார்கள்? உலகம் சிரிப்பது ஒரு புறம் இருக்கட்டும். அவள் உள்ளமே ஒப்பவில்லையே!

தைரியத்தையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டுதான் சிந்தாமணியை நெருங்கினாள். அபிஷேகச் சாமான்களைச் சரி பார்த்துக் கணக்கிட்டுக் கொண்டிருந்த சிந்தாமணி, "என்ன விஜயம்! நீ தயாரா? அர்ச்சகர் வந்து சொல்லி விட்டுப் போகிறார். நாமும் புறப்பட வேண்டியதுதான்" என்று புன்னகை பூத்தார்.

விஜயம் மென்று விழுங்கினாள். "கோவிலுக்குப் போவதற்கு முன்னால் ஜானகியையும், மாப்பிள்ளையையும் ஒரு வார்த்தை கூப்பிட்டு விடுவோம்!"

"விஜயம்! உன்னுடைய வேலையைப் பார்த்துக் கொண்டு போ நீ!" என்று இரைந்து கத்தினார் சிந்தாமணி.

"இதுவும் என் வேலைதான். இதோ பாருங்கள். அண்ணன் தங்கைக்குள் ஆயிரம் இருந்தாலும், நாளைக்கே, நீங்கள்-ஒரு தாய்க் குழந்தைகள் — ஒன்றாகி விடுவீர்கள். நடுவில், ஊரார் பெண்ணாகிய என்மீதுதான் பழி விழும். அப்படியும் ஜானகி உங்களை என்ன சொன்னாள்? நீங்கள் மாப்பிள்ளையும், மைத்துனரும் குடுமியைப் பிடித்துக் கொண்டால் உடன் பிறந்த பாசம் கூடப் போய் விடுமா?"

"உன் பிரசங்கத்தை நிறுத்தேன். எனக்கு எல்லாம் தெரிந்துதானிருக்கிறது. அவள் என்னுடன் பிறந்திருக்கலாம். அந்தத் தோஷத்துக்கு நான் செய்ய வேண்டியதைச் செய்தாயிற்று. இனி அவளுக்கும் எனக்கும் எந்த உறவும் இல்லை. இதய சுத்தம் இல்லாதவர்களை, என் வீழ்ச்சியை விரும்புகிறவர்களை யாராயிருந்தாலும் அண்டவிட மாட்டேன்!"

"இப்படிச் சொன்னால் ஆயிற்றா? நீங்களும் சொன்னீர்கள்; அவரும் கத்தினார். யாருக்கும் கோப வேளையில் வார்த்தை நிதானம் தவறுகிறதுதான். அதற்காக ஜானகியை..."

"ஜானகி, ஜானகி, ஜானகி! அந்தக் கிராதகி மட்டும் இலேசுப்பட்டவளோ? அந்த மடையன் அவ்வளவு பேச்சு பேசுகிறான்.

அப்படியெல்லாம் அண்ணாவைச் சொல்லாதீர்கள்! அண்ணா எனக்கு, நமக்கு எவ்வளவோ செய்திருக்கிறார். தகப்பன் முகத்தையே காணவில்லை நான். பெற்றுப் போட்டுவிட்டு அம்மாவும் போனபின் அண்ணா மட்டும் இல்லாதிருந்தால், நான் இருந்த இடம் புல் முளைத்திருக்கும். அவரை மரியாதைக் குறைவாகப் பேசக்கூடாது' என்று ஒரு வார்த்தை சொல்லத் துப்பு இல்லை அந்தக் கழுதைக்கு. அவனுக்கு முன்னால் அவனல்லவா வெளியே ஓடினான்? நான் இனி எதற்கு அவனுக்கு? அவன் உறவு எனக்கும் வேண்டாம்.''

விஜயம் உள்ளே போய் விட்டாள்.

கோப வெறி பிடித்துக் கூத்தாடும் இரு ஆண் பிள்ளைகளிடையே புகுந்து ஒரு பெண் என்ன சமாதானம் சொல்வாள்? யாருக்கென்று பேசுவாள்? ஒரு பக்கம் அண்ணா; எதிர்ப்புறம் கணவன். தங்கையாக நினைத்து வளர்க்கவில்லை; பெற்ற தகப்பனாகத்தான் விளங்கினார் சிந்தாமணி. ஆனாலும் கட்டிய புருஷனைக் காட்டிக் கொடுக்க முடியுமா? அவரை எதிர்க்கத்தான் முடியுமா? அந்த மனிதரும் சொன்னால் கேட்கக் கூடியவரல்ல, படுமுரடு; பலாமுரடு.

முதல் போட்ட மைத்துனரும், உழைத்துப் பாடுபட்ட மாப்பிள்ளையும் வருஷாந்திர லாப நஷ்டக் கணக்கு பார்த்துக் கொண்டிருந்தனர். முந்தைய நாலைந்து வருடங்களை விட அந்த வருஷம் லாபம் அதிகம் எனக் கண்டனர். மாப்பிள்ளையின் உழைப்பாலும், அறிவின் திறத்தாலுமே உபரி வருமானம் என்பதை மைத்துனரும் மறுக்கவில்லை. ஆயினும் அவர் லாபத்தில் சரி பாதிப் பங்கு கேட்டதும் சிந்தாமணி அதிர்ச்சி அடைந்தார். முதல் போட்ட தமக்கே அது உரியது; தாம் பெருந்தன்மையாகத் தருவதை வாங்கிக் கொள்ள வேண்டும். ஆம் தங்கைக்காக அவர் முழு லாபத்தையுமே கொடுத்து விடக் கூடத் தயார். மரியாதையாகப் பெற்றுக் கொள்வதே அழகு என்பது சிந்தாமணியின் வாதம். 'யாரும் தயவினால் தரும் பிச்சைக்காக தமக்கு வேண்டியதில்லை' என்று மாப்பிள்ளை முரண்டினார்.

அந்தச் சமயம் அவர்கள் படித்த படிப்பு, பண்பு எதுவுமே உதவவில்லை. வார்த்தை தடித்து விட்டது.

''வீதியில் போகிற வக்கற்றவனைக் கூப்பிட்டுப் பெண்ணைக் கொடுத்துப் பதவியையும் தந்தால் பேச மாட்டானோ?'' என்று சீறி விழுந்தார் சிந்தாமணி.

''ஊரார் தலையில் கை வைத்துச் சம்பாதித்து எந்தப் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் சேர்த்து வைக்கப் போகிறாய்? கடவுள் கொடுத்த கையும் காலும் இல்லையா? பிழைத்துக் கொள்வோம்'' என்று படி இறங்கி விட்டார் மாப்பிள்ளை, மனைவி மக்களுடன். இடையில் விஜயமோ, ஜானகியோ பேச என்ன இருந்தது?

மூன்று நாட்கள் கவிழ்ந்து படுத்துக் கொண்டு விக்கி விக்கி அழுதார் சிந்தாமணி. ''நான் பெற்ற பெண்ணானால் அப்படிப் போவாளா? எனக்கு ஒரு குழந்தை இல்லை என்றுதானே இவர்களுக்கு இளக்காரம். இருப்பதையெல்லாம் அந்தத் தெய்வத்துக்கே செய்து விடுகிறேன். எனக்குக் குழந்தை பிறந்தாலும் சரி; பிறக்காவிட்டாலும் சரி. என் காலில் ஒட்டிய தூசைக் கூட இவர்களுக்கு விட்டு வைக்க மாட்டேன்'' என்று குமுறினார்.

சிந்தாமணியின் தெய்வ பக்தியைக் கண்டு ஊரே வியந்தது. கை நிறைய வாரி, தானதர்மம் வழங்கினார். மனைவியையும் அழைத்துக் கொண்டு, ஆறு மாதங்கள் நாடெங்கும் யாத்திரை செய்து விட்டுக் கார்த்திகை மாதம்தான் ஊர் திரும்பினார்.

கிருத்திகைக்கு, முருகன் கோவிலில் லட்ச தீபம் வைக்கத் தீர்மானித்தார். அபிஷேகம், அர்ச்சனையெல்லாம் பெரிய அளவில் ஏற்பாடாயின—உள்ளூரிலே இருக்கும் தங்கையை அழைக்காமலேயேதான். விஜயத்தின் பேச்சு ஒன்றும் அவர் காதில் ஏறவே இல்லை.

கிருத்திகை நோன்பு அன்று. இருளைத் தன் ஆயிரம் கிரணங்களாலும் அகற்ற வரும் முழுமதியுடன் போட்டி போட்டுக் கொண்டு மின்னின சின்னஞ் சிறு ஒளிப் பூக்கள். விளக்கேற்றி வைத்துத் தெய்வத்தை வணங்கி எழுந்தாள் விஜயம்.

யாரோ கூப்பிடும் குரல் கேட்டு வாசலுக்குப் போனார் சிந்தாமணி. வந்தவன் ஏதோ சொன்னான், மிக வருத்தத்துடன். 'சரி! சரி! நீ போ!' என்றார் கடுமையாக. வந்தவன் விடவில்லை. வா தா டி னா ன். 'எனக்குத் தெரியும், போ' என்று அவனை விரட்டவும், விளக்கும் கையுமாக விஜயம் வாசலுக்கு வரவும் சரியாக இருந்தது. 'யார் அது?' என்று விசாரித்தாள். ''கோவிலில் அர்ச்சனை ஆரம்பமாகப் போகிறதாம். சொல்லிவிட்டுப் போகிறான். விளக்கேற்றியாச்சே, இனி நீயும் வருகிறவள்தானே!...'' என்றார் சிந்தாமணி.



விளக்கை ஏற்றினதும், ஏற்றுவதுமாகக் கதவைப் பூட்டிக் கொண்டு போவார்களா? நீங்கள் முதலில் போங்கள். நான் நாலு சுமங்கலிகளுக்குத் தாம்பூலம் கொடுத்து விட்டுச் சிறிது நேரத்தில் வருகிறேன்!''

'இடு இடு' என்று வந்தது விஜயத்துக்கு. கிருத்திகை உபவாசம், சுத்தப் பட்டினி என்பது மட்டும் காரணமில்லை. காலையிலிருந்தே அவள் மனம் ஒரு நிலையில் இல்லை.

குழந்தை கார்த்திகேயனுக்கு, ஜானகியின் பிள்ளைக்கு, அன்று பிறந்த நாள். மூன்றும் வருஷம் அவன் பிறந்தான். அடேயப்பா! அன்று தான் எவ்வளவு குதூகலம் வீட்டில்! சிந்தாமணிதான் எப்படிக் குதித்துக் களித்தார்!

மாசம் நெருங்க நெருங்க, 'ரோஹிணி நட்சத்திரத்தில் குழந்தை பிறந்து வைக்கப் போகிறதே' என்று ஜானகி தவித்துப் போனாள்.

''ஏதோ ஒரு நட்சத்திரத்தில் பிறந்து தானே ஆக வேண்டும்? மாமாவுக்கு ஆகாது என்றால் ஏதாவது சாந்தி பரிகாரம் இராதா? இந்த நிலையில் நீ மனசை அலட்டிக் கொள்ளக் கூடாது'' என்று ஆறுதல் சொல்லிச் சொல்லி விஜயத்துக்குக்கூட அலுத்துப் போய்விட்டது.

ஆனால், கிருத்திகை நட்சத்திரத்தில், கார்த்திகைத் தீபம் ஒளிபரப்பும் அழகிய அந்த மாலைவேளையில் பிறந்த குழந்தை, காண்பவர் மனத்தில் எல்லாம் இன்ப ஒளிவீசும் சாட்சாத் கார்த்திகேயனாகவே விளங்கினான். கார்த்திகேயனை எடுத்துத் தழுவிக்-கொள்ள விஜயத்தின் உள்ளமும், உடலும் துடித்தன.

விஜயம் பெருமூச்சு விட்டாள். குழந்தையைப் பார்த்தே ஆறேழு மாதங்கள் ஆகி விட்டன. அவளுக்கு வயிற்றை என்னவோ செய்தது. போன கார்த்திகையன்று கூட, கார்த்திகேயனின் ஆண்டு நிறைவு, எவ்வளவோ விமரிசையாகப் பெருமையும் மகிழ்ச்சியும் பொங்க நடந்ததே! அவள் கனவு கூடக் கண்டவளில்லை, இப்படி ஒரு விபரீதம் நிகழ்ந்துவிடுமென்று.

விஜயம் உறுதியுடன் எழுந்தாள்.. தட்டில் பூ, பழம், வெற்றிலை எல்லாம் எடுத்து வைத்து விட்டுப் பீரோவைத் திறந்தாள். மேலாக இருந்த தங்க வர்ணப் புடவையை விஜயம் ஜானகி இருவருமே ஆசைப்பட்டு, மாதிரி சொல்லி நெய்யச் சொன்னது; அதன் ஒற்றை விஜயத்தின் இடுப்பில் ஏறியிருந்தது. மற்றொன்று பீரோவில் இருந்தது. அலைபாயும் நெஞ்சம் எதை எதையோ எண்ணி அஞ்சியது. புடவையை இருந்த இடத்திலேயே வைத்துவிட்டுப் பர்சைமட்டும் எடுத்து ரவிக்கைக்குள் செருகிக் கொண்டு பையும் கையுமாகக் கிளம்பி விட்டாள் விஜயம்.

'சுவாமிக்கு அபிஷேகம் முடிந்து அலங்காரம்கூட ஆகிவிட்டது; அர்ச்சனை ஆரம்பமாகி விடப் போகிறதே! சொன்னால் சொன்னபடி வருகிறதில்லை. சே! இந்தப் பெண்களே இப்படித்தான்' என்று இன்னும் கோவிலுக்கு வந்து சேராத விஜயத்தைக் குறித்துச் சலித்துக் கொண்டார் சிந்தாமணி. அவர் மனம் நிம்மதி யில்லாமல் தவித்தது. அலங்காரம் முடிவதற்குள் பிராகாரத்தை ஒரு முறை வலம் வரலாம் என்று எழுந்தார். எங்கும் ஒளி வெள்ளம்! ஒருவாரமாக வைக்கும் லட்ச

பத்தில் கடைசிப் பகுதி சிறுவேலும் நான்; இன்று விளக்குகளும் அதிகம். மூலை, முடுக்கு எங்கும் இருள் என்பதேயின்றி முருகப் பெருமானின் கருணை ஒளி வீசியது. எல்லாம் அவர் கைங்கரியம். 'முருகா! உன் கோவில் முழுதும் விளக்கேற்றிய என் மனத்தில் இருள் சூழ விடாதே' என்று உள்ளம் உருக வேண்டிக் கொண்டார். ஏனோ அவருக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. அவர் நெஞ்சில் சூழ்ந்திருக்கும் இருள் அசலுமா?

'குழந்தைக்கு — கார்த்திகேயனுக்கு உடல் நலமில்லை. நிமோனியாவாம். ரொம்பக் கடினமான நிலை. மாப்பிள்ளையும் பத்து நாட்களாக ஊரில் இல்லை' என்று சொல்லித் தான் அந்த ஆள் அழைத்தான். அந்தி மயங்கும் வேளையில் யாருடைய சுகதுக்கமும் தன்னை இனி பாதிக்காது; பாதிக்கக்கூடாது என்றே அவனை விரட்டிவிட்டுக் கோவிலுக்கு வந்தார். அவர் வேண்டிய அமைதியைத் தெய்வத் திருச்சன்னிதிகூட அளிக்கவில்லையே!

''உனக்கு இவ்வளவு கல்நெஞ்சா, அண்ணா? கார்த்திகேயன் உன்னுடைய குழந்தை இல்லையா? என் குலவிளக்கு 'இவன்' என்று கொஞ்சி மகிழ்வாயே!''

சிந்தாமணி தலையைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்து விட்டார், தட்சிணாமூர்த்தியின் சன்னிதியிலேயே.

'அண்ணா நீ? கொலைகாரா, என் குழந்தையைக் கொன்று விட்டாயே பாவி. என் குலவிளக்கை அணைத்து விட்டுக் கோவிலில் லட்சதீபம் ஏற்றி என்ன பலன்? உன்னைத் தெய்வம் சும்மா விடுமா?'

ஜானகி தலைவிரிகோலமாக அழுது கூத்தாடினள் அவர் நினைவில்; அவர் மண்டை வெடித்து விடும் போலிருந்தது.

வழி முழுவதும் ஆச்சரியத்துடன் நின்று பார்ப்பவர்களைச் சிறிதும் சட்டை செய்யாமல் ஓடி வந்தவரை உள்ளே நுழைய விடாமல் தடுத்தது தன்மானம். 'ஏன் வந்தாய்?' என்று அந்த மனிதன், மாப்பிள்ளை மகாமேரு கேட்டு விட்டால்?..

ஆனால் பாசம் எண்ணத்தைவிட மேலோங்கி நின்றது. எனவே ஜானகியின் வீட்டுக்குள் நுழைந்தார்.

''டாக்டர், எப்படியாவது என் குழந்தையைக் காப்பாற்றுங்கள், டாக்டர்!'' என்று அழுது அரற்றினள் ஜானகி.

''இரண்டு இன்ஜெக்ஷன் போட வேண்டும். நூறு ரூபாயாகும்.''

''இந்தாருங்கள், டாக்டர். பணத்துக்குப் பதில் இதை வாங்கிக் கொள்ளுங்கள். நூறு ரூபாய்க்குக் குறையாது. எடுத்துக் கொண்டு சீக்கிரம் ஊசி போடுங்கள்'' என்று கூறி விட்டுப் பெட்டியைத் திறந்து ஓங்கி உயர்ந்த ஒரு வெள்ளிக் குத்துவிளக்கை எடுத்து அவர் காலடியில் வைத்தாள்.

'' ஜானகி! சற்றுப் பேசாமலிரு '' என்று அதட்டிய விஜயம், பர்ஸிலிருந்து புத்தம் புதிய பச்சை நோட்டு ஒன்றை நீட்டியபடி, ''டாக்டர்! பணத்தைப்பற்றிக் கவலை இல்லை. குழந்தையை நீங்கள் பிழைக்க வைத்தால் போதும்'' என்று கூறினன்.

விஜயம் நூறு ரூபாய் நோட்டை நீட்டினதைக் கண்டு ஜானகியின் உள்ளம் நன்றியால்

நிறைந்தது. கண்கள் கலங்க அப்படியே அயர்ந்து விட்டாள். "ஜானகி! இங்கே வா!" என்று கூறிவிட்டு, சமையலறையில் புகுந்து எண்ணெய் எடுத்து வந்து திரியிட்டு விளக்கேற்றினாள் விஜயம். "அழாதே, ஜானகி! குழந்தை பிழைத்துக் கொள்வான். எழுந்து நெற்றிக்கு இட்டுக்கொண்டு சுவாமிக்கு நமஸ்காரம் செய்" என்றாள்.

"மன்னி! என் வீட்டில் அணைய இருந்த விளக்கைக் காத்த நீ என் தெய்வமில்லையா?"

"உண்மையான பேச்சு. நீங்களே எங்கள் தெய்வம். ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருந்த எனக்கு ஜானகியின் தந்திகிடைக்கவே இல்லை. நிலையான, நல்ல வேலை கிடைத்து விட்டது. நம் கஷ்டம் தீர்ந்தது என்று ஜானகியிடம் சொல்ல வேண்டும் என்று வேகமாக ரயிலடியிலிருந்து வந்து கொண்டிருந்த வனைத் தடுத்து நிறுத்தி டாக்டர் எல்லா விஷயங்களும் சொன்னார். எதையும் மனத்தில் வைக்காது, என்னை மன்னித்துக் குழந்தையைக் காத்த உங்கள் பெருந்தன்மைக்கு முன் நான் வெறும் குப்பை..." என்றார், மைத்துனரை அணைத்தபடியே உள்ளே புகுந்த மாப்பிள்ளை, கண்ணீர் பெருக.

விஜயம் ஏற்றிய விளக்கொளியின் தெளிவிலே முருகன் படத்தில் பதித்திருந்த சிவப்புக் கற்களிலிருந்து செவ்வொளி பெருகிச் சிதறியது. மாப்பிள்ளையும் மைத்துனரும் இணைந்த கோலத்தில் வரக்கண்டு ஷண்முகப் பெருமான் கலீரென்று சிரிப்பது போலிருந்தது.




**காந்தன்**

ஸ்ராத்துப் புரமெரித்த சிவபெருமானும், அன்னை பராசக்தியும் நடனம் புரிகின்றனர். இறைவனே வெற்றி பெறுகிறான். இறைவி நாணித் தலை குனிகிறாள். தாண்டவ மூர்த்தியின் நடனத்தில் மழையும், புயலும் உண்டாகின்றன. அத்துடன் காத்தவராயன் கதையும் தோன்றுகிறது. சிவ பரஞ்சுடரின் சீற்றத்துக்கு ஆளான சக்தியும் அவள் மகன் வீரபாகுவும் பூவுலகில் அவதரிக்கின்றனர்.

கோபிகிருஷ்ணனும் கமலா லக்ஷ்மணனும் அற்புதமாக ஆடுகின்றனர். அந்த நடனத்தில் ஒலித்த லயமும், இன்னிசையும் துரித கதியில் இயங்கிப் படம் பார்ப்பவரின் உணர்வையும் துரித கதியில் ஆட்டிவைக்கின்றன. வான வீதியில் நடைபெறும் அந்தக் காட்சி மிகவும் நன்ருகப் படமாக்கப்பட்டிருக்கிறது. ஆரம்பக் காட்சி மனத்தில் நிரந்தரமாக இடம் பெற்று விட்டது.

மிகவும் பண்டைக் காலத்துக் கதை. ஏற்கனவே பி. யூ. சின்னப்பாவைக் கதாநாயகனுகக் கொண்டு ''ஆர்யமாலா'' வெளி வந்து பட உலகிலும் பிரசித்தி பெற்றிருக்கிறது. பி. யூ. சின்னப்பாவின் ஆரவார நடிப்புக்கேற்ற கதை. இப்பொழுது கதைப் பகுதியில் சில மாறுதல்களுடன் சிவாஜி கணேசனைக் கதாநாயகனுகக் கொண்டு மீண்டும் வெளி விடப்பட்டிருக்கிறது.

யானையோடு பிணைத்துக் குற்றவாளியை இழுத்துச்செல்லல், நகரத்தைத் தீக்கிரையாக்கல், மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் நொறுங்கி விழுதல், நகரத்து மக்களெல்லாம் அல்லோல கல்லோலம் அடைந்து அவதியுற்று அழிதல், இவைகளை யெல்லாம் பார்த்துக் காத்தவராயன் பேய்ச் சிரிப்பு சிரித்தல் — இவைதான் கதைப் பகுதியின் சாராம்சம். காத்தவராயன் காதல் கொண்ட மங்கை இளவரசியாயிருந்ததுதான் யாவற்றுக்கும் காரணம்.

மேற்கூறிய அம்சங்களுக்காகத்தான் சிவாஜி கணேசன் இந்தப் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டிருப்பார் என்று நினைக்கிறேன். ''காத்தவராயன்'' படத்தை ஆர். ஆர். பிக்சர்ஸார் மக்கள் ஆர்வத்தைத் தூண்டும் விதத்தில் வருஷக்கணக்காகத் தயாரித்தனர். ஆகவே அது மக்கள் விரும்பும் மகத்தான படம் ஆகிவிட்டது. பிரபல நட்சத்திரங்களைப் போட்டுப் படம் தயாரிக்கும்போது அதில் நீண்ட நாள் தாமதம் ஏற்பட்டால் மக்கள் ஆர்வம் காட்டுவது இயல்புதானே!

இப்பொழுதெல்லாம் படாதிபதிகள் தங்கள் தயாரிப்பில் ஒரு புது முறையைக் கையாளுகின்றனர். ஏற்கனவே ஒரு முறை படமாக வந்து வெற்றி பெற்ற கதைகளை மீண்டும் சில மாறுதல்களுடன் படமாக்குகின்றனர். ஆனல் அவைகளைப் பழையன என்று கழிக்க முடிவதில்லை; புதியன என்று போற்றிப் புகழவும் முடிவதில்லை.

''காத்தவராயன்'' படத்தில் நடிப்புக்கு நிறையமார்க்கு பெறக் கூடியவர் டி. எஸ். பாலையாதான். ஆரம்பம் முதல் கடைசிவரையில் குறை சொல்வதற்கு இடம் இல்லாமல் 'ஜாம்' 'ஜாம்' என்று நடித்திருக்கிறார்.

பாலையா இந்தப் படத்தில் மலையாள மந்திரவாதியாக வருகிறார். அவரது நடை,

உடை, பாவனை, பேச்சு எல்லாம் தரம் குறையாமல் இருக்கின்றன. மந்திரத் திறமையினால் காத்தவராயனை, வெல்ல முயன்ற இடத்தில் பாலையாவின் நடிப்பு உயர்ந்து விட்டது. அவருக்குப் பக்கத் துணையாக வரும் எம். என். ராஜமும் மலையாளப் பெண் மணிமாதிரியே தோன்றி, ஆடிப் பாடி நன்றாய் நடித்திருக்கிறார்.

அவர்களுடன் தோன்றும் சந்திரபாபுவின் நடிப்பு மிகவும் நன்றா யிருக்கிறது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் சேனாபதியையும் அவனுடைய வீரர்களையும் தோல்வியுறச் செய்து விட்டில் சிறைப் பிடித்த போது சந்திரபாபுவின் சாகஸங்கள் அபாரமா யிருக்கின்றன. நடிப்புக் கலையில் அவருக்குள்ள திறமையும் நன்கு வெளிப்படுகிறது.



தங்கவேலு சேனாபதியாக வருகிறார். ஒரு ராஜ்யத்தின் சேனாபதியை அவ்வளவு மோசமாக, உபயோகமற்றவனாகக் காட்டி, கேலிக் கூத்து அடித்திருக்க வேண்டாம்.

சிவாஜி கணேசனின் சிறப்பு இயல்புகளெல்லாம் நன்கு வெளிப்படும் பாத்திரம் காத்தவராயன். அந்தப் பாத்திரம் அவருக்கு வீரத்தையும் தீரத்தையும், சூரத்தனமான செயல்களைச் செய்யும் ஆவேசத்தையும் நிறையக் கொடுக்கிறது. பல பாகங்களில் வந்து திறமையைக் காட்டவும், ஆர்யமாலாவைக் காதலிக்கவும், அந்தக் காதல் காரணமாக அமரத்துவம் அடையவும் சந்தர்ப்பங்கள் கிட்டுகின்றன. காதலில் தோல்வியுற்ற ஆவேச வெறியில் காத்தவராயன் நகரத்தையும், நகரமக்களையும் அதம் செய்கிறான். தன்னுடைய தெய்விக சக்திகளையெல்லாம் உபயோகிக்கிறான். கடைசியில் தாயாருடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டுப் பொங்கிவந்த சீற்றம் தணிந்து அமைதியுடன் ராஜ தண்டனையை ஏற்கிறான்.

இந்தப் பாத்திரத்தை ஏற்று நடிக்க சிவாஜி கணேசனைத் தவிர வேறு யாரும் இல்லை என்று சொல்லும் வண்ணம் அபாரமாக நடிக்கிறார். பற்றி எரியும் நகரத்தைப் பார்த்துப் பேய்ச் சிரிப்பு சிரிக்கும்போதும் அன்னையின் வாக்குக்குக் கட்டுப்பட்டுச் சீற்றம் தணிந்தபோதும், ராஜ தண்டனையை ஏற்று யானையுடன் பிணைக்கப்பட்டுத் தெருவில் இழுத்துச் செல்லப்பட்ட போதும் அவரது நடிப்பு சிகரத்தில் நிற்கிறது.

ஆர்யமாலாவாக வரும் சாவித்திரிக்குக் காத்தவராயனைக் கண்டதும் காதல் கொள்ளவும், கொண்ட காதலினால் துன்பப்படவும், இறுதியில் காதலனுடன் பொன்னுலகம் புகவும் பாக்கியம் கிட்டுகிறது. காதல் காட்சிகளில் சிவாஜி கணேசனும் சாவித்திரியும் நன்றாய் நடித்திருக்கிறார்கள் என்று தனித்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. அது அவர்களுக்குச் சர்வசாதாரண விஷயம்.

தன் தந்தையின் கோபத்துக்கு ஆளாகிச் சிறைப்பட்டுக் கண்ணை இழக்கும் நிலையில் இருந்த காதலன் காத்தவராயனுக்காக மன்றாடிக் கத்தியால் குத்திக்கொண்டு கீழே குற்றுயிராய் விழுந்த போதும், கடைசியில் காத்தவராயனுடன் பொன்னுலகம் புகுந்தபோதும் சாவித்திரியின் நடிப்பு குன்றில் இட்ட விளக்கென ஒளிவிட்டு மின்னுகிறது.

காத்தவராயனின் தாயாராக வருபவர் கண்ணாம்பா. ''மனோகரா'' வுக்குப் பிறகு இந்தப் படத்தில் தான் கண்ணாம்பாவுக்கும் வீர வாசகங்களை ராஜ சபையில் 'பொல பொல' வென்று உதிர்க்கச் சந்தர்ப்பம் சரியானபடி கிட்டியிருக்கிறது. கிடைத்த சந்தர்ப்பத்தை அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டு வெளுத்து வாங்கி விட்டார்!

இப்படத்தின் இடையில், உயிர்க்களையை உயர்த்திக் காட்டும் ஒரு நடன நிகழ்ச்சி வருகிறது. அதுதான் 'கோழி நடனம்.' மிகவும் திறமையாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. சிறிது நேரமேயானாலும் அந்த நடனம் என் மனசில் நன்கு பதிந்து விட்டது.

''காத்தவராயன்'' படம் பார்க்கிறவர்கள் நல்ல நடிப்புக்காகச் சந்தோஷப் படலாம். காட்சி ஜோடனைகள், புறக்காட்சிகள் இவற்றின் சிறப்புக்காகவும் திருப்திப் படலாம். காத்தவராயனுடைய சீற்றத்தினால் சீரழிந்து போன கோட்டை கொத்தளங்களையும், கடைசியில் சந்தித்து, ஆவி பிரிந்து அமரர்களான காதலர்களையும் காட்டும் காட்சி மிகவும் நன்றாகப் படமாக்கப்பட்டிருக்கிறது. படத்தின் ஆரம்பக் காட்சியான சிவசக்தி தாண்டவமும், இந்த இறுதிக் காட்சியும் படத்தின் உயிர் நாடிகளாக விளங்குகின்றன. இவைகளையெல்லாம் நல்ல முறையில் செய்திருக்கும் டைரக்டர் ராமண்ணா பாராட்டுக்குரியவர் என்பதில் ஐயமில்லை.

ஆனால் இத்தனை உத்திகளும், நல்ல காட்சிகளும், திறமையான டைரக்ஷனும் வேறு ஒரு புதிய கதைக்குக் கிடைத்திருந்தால் பொது மக்களின் ஏகோபித்த பாராட்டு கிடைத்திருக்கும். இந்தப் படம் எத்தனை உயர்வாயிருந்தாலும் ரொம்பப் பழைய வாடை வீசுகிறதல்லவா? ஒடிந்து போன பழைய குடைக் காம்புக்குப் புதிய துணி போட்டுத் தைத்தது போல் இருக்கிறது படம்.

ஸ்ரீ சக்தி மில்ஸ்

ஸ்ரீ மற்றும் ஸ்ரீமதி......... நகரவாசிகளை.........

அவர்கள் விரும்பும் சில்கு கடைகளுக்கு வரவழைக்கிறோம். அங்கு
காட்சிக்காக வைக்கப்பட்டிருக்கும் பல வர்ணங்களடங்கிய சிறந்த சக்தி
சில்குகள் உங்களுக்கு மீண்டும் உற்சாகமளிக்கிறது. அச்சிடப்பட்ட
நவீன டிசைன்களிலும், ப்ளாக் ப்ரிண்டுகள் மற்றும் சைனீஸ்
ப்ராக்கேடுகள், சம்பிரமமான ஏழு வர்ணங்களில் கிடைக்கின்றன.
உங்களைப் பரவசப்படுத்துவதும், பெருமையுடன் திகழச்செய்வதுமான
சில்குகளை நீங்கள் பார்க்கிறீர்கள். இந்த சில்குகள்,
எல்லோருக்கும் எச்சந்தர்ப்பத்திற்கும் ஏற்றது. சக்தி சில்குகள்,
அருமையான நூலிழைகளால், இந்தியாவில்
உள்ள மிகப் பெரிய சில்கு மில்களில் தயாரிக்கப்படுகிறது



## சக்தி சில்குகளை உபயோகித்து விசேஷ தினங்களை கொண்டாடுங்கள்

# சக்தி சில்குகள்

ஓர் போதார் தயாரிப்பு

ஜார்ஜட் . க்ரேப்ஸ் . ஸாட்டின் . டபேடா . நைலான்

முதலிய ரகங்கள் கிடைக்கும்.

ஸ்ரீ சக்தி மில்ஸ் லிமிடெட், பம்பாய்

# நரஸு காபி

அருந்தி அதன்

பிரத்யேகமான ருசியை

அனுபவியுங்கள்



நரஸுஸ் மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.,
சேலம் & சென்னை

NCZ-2J ATM



# தசை வலியா?

# நோபெயின்

வலியை வேகமாக
நிவர்த்திக்கிறது




சுகாதாரமான சீலடைத்த
டியூபுகளில்

ஒரு கல்கத்தா கெமிகல் தயாரிப்பு

நோபின் புதிய ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க் விரைவில் அறிமுகப்படுத்தப்படும்

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

ஆவணத்தாங்கோட்டை ராக்காச்சி அம்மன் கோயில் முகப்பில் திருநாள் கூட்டம் நெரிந்தது. சிதறு காய்க் காணிக்கையை ஏற்கும் வெள்ளைப் பாளுங்கல்லுக்குப் பக்கத்திலிருந்த பெரிய வேப்ப மரத்தின் மீதுதான் அத்தனை கண்களும் மொய்த்திருந்தன.

“சத்தம் காட்டாதீங்க! அதோ, வந்திட்டாங்க கோயில் அடிமைக்காரங்க!” என்றனர் கூட்டத்தில் பலர்.

காப்புக்கட்டுத் திருநாள் தொடங்கி வைத்து, தேரோட்டம் முடித்து வைத்த பத்துநாள் விழாக்களும் காற்றாய்ப் பறந்து அன்றுடன் நாட்கள் எத்தனையோ கழிந்து விட்டன. ராக்காச்சி அம்மன் குல தெய்வமாக இலங்கிய வீடுகள் அவ்வூரில் அனந்தம். கோயிலுக்கு உடைமைக்காரர்கள் ஆறுகரைத் தலைக்கட்டுக்காரர்கள். அவர்களுக்குத் தலைமை கங்காணி. அக்கரைச் சீமை

# ராக்காச்சி



## பூவை

நுவரெலியாவில் தேயிலைத் தோட்டம் சேகரித்துக் கொடுத்த பட்டம் அது. கங்காணி என்றால்தான் எல்லோருக்கும் விளங்கும். முத்துச்சாமி சேர்வை என்றால், சீக்கிரம் பெயரும் நபரும் பொது மக்களுக்குப் பிடிபட மாட்டாது.

வில் வண்டியினின்று கீழே இறங்கினார் கங்காணி. இலங்கைச் சீமை அளித்திருந்த உடலுரம் இன்னமும் அவர் உடம்பில் தேங்கியிருந்தது. கையில் வைத்திருந்த ஜரிகைத் துப்பட்டாவைக் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண்டு வெள்ளிப் பூண் இட்ட கைத்தடியைச் சுற்றியவாறு ராஜநடை பயின்று வந்தார். கைகூப்பப்பட்ட அன்புக்கு மரியாதை செலுத்தினார் கங்காணி. தாயின்

சந்நிதியில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து எழுந்தார்.

ஆறுகரைக்காரர்கள் புடைசூழ விசுப் பலகையில் வீற்றிருந்த கங்காணி கூட்டத்தை ஒருமுறை நோட்டம் செலுத்தினர். 'ஆ! பலே! அதோ இருக்கான் வீரப்பன்! எங்கே கோவிந்தன்? சபாஷ்! அதோ நிற்கிறனே அவன்!'

★

பூந்நாள் இரவுக் காட்சி ஏடு விரிந்தது. காற்றும் மழையும் கலந்தடித்தன. ஊர் திமிலோகப்பட்டது. இரவு பத்து நாழிகைப் பொழுதுக்கு மேலே இந்தக் கூத்து. இயற்கை அன்னையின் தெய்வத் திருவிளையாடலுக்கு நேரம் உண்டா? காலம் உண்டா?

ஊரின் கிழக்குக் கோடியில் எல்லை சொல்லிக் காவல் நின்ற ராக்காச்சி கோயிலைச் சுற்றிப் பார்த்த கங்காணி சற்றுத் தொலை நடந்தார். அவருடன் இரண்டு ஆட்களும் சென்றனர். செல்லத் தேவன் கண்மாயில் செம்மண் கக்கிப் புதுப்புனல் வெள்ளமாக வடிந்துகொண்டிருந்தது. அதற்குத் தெற்குப் பாரிசமாக நின்ற பெரிய வேப்ப மரத்தைத் தேடினர். காணோம்! உன்னிப்புடன் பார்த்தபோது, மின்னல்வெட்டு அவருக்குக் கை கொடுத்தது. நிலைகுப்புறச் சாய்ந்து கிடந்தது அந்த மரம்! அம்மனுக்குச் சொந்தமான சொத்துக்களில் அதுவும் சேர்ந்தது. "ஏலே மூக்கா! கருக்கலோட நம்ப மொட்டை வண்டியை ஓட்டியாந்து இந்த வேப்ப மரத்தை ஏத்திக்கிட்டுப் போய்க் கோயில் வாசலில் போட்டுப்பிடு! கறுப்பா, நீயும் அவனுக்கு ஒத்தாசை செய்ய வேணும்!" என்று அவர் இதமாகப் பேசி வாய் மூடவில்லை; கூப்பிடு தொலைவிலிருந்து ஏதோ பேச்சொலி காதுகளைத் தொட்டதை உணர்ந்தார். உடன் வந்தவர்களை அங்கேயே நிறுத்திவிட்டு ஒன்றியாக அவர் நடந்தார். ஈச்சஞ்செடிப் பத்தைகளுக்குள் கைவிளக்கை அடித்துப் பார்த்துவிட்டு மறைவாக உட்கார்ந்தார்.

இரு குரல்கள் எழும்பின.

"கோவிந்தா! ஒரு நாளிகையாய்ப் படிச்சுச் சொல்லுறேன். நீ என் சோலிக்கு வந்தியானு, அப்பாலே உன் உசிரு உன்னோடஇல்லே! எனக்குச் சேர வேண்டிய செல்வியைத் தான் அடிச்சுப் பறிச்சுக்கிட்டே! இப்ப இந்த ஆத்தாளோட சொத்தையும் கொண்டு போகப் பார்க்கிறயா!"

"டே வீரப்பா! உன் பயமுறுத்தலெல்லாம் எங்கிட்டச் சாயாது. இது பணங்காட்டு நரியாக்கும்! நானே பெரிய எத்தன்! எங்கிட்டே நீ போட்டிக்கு வந்தால், வெல்ல முடியுமா? ராக்காச்சி சொத்து இது. இந்த வேப்ப மரம் எனக்குத்தான் சொந்தம்!"

"யாரு முன்னாடி வந்தது?"

"இல்லே, நான்தான்!"

அருகில் நின்றுகொண்டிருந்த இரண்டு மொட்டை வண்டிகளை மின்னல் காட்டியது. பேச்சினூடே வண்டிகள் ஊர்ந்தன. வீழ்ந்து கிடந்த வேப்பமரத்தைத் தூக்கிப் புரட்ட எத்தனிக்கையில், இரு வகைப்பட்ட சீழ்க்கை ஒலி விண்ணில் பறந்தது. வகைக்கு நால்வராக ஆட்கள் கிளம்பி எழுந்தனர்!

"வீரப்பா! டே! மரத்தைத் தொட்டே உன் எலும்பை முறிச்சுப்பிடுவேன்!"

"டேய் கோவிந்தப் பயலே! நீ இங்கிருந்து எட்டிப் போடா!"

கைகலப்பு ஆரம்பித்தது.

கங்காணி ஓட்டமாக ஓடினர். கூட வந்தவர்களும் ஜாடை தெரிந்துகொண்டு ஓடினர்கள்.

கைவிளக்கின் ஒளியில் வீரப்பனும் கோவிந்தனும் துலாம்பரமாகத் 'தரிசனம்' அளித்தார்கள்.

"ஏலே கறுப்பா! நீ மரத்துக்குக் காவலிரு! மூக்கா, நீ இப்பவே வண்டி கொண்டாந்து இம் மரத்தைக் கொண்டு போய் ஆத்தா சந்நிதியிலே இறக்கிப்பிடு. அப்புறம் இவங்க ரெண்டுபேரிலே யாருக்குத்தான் ராக்காச்சி சொத்திலே கை வைக்கிறதுக்குத் தெம்பு வருதுன்னு பார்க்கலாம்!" என்று எச்சரித்துவிட்டு ஆத்திரத்துடன் மறைந்தார் கங்காணி!

★

கங்காணி ஊர் மக்களை ஒருமுறை சூழ நோக்கினர். "ஏலம் போட ஆரம்பிக்கலாமா?" என்றார்.

கூட்டம் "ம்!" கொட்டியது.

ராக்காச்சி அம்மனுக்குச் சொந்தமான வேப்பமரம் ஏலத்துக்கு விடப்படுமென்ற செய்தி தமுக்கு மூலம் அறிவிக்கப்பட வேண்டுமென்று உத்தரவிட்ட கங்காணியின் குரல் அந்தப் பொதுக் குரலின் 'ம்' ஒலியில் எதிரொலித்தது. அவர் எழுந்தார்.

"ராக்காச்சிக்கு உடைமையானது இந்த வேப்ப மரம். நேற்று ராத்திரி அடிச்ச புயலிலே விழுந்திருச்சு! இந்த மரத்தை ஏலம் போடப் போறேன். இதிலே கிடைக்கிற பணம் ஆத்தாளுடைய உண்டியலில் போடப்படும். ஆனபடியால், தேவைப்படுகிறவர்கள் துணிந்து கேட்கலாம். போன வருசம் அம்பாள் பிரசாதமான எலுமிச்சம் பழம் நூறு ரூபாய்க்கு ஏலம் போன

தென்பதை உங்களிலே யார்தான் அதற்குள் மறந்திருக்க முடியும்? தாயே! எல்லாம் உன் சொத்து! ம்...! இந்தப் பெரிய வேப்பமரம் விலை காலணா! ம்...கேள்விகள் எழும்பலாம்!" என்றார்.

ஆறுகரைப்புள்ளிகளுடன் தலைமையாளரும் கூட்டத்தைப் பிளந்து பார்வையைச் செலுத்தினார். எங்கும் ஒரே அமைதி. ஊசி விழுந்தால் ஒலி எழும்பும் என்பார்களல்லவா? அப்படிப்பட்ட நிசப்தம்! காவல் நின்ற முன்னடியான்—சன்னாசி தெய்வங்கள் போல் மௌனச் சிலைகளாயினர்.



திருவல்லிக்கேணி அமெச்சூர் ஆர்ட்ஸ் குழுவினர் 12—10—58ல் திரு ஆர். எஸ். மணி எழுதிய 'பெண்களே உலகத்தின் கண்கள்' என்ற தமிழ் நாடகத்தை எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் சிறப்பாக நடத்தினர். அந்த நாடகத்தில் வரும் ஒரு ரஸமான கட்டத்தை இந்தப் படத்தில் காணலாம்.

திடீரென்று புதிய குரல் புறப்பட்டது.

"இருபத்தஞ்சு ரூவா!" என்று ஏலம் கேட்டான் கோவிந்தன்.

"அம்பது!" என்று உயர்த்தினான் வீரப்பன்.

"எழுபத்தஞ்சு!" — இது கோவிந்தனுடைய கேள்வி.

"நூறு!"—வீரப்பன்!

கங்காணிக்குத் திகைப்பு வளரத் தொடங்கியது. இலேசான நமட்டுச் சிரிப்பு உதடுகளிடைப் பிறந்து அடர்ந்த மீசைக்கிடையில் ஒதுங்கியது. இரவு கண்ட வீரப்பன்—கோவிந்தன் சண்டை அவர் மனத்திரையில் சித்திரமாக உயிர் பெற்றது. அந்தப் பூசலின் பின்புலத்தே அமைந்த இவ்விருவரின் குறிக்கோளும் அக் குறிக்கோளை மூடி மறைத்துக் கொண்டிருந்த காதல் போட்டியும் நிழலாடின. **குறிக்கோள்:** வீரப்பனும் கோவிந்தனும் கரி வியாபாரம் செய்யத் தொடங்கியிருந்தார்கள். மரங்களை மொத்தமாக வாங்கி, அவற்றைத் துண்டாடி, காளவாய் வைத்துச் சுட்டுக் கரியாக்கி மூட்டை கட்டி அறந்தாங்கியில் விற்று வந்தனர். இருவருக்குள்ளும் வியாபாரப் போட்டி. அம்பிகைக்குரித்தான வேப்ப மரத்தை யாரும் அறியாமல் தான் களவாடினால், பொட்டலில் கிடைக்கும் விளாம்பழம் போன்று இருபது, இருபத்தைந்து பணம் கிடைக்குமென்ற பேராசை கோவிந்தனுக்கு மண்டையில் ஏறிக் கிடந்தது. இதே நிலை வீரப்பனையும்தான் ஆட்டிப் படைத்தது.

**காதல் போட்டி:** ஆம்; செல்வி ஒரு காட்டு ரோஜா. ரோஜாவை அடைய அவ்வூரின் இளம் ராஜாக்களாக உலவி வந்த கோவிந்தனும் வீரப்பனும் போட்டியிட்டனர். கோவிந்தனிடம் இருந்த வெள்ளி நாணயங்கள் செல்வியின் இணக்கத்தைப் பெற உதவின. அவள் அவனுக்குக் கிடைத்து விட்டாள்! ஆகவே, கோவிந்தன் ஜன்மப் பகையாளியாக வீரப்பனின் பார்வையில் மதிப்புப் பெற்றதில் விந்தை ஏதும் கிடையாதுதானே!

கங்காணி சுய நினைவு அடையலானார்.

"நூத்திப் பத்து!..." என்பது கோவிந்தன் கேட்ட தொகை.

"நூத்தி இருபத்தஞ்சு!" என்று மேலும் உயர்த்தினான் வீரப்பன்.

"பதினைந்து ரூபாய்கூடத் தாளாத வேப்ப மரத்துக்கா இவ்வளவு பணம்?"—மூக்கில் விரல் வைத்தது ஊர்.

வீரப்பன்—கோவிந்தன் 'ஜோடி'யைக் கங்காணி ஆழ்ந்து நோக்கினார்; உடனே குறுக்கிட்டார்!

"ஏப்பா, வீரப்பா! பூராப் பணமும் கையோட கொண்டாந்திருக்கியா?"

வீரப்பன் வாயசைப்பதற்குள் வேறொரு குரல் கூட்டத்தை நெட்டித் தள்ளிப் பாய்ந்தது. "எம்புருசன் கிட்டப் பணம் இல்லீங்க, கங்காணி ஐயா!..." என்றாள் அஞ்சலை. அவள் அவனுக்கு வாழ்க்கைப்பட்டவள்.

வீரப்பனின் விழிகளிலே கோவைப் பழங்கள் தோல் உரிந்து சுழன்றன.

"ம்...! தயவுசெஞ்சு இரைச்சல் செய்யாதீங்க!...ஏப்பா கோவிந்தா!... நீயாச்சும் ஏலம் கேட்ட தொகையைக் கைக்கு மெய்யாக வைச்சிருக்கிறியா?... நீயே மரத்தை அடைஞ்சுக்கிடலாம்! ம்!

எல்லாமே வேடிக்கையாகத் தான் தோணுது !''

''ஐயா ! எங்க மச்சான் கிட்டே பணம் கிடையாதுங்க !''

கோவிந்தன் முடிந்த மூன்று முடிச்சுக் களை ஏந்திய செல்விதான் இவ்வாறு குரல் கொடுத்தாள்.

கோவிந்தனின் ஆத்திரப் பார்வை அவனுடைய துணையைச் சுட்டது.

கங்காணி முத்துச்சாமி சேர்வை 'கடகட' வென்று சிரித்தார். ''ஆத்தா விளையாட்டுக்கு முன்னடி நம்பளெல்லாம் எம்மாத்திரம்?...ம், சரி! வேறே யாராகி லும் மேற்கொண்டு கேள்வி கேட்கிறதா னல், கேட்கலாம்! ஒன்று !...இரண்டு!... மூன்று!...'' யாரும் எதிர்க் கேள்வி கேட்க வில்லையே ! கோவிந்தன் எங்கே ? வீரப்பனையும் காணோம்!...

''பூசாரி ஐயா ! இந்தாங்க, நூற்றி இருபத்தஞ்சு ரூபாய்!... ராக்காச்சிக்குச் சேரவேண்டிய பணத்தை ஆத்தாளோட உண்டியலிலே செலுத்திப்பிடுங்க !...ஏய் மூக்கா!... அப்புறம் இந்த மரத்தை நம்ப வீட்டுக்குக் கொண்டாந்திடு !'' என்றார் கங்காணி, அமைதி கனிந்த குரலிலே.

''ஏ, செல்வி ! நான்தான் மடியிலே நூத்திருபது ரூபாய் வரைக்கும் கட்டி வைச்சிருந்தேனே, நீ ஏன் அப்படிச் சொன்னியாம் அம்மாஞ் சனங்களுக்கு ஊடாலே ?''

செல்வியின் வீங்கிய கன்னங்களில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

''மச்சான்! ஒங்களுக்குச் சேதி தெரி யாதா ?...நம்ப செவலைக்காளை நேத்து மழையிலே மடத்துக் குளத்துச் சகதியிலே ஆப்பிட்டுத் தவிச்சப்ப, அஞ்சலை வீட்டுக்காரருதான் வந்து காப்பாத்தினுங்களாம் !...

''மெய்யாவா?''என்றான் கோவிந்தன்.

''ஆமாங்க, மச்சான்! போட்டியும் பூச லும் மறையட்டுமே, நம்பளாவது விட்டுக் கொடுக்கலாமேங்கிறதுக்குத் தான் நான் அப்படிச் சொன்னேனுங்க!.. இதிலே உங்களுக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லீங்க !'' என்றாள்.

''ஹாஹ்! இன்னும் நல்லா அடிங்க ஒதைங்க!...செல்வி புருசன்தான் முந்தா நாள் நமக்குப் பெரிய ஒத்தாசை செஞ்சாங்களாம் ! ராவுலே களவாணிப் பயல் வந்து நம்ப கடலைப் போரிலே கையை வைக்கறப்போ அந்த ஆம்பளை தான் வந்து அவனைத் தூரத்தியடிச் சாங்களாம் ! அப்படிப்பட்ட ஒசந்த மனசு கொண்ட ஆளுக்கு எதிராக நம்ப ஏதுக்கு நிற்கணும்னுதான் நான் அப் படிச் சொன்னேன் !...'' அஞ்சலை விம்மி னள். வீரப்பன் ஒன்றும் பேசத் தோன் ருமல் சிலையானன்.

கங்காணி தம் பெரிய வீட்டின் முற்றத்தில் உட்கார்ந்திருந்தார் ; குறிச்சி அவரைச் சுமந்து பெருமை கொண்டது.

''கும்பிடுறோமுங்க !''

ஒரே மாதிரியாக இரட்டைக் குரல்கள் பேசின. ''இப்ப நாங்க ரெண்டு பேரும் பகைவர்கள் இல்லே; நான் இந்த அண்ண னுக்கு உதவி செஞ்சதாகவும், இவர் எனக்கு ஒத்தாசை பண்ணினதாகவும் எங்க வீட்டுக்கார பொம்பளைங்ககிட்டே தனித்தனியாகச் சொல்லி எங்க விரோ தத்தை மாற்றப் பிரயத்தனப்பட்டிருக் கிங்க நீங்க! உங்க 'பொய்' எங்களை மெய்யாலே ஒன்னு சேர்த்திடுச்சுங்க. தேவரய்யா !...நாங்க ரெண்டு பேரும் போட்டி போட்டு ராக்காச்சி அம்மன் சொத்தைத் திருட எத்தனிச்ச சங்கதியைக் கடைசி வரைக்கும் ஊர்க் காதிலே போடாமல் இருந்து, எங்களை யும் எங்க மானத்தையும் காப்பாற்றின உங்களை எங்க உயிருள்ள மட்டும் மறக்கவே மாட்டோம் !...

கோவிந்தனும் வீரப்பனும் விழுந்து வணங்கி எழுந்தார்கள். வழிந்த கண்ணீர் வழிந்து கொண்டேயிருந்தது !

உணர்ச்சி வயப்பட்டு நின்று கொண் டிருந்த செல்வியையும் அஞ்சலையையும் கண்டதும் கங்காணியின் விழிகளும் கலங்கி விட்டன; இதழ்கள் விலகின.

''செல்வி, அஞ்சலி ! உங்க எண்ணம் போலவே எல்லாம் நல்லபடியாக முடிஞ்சுது!...வீரப்பா, கோவிந்தா !... எல்லாம் நம்ப குலதெய்வத்தின் கிருபா கடாட்சம்தான் !...அன்பு பாராட் டிறதிலேதான் ஒவ்வொரு மனிதனும் உயர வேணும் ; அன்பை நாம் இப்போ வாழ வைத்தால், அப்புறம் நாம் இறந்த பின்னாலேயும் அந்த அன்பு நம்மைச் சிரஞ்சீவியாக வாழ வைக்கும் !... இதை மட்டும் யாரும் மறந்திடாதீங்க !... இன்னொரு சேதியையும் காதிலே வாங்கிக்கங்க !...அதோ பாருங்க, நான் அன்றைக்கு ஏலம் எடுத்தகோயில் வேப்ப மரம் இரண்டு துண்டாக் கிடக்குது !... நீங்க ஆளுக்கு ஒண்ணு எடுத்துக்கிடுங்க! உங்களோட 'நல்ல மனமாற்ற'த்துக்கு என் பரிசு !...'' என்று நிறைந்த மனத் துடன் கூறினர் கங்காணி.

ஐந்து ஜோடி விழிகளும் நீரில் மிதந்து கொண்டிருந்த காட்சியைக் கண்ட ராக்காச்சி அம்மன் சிரித்துக் கொண்டே யிருந்தாள் !

# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீரமண விஜயம்

"நானார்" என்னும் திருமந்திரத்தை அண்டினவர்களுக் கெல்லாம் உபதேசித்து நித்திய பரிபூரணானந்த சுயம்பிரகாச நிலைக்கு விளக்கமாகத் திகழ்ந்த நம் காலத்து ஞானி பகவான் ரமணமஹரிஷியின் சரித்திரமும் உபதேசமும் பக்த கோடிகளுக்குப் பயன்படுமாறு முதன் முதலாக முப்பது ஆண்டுகளுக்கு முன்பு வெளியிடப்பட்டது. பலரால் பல வகையாக வெளிவந்ததை யெல்லாம் திரட்டிப் பிழைகளை அகற்றி ஒரே சரித்திரமாக காலஞ் சென்ற ஸ்ரீ நரஸிம்மஸ்வாமி அவர்களால் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது. அதைத் தமிழில் படைக்க விருப்பங்கொண்ட ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் 1934ம் ஆண்டில் நாற்பது அத்தியாயங்களுடன் ஐந்து காண்டங்களாக ஒரு நூலை வெளியிட்டார். இந்நூல்தான் ஸ்ரீரமண விஜயம் நான்கு பதிப்புகள் ஏற்கனவே அச்சாகிச் செலவழிந்து விட்டதிலிருந்து இப் புத்தகத்தின் சிறப்பு தெரியும். இப்போது வெளி வந்துள்ளது ஐந்தாவது பதிப்பு. நான்காம் பதிப்புக்குப் பின்னால் நிகழ்ந்தது ஸ்ரீரமணரின் மஹா நிர்வாணம். அவருடைய கடைசிக் காலங்களும், அவர் மறைவுக்குப் பின் ஆசிரமத்தில் நிகழ்ந்த மாறுதல்களைப் பற்றியும் சின்ன ஸ்வாமிகள் என்று அன்புடன் அழைக்கப்பட்ட சர்வாதிகாரி நிரஞ்சனானந்த ஸ்வாமிகளின் மறைவும் ஆசிரமத்தைப் பற்றிய நிர்வாக அமைப்பும் விவரிக்கும் ஒரு அத்தியாயம் "பிற்பால்" என்னும் தலைப்பின் கீழ் இந்த ஐந்தாம் பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. சரித்திரப் பூர்த்திக்காகச் சேர்க்கப்பட்டிருப்பினும் பகவானின் கடைசிக் கால நிலையை உள்ளம் உருகுமாறு விவரிக்கிறது இந்த அத்தியாயம். சிஷ்யன் என்னும் ஸ்தானத்தில் இருக்கும் ஒரு யோகி குரு பதவியிலுள்ள மற்றொரு யோகியைப் பற்றிச் சரித்திரம் எழுதினால் படிப்பதற்குக் கசக்குமா? சொல் வளமும், யதுகை மோனைகளும் அநாயாசமாகத் ததும்பும் காவிய நடையும் உள்ளத்தில் பொங்கும் பக்திப் பெருக்கும், இப்புத்தகம் பூராவும்பரவி ஓடுகின்றன. சுத்தானந்த பாரதியார் இயற்றியது என்றால் கேட்கவா வேண்டும்? கடைசியாகச் சேர்க்கப்பட்ட ஆறுவது காண்டம் அவரால் எழுதப் படவில்லையானாலும் மற்றப் பாகங்களுடன் இணைந்து ஒன்று போலவே அமைந்திருக்கிறது. ரமண பக்தர்களனைவரும் படித்து மகிழக்கூடிய ஒரு அரிய புத்தகம்.

இயற்றியவர்: ஸ்வாமி சுத்தானந்த பாரதியார்; வெளியிட்டோர் ஸ்ரீ டி. என். வெங்கடராமன், நிர்வாகி—தலைவர், ஸ்ரீரமணாச்ரமம் திருவண்ணாமலை, பக்கம் 348; விலை: ரூ. 3.

## அருணாசல மாஹாத்மியம்

பாடல் பெற்ற புண்ணிய ஸ்தலங்கள் ஒவ்வொன்றுக்கும் நம் நாட்டில் ஒரு தனிப் புராணம் இருக்கிறது. அதேபோல் தேயு லிங்க ஸ்வயம்புவாக எழுந்தருளி நினைத்த மாத்திரத்திலேயே முக்தியளிக்க வல்லது என்று பிரசித்திபெற்ற அருணாசல க்ஷேத்திரத்துக்கும் புராண வரலாறுகள் பல உள. அவற்றில் சில பகுதிகள் ஸ்காந்த புராணத்தில் முதலாவதான மகேச்வர கண்டத்திலும், சிவரஹஸ்யத்தில் உபமன்யு சிவபக்த விலாஸ பகுதியிலும், சிவமஹா புராணம் வித்யேச்வர ஸம்ஹிதையிலும், மற்றும் பல நூல்களிலும் விரிவாகவும் பரவலாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் இவைகள் வடமொழியில் இருக்கின்றன. இதனால் இம்மொழியில் தேர்ச்சியில்லாதார்க்குப் பயன்படாது. இரண்டாவதாக, இவற்றில் சொல்லப்பட்ட விஷயங்கள் பரவலாக இருப்பதால் ஒரே காலத்தில் இத்தலத்தைப் பற்றிய எல்லா விஷயங்களை எளிதில் சாதாரண மக்கள் உணர்வது கஷ்டமாகிறது. எனவே எல்லாப் பகுதிகளிலுமுள்ள விஷயங்களை ஒருங்கே திரட்டி அளிப்பதுடன் மொழிபெயர்த்துத் தமிழில் வழங்கினால் பலருக்கும் பயனளிக்கக் கூடும் என்ற உயரிய நோக்கத்துடன் அருணாசல மாகாத்மியம் என்னும் இந்நூல் வெளியிடப்பட்டிருக்கிறது. சமீப காலம் வரை ஞானப் பிழம்பாய் நம்மிடையே வீற்றிருந்து ஒளி வீசிக் கொண்டிருந்த ஸ்ரீ ரமண பகவானின் கட்டளைக்கிணங்கி அவருடைய காலத்துக்குப் பிறகாவது இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது என்று முகவுரையில் குறிப்பிட்டிருக்கிறது. இது இந்நூலின் பெருமையை உயர்த்திக் காட்டுகிறது.

புத்தகம் ஐந்து பாகங்களாக அமைந்துள்ளது. பிரம்மாவுக்கும் சநகருக்கும் நிகழ்ந்த சம்வாத வடிவமாக உள்ள பூர்வ பாகமும், நந்திகேச்வர மார்க்கண்டேய சம்வாத ரூபமாக உள்ள உத்தரபாகமும் கதைகள் நிறைந்த பாகம். இவைகளை முதல் 31 அத்தியாயங்கள் விரிவாகவே கூறுகின்றன. மொழிபெயர்ப்பு என்பதைக் காட்ட ஆங்காங்கே மூலமாகிய புராண அத்தியாயங்களின் சுலோக எண்ணிக்கைகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஐந்து அத்தியாயங்களைக் கொண்ட இரண்டாவது பாகம் திருஞான சம்பந்தருக்கு ஸ்ரீ அருணாசலேச்வரர் தாமே தமது மகிமையைக் கூறிய வரலாற்றை விவரிக்கிறது. மற்ற மூன்று பாகங்களில் சிவ பக்தர்கள் அவசியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய தல மகிமை, தீர்த்த மகிமை, மூர்த்தி மகிமை, சிவபூஜை மகிமை, சிவ புண்ணிய மகிமை, பிரதக்ஷிண மகிமை, அன்னதான மகிமை, தீபதரிசன மகிமை, பாவநீக்கப் பிராயச்சித்தம் முதலிய அரிய விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

தெளிவான நடையில் பக்தர்களுக்குப் பெரிதும் பயன்பட வேண்டுமென்ற ஓரே நோக்கத்துடன் வெளியிடப்பட்டிருக்கும் இந்நூல் ஆஸ்திகர்கள் விரும்பிப் படிப்பதற்கு ஏற்றது.

பதிப்பாளர்: ஸ்ரீ டி. என் வெங்கடராமன் நிர்வாகி—தலைவர் ஸ்ரீ ரமணாச்ரமம், திருவண்ணாமலை, விலை ரூ. 2-50.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras.
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon